உ

கடவுள் துணை.

ஔவையார் அருளிச்செய்த

# ஆத்திசூடி

## மூலமும் உரையும்.

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1913

விலை பை 6

உ

கணபதிதுணை.

ஔவையார் அருளிச்செய்த

# ஆத்திசூடி

மூலமும் உரையும்




## காப்பு.

ஆத்தி சூடி யமர்ந்த தேவனை
ஏத்தி யேத்தித் தொழுவோ மியாமே.

(இதன் பொருள்.) ஆத்தி - திருவாத்திப்பூமாலையை, சூடி - தரிப்பவராகிய சிவபெருமான், அமர்ந்த - விரும்பிய, தேவனை - மூத்த பிள்ளையாகிய விநாயகக்கடவுளை, ஏத்தி ஏத்தி - துதித்துத் துதித்து, தொழுவோம் - வணங்குவோம், யாம் - நாங்கள் என்றவாறு.

தேவன் - பிள்ளை. ஏ - ஈற்றசை.

[கருத்து] விநாயகக் கடவுளை வணங்குவோம்.

## சூத்திரம்.

1. அறஞ்செய விரும்பு.

(இ-ள்.) அறம் - தருமத்தை, செய - செய்தற்கு, விரும்பு - நீ ஆசைகொள்ளு.

[க - து] தருமஞ் செய்யவேண்டும்.

## 2. ஆறுவது சினம்.

(இ - ள்) ஆறுவது-(உன்னுள்ளே) தணியவேண்டுவது, சினம்-கோபமே ஆம்.

[க - து.] கோபத்தை அடக்கவேண்டும்.

## 3. இயல்வது கரவேல்.

(இ - ள்.) இயல்வது - (கொடுப்பதற்கு) இசைவதை, கரவேல்-(நீ வறுமையினாலே இரப்பவர்களுக்கு) ஒளியாதே.

[க - து.] கொடுக்கக் கூடியதை ஒளிக்கலாகாது.

## 4. ஈவது விலக்கேல்.

(இ - ள்.) ஈவது - (தருமத்தைக் குறித்து ஒருவருக்கு ஒருவர்) கொடுப்பதை, விலக்கேல் - நீ தடுக்காதே.

[க - து] பிறர் கொடுப்பதைத் தடுக்காதே.

## 5. உடையது விளம்பேல்.

(இ - ள்.) உடையது-(உனக்கு) உள்ள பொருளை, விளம்பேல்-(நீ பிறர் அறியும்படி) சொல்லாதே.

[க - து.] உன் ஆஸ்தியை வெளியிடாதே.

## 6. ஊக்கமது கைவிடேல்.

(இ - ள்.) ஊக்கமது - (செய்தொழிலில்) மனஞ்சோராமையை, கைவிடேல் - நீ கைவிடாதே.

[க - து.] தைரியத்தை விடலாகாது.

## 7. எண்ணெழுத் திகழேல்.

(இ - ள்.) எண் - கணிதநூலையும், எழுத்து - இலக்கண நூலையும், இகழேல் - நீ இகழ்ந்து தள்ளாதே. [புகழ்ந்து கல் என்பது கருத்து.]



கணிதம் - கணக்கு.

[க - து.] கணக்கையும், இலக்கணத்தையும் கற்கவேண்டும்.

8. ஏற்ப திகழ்ச்சி.

(இ - ள்.) ஏற்பது - (ஒருவரிடத்திலே போய்) இரப்பது, இகழ்ச்சி - பழிப்பாகும்.

[க - து.] பிச்சை யெடுப்பது இழிவான காரியம்.

9. ஐய மிட்டுண்.

(இ - ள்.) ஐயம் - பிச்சையை, இட்டு - (இரப்பவர்களுக்குக்) கொடுத்து, உண் - நீயும் உண்ணு.

[க - து.] பிச்சை கொடுத்து உண்ணவேண்டும்.

10. ஒப்புர வொழுகு.

(இ - ள்.) ஒப்புரவு - உலக நடையை அறிந்து, ஒழுகு - (நீ அந்த வழியிலே) நட.

[க - து.] உலக வழக்கத்தை அறிந்து நடக்கவேண்டும்.

11. ஓதுவ தொழியேல்.

(இ - ள்.) ஓதுவது - (அறிவுநூல்களை) வாசிப்பதை, ஒழியேல் - (நீ மரணபரியந்தம்) விடாதே.

[க - து.] வாசிப்பதினின்றும் நீங்காதே. [எப்போதும் படிக்க வேண்டும்.]

12. ஔவியம் பேசேல்.

(இ - ள்.) ஔவியம் - பொறாமை வார்த்தைகளை, பேசேல் - (நீ ஒருபொழுதும்) பேசாதே.

[க - து.] பொறாமைப்பட லாகாது.

## 13. அஃகஞ் சுருக்கேல்.

(இ - ள்.) அஃகம் - தானிய விலையை, சுருக்கேல் - (நீ அதிக லாபத்துக்காகக்) குறையாதே.

[க - து.] தானியத்தைக் குறைத்து விற்கலாகாது.

## 14. கண்டொன்று சொல்லேல்.

(இ - ள்.) கண்டு - (ஒன்றைக்) கண்டு, ஒன்று - வேறொன்றை, சொல்லேல் - (நீ சாக்ஷியாகும்போது) சொல்லாதே. [கண்டபடியே சொல்லென்பது கருத்து.]

[க - து.] ஒன்றைப் பார்த்து வேறு ஒன்றைச் சொல்லாதே.

## 15. ஙப்போல் வளை.

(இ - ள்.) ஙப்போல் - ஙகரம் (தான் பிரயோசனமுள்ளதாய் இருந்து தன் வருக்கத்தைத் தழுவுதல்) போல, வளை - (நீ பிரயோசன முள்ளவனாய் இருந்து உன் இனத்தைத்) தழுவு.

[க - து.] ஙகரமானது அங்ஙனம் இங்ஙனம் உங்ஙனம் என்று சொல்லுக்குக் காரணமாய் வரும். அதின் வருக்கங்களாகிய ஙா ஙி ஙீ ஙு ஙூ ஙெ ஙே ஙை ஙொ ஙோ ஙௌ என்கிற பதினொன்றும் சொல் லுக்குக் காரணமாதல் இல்லை. ஆயினும், ஙகரத்தின் பொருட்டு இவைகளையும் நெடுங்கணக்கிலே வழங்குவார்கள்; அதுபோலவே, நீ கல்வி செல்வங்களினாலே பிறருக்கு உதவி செய்வாயாயின், அவர் உன்னைத் தழுவுவதன்றி உன்பொருட்டு உன் இனத்தாரையும் தழுவு வர் என்பதாம்.

## 16. சனிநீ ராடு.

(இ-ள்.) சனி - சனிக்கிழமைதோறும், நீர் ஆடு - (எண்ணெய் இட்டுக்கொண்டு) வெந்நீரிலே தலைமுழுகு.

புதன்கிழமையிலும் முழுகலாம். சனிநீர்-ஜனிக்கின்ற நீர், அதாவது ஆற்றுநீர், ஊற்றுநீர் முதலிய பரிசுத்தமான நீர் என்று பொருள் கொள்ளலும் ஒன்று. (ஜனித்தல்=பிறத்தல்.)

[க - து] சனிக்கிழமை தோறும் எண்ணெ யிட்டுக்கொண்டு தலைமுழுக வேண்டும்.

**17.** ஞயம்பட வுரை.

(இ - ள்.) ஞயம்பட - (பேசுஞ்சொல்லிலே) இன்பம் விளையும்படி, உரை - (நீ யாவரோடும்) பேசு.

நயம் என்பது ஞயம் எனப் போலியாயிற்று.

[க - து.] யாவரும் விரும்பும்படி பேசு.

**18.** இடம்பட வீடெடேல்.

(இ - ள்.) இடம் - இடமானது, பட - (அளவுக்கு மேற்பட்டு வெறுமையாய்க்) கிடக்கும்படி, வீடு - வீட்டை, எடேல் - (நீ பெரிதாகக்) கட்டாதே.

[க - து] வீட்டை அதிகமும் பெரிதாகக் கட்டலாகாது.

**19.** இணக்கமறிந் திணங்கு.

(இ - ள்.) இணக்கம் - (சினேகத்துக்கு ஏதுவாகிய) நற்குண நற்செய்கைகளை, அறிந்து - தெளிந்து, இணங்கு - (பின் ஒருவனோடு) சினேகஞ்செய்.

[க - து] நல்ல குணவான்களோடு சிநேகஞ்செய்.

**20.** தந்தைதாய்ப் பேண்.

(இ - ள்.) தந்தை - (நீ உன்) பிதாவையும், தாய் - மாதாவையும், பேண் - (எப்போதும் பூசித்துக்) காப்பாற்று.

[க - து] மாதா பிதாக்களைக் காப்பாற்றவேண்டும்.

**21.** நன்றி மறவேல்.

(இ - ள்.) நன்றி - (ஒருவர் உனக்குச் செய்த) உபகாரத்தை, மறவேல் - (நீ ஒருபோதும்) மறவாதே.

[க - து.] ஒருவர் செய்த உதவியை என்றும் மறக்கலாகாது.

**22.** பருவத்தே பயிர்செய்.

(இ - ள்.) பயிர் - பயிர்களை, பருவத்தே - (அது அது விளையும்) பக்குவகாலத்திலே, செய் - (வேண்டும் முயற்சியிலே வழுவாமல்) இடு.

பயிருக்கு வேண்டும் முயற்சிகளாவன:—உழுதல், எரு இடுதல், களைபிடுங்குதல், நீர் பாய்ச்சல், காத்தல் என்கிற ஐந்தும் ஆம்.

[க - து.] அந்தந்தத் தானியங்கள் விளையுங் காலத்திலே பயிர் செய்யவேண்டும்.

**23.** மன்றுபறித் துண்ணேல். *

(இ - ள்.) மன்று - தருமசபையிலே இருந்துகொண்டு, பறித்து - (வழக்குத் தீர்ப்புக்கு வரும் குடிகளுடைய பொருளைக்) கவர்ந்து, உண்ணேல் - நீ சீவனம் பண்ணாதே.

[க - து.] பிறர் பொருளை அபகரிக்கலாகாது.

**24.** இ, யல்பலா தனசெயேல்.

(இ - ள்.) இயல்பு அலாதன - (தருமநூலுக்குப்) பொருத்தமல்லாதவைகளை, செயேல் - நீ செய்யாதே.

[க - து.] தகாத காரியங்களைச் செய்யலாகாது.

---

* பொது இடங்களைக் கவர்ந்து நீ சீவனம் பண்ணாதே என்பதும் ஒருபொருள். மண்பறித் துண்ணேல் என்றும் பாடங் கொள்வர்.

**25.** அ, ரவ மாட்டேல்.

(இ - ள்.) அரவம் - (நஞ்சையுடைய) பாம்புகளை, ஆட்டேல் - (நீ பிடித்து) ஆட்டாதே.

[க - து.] பாம்போடு சகவாசம் செய்யலாகாது.

**26.** இ, லவம்பஞ் சிற்றுயில்.

(இ-ள்.) இலவம்பஞ்சில் - இலவம்பஞ்சு மெத்தையிலே, துயில் - நீ நித்திரை செய்.

[க - து.] மெதுவான மெத்தையில் நித்திரை செய்யவேண்டும்.

**27.** வஞ்சகம் பேசேல்.

(இ - ள்.) வஞ்சகம் - கபட வார்த்தைகளை, பேசேல் - (நீ ஒருபோதும்) பேசாதே.

[க - து.] கபடமான வார்த்தைகளைச் சொல்லலாகாது.

**28.** அ, ழகலா தனசெயேல்.

(இ - ள்.) அழகு அலாதன - (நீ துன்பப்படவந்த காலத்தும்) இழிவுள்ள செயல்களை, செயேல் - செய்யாதே.

அழகுடையன உயர்வுள்ள செயல்கள் ஆதலால், அழகலாதன இழிவுள்ள செயல்கள் என்பதாம்.

[க - து.] அயோக்கியமான செய்கைகளைச் செய்யலாகாது.

**29.** இ, ளமையிற் கல்.

(இ - ள்.) இளமையில் - இளமைப் பிராயத்திலே, கல் - (நீ வித்தையைக்) கற்றுக்கொள்.

[க - து.] சிறுவயதிலேயே வாசிக்கவேண்டும்.

**30.** அறனை மறவேல்.

(இ - ள்.) அறனை - (செய்யத்தக்க) தருமத்தை, மறவேல் - (நீ ஒருபோதும்) மறவாதே.

[க - து.] தருமத்தை எப்போதும் மறக்கலாகாது.

**31.** அனந்த லாடேல்.

(இ - ள்.) அனந்தல் - நித்திரையை, ஆடேல் - (நீ அதிகமாகச்) செய்யாதே.

[க - து.] அதிகமாகத் தூங்கலாகாது.

**32.** கடிவது மற.

(இ - ள்.) கடிவது - (ஒருவரைச்) சினந்து பேசுவதை, மற - நீ மறந்துவிடு.

[க - து.] கடூரமாகப் பேசலாகாது.

**33.** காப்பது விரதம்.

(இ - ள்.) காப்பது - (உயிர்களுக்குத் தீங்கு செய்யாமல் அவை களைக்) காப்பாற்றுவதே, விரதம் - விரதமாம்.

[க - து.] விரதங்களை அனுசரிக்கவேண்டும்.

**34.** கிழமைப் படவாழ்.

(இ-ள்.) கிழமைப்பட - (உன்னிடத்தில் உள்ள பொருள் பிறருக் கும்) உரிமைப்படும்படி, வாழ் - நீ வாழு.

[க-து] உன் பொருள் பிறருக்கு உரியதாயிருக்க வாழவேண்டும்.

**35.** கீழ்மை யகற்று.

(இ - ள்.) கீழ்மை - கீழ்மையாகிய குணத்தை, அகற்று - நீ நீக்கு. [கீழ்மை - இழிவு.]

[க - து.] இழிவான காரியங்களை நீக்கவேண்டும்.

36. குணமது கைவிடேல்.

(இ - ள்.) குணமது - (மேலாகிய) குணத்தை, கைவிடேல் - (நீ எப்போதும்) கைவிடாதே.

[க - து.] மேலான காரியங்களை விட்டுவிடலாகாது.

37. கூடிப் பிரியேல்.

(இ - ள்.) கூடி - (நல்லவரோடு) சினேகித்து, பிரியேல் - (நீ பின் அவரை விட்டு) நீங்காதே.

[க - து.] சிநேகஞ் செய்தபின் பிரியலாகாது.

38. கெடுப்ப தொழி.

(இ - ள்.) கெடுப்பது - பிறருக்குக் கேடுசெய்வதை, ஒழி - (நீ எக்காலத்தும்) விட்டுவிடு.

[க - து.] பிறருக்கு கெடுதி செய்யலாகாது.

39. கேள்வி முயல்.

(இ-ள்.) கேள்வி - (கற்றவர் சொல்லும் நூற்பொருளைக்) கேட்பதற்கு, முயல் - நீ முயற்சி செய்.

[க - து.] பெரியோர் சொல்லைக் கேட்க முயலவேண்டும்.

40. கைவினை கரவேல்.

(இ - ள்) கைவினை - (உனக்குத் தெரிந்த) கைத்தொழிலை, கரவேல் - (நீ சமயத்திலே) ஒளியாதே.

[க - து] தெரிந்த கைத்தொழிலை மறைக்கலாகாது.

41. கொள்ளை விரும்பேல்.

(இ - ள்.) கொள்ளை - (பிறருடைய பொருளைக்) கொள்ளையிடுதற்கு, விரும்பேல் - (நீ ஒருகாலத்தும்) ஆசைப்படாதே.

[க - து.] பிறர் சொத்தைக் கொள்ளையிடலாகாது.

## 42. கோதாட் டொழி.

(இ - ள்.) கோது - குற்றம்பொருந்திய, ஆட்டு - விளையாட்டை, ஒழி - நீ நீக்கு.

[க - து.] கெட்ட ஆட்டங்களில் பயிலலாகாது.

## 43. சக்கர நெறிநில்.

(இ - ள்.) சக்கரநெறி - (அரசனுடைய ஆஞ்ஞையாகிய) சக்கரம் செல்லும் வழியிலே, நில் - (நீ அடங்கி) நில். [அரசனுடைய கட்டளைக்கு அமைந்து நட என்பது கருத்து.]

[க - து.] இராஜாங்க அதிகாரத்துக்கு அடங்கி நடக்கவேண்டும்.

## 44. சான்றோ ரினத்திரு.

(இ-ள்.) சான்றோர் - அறிவினாலே நிறைந்தவர்களுடைய, இனத்து - கூட்டத்திலே, இரு - (நீ எந்நாளும் சேர்ந்து) இரு.

[க - து.] பெரியோர் கூட்டத்திற் சேர்ந்திருக்கவேண்டும்.

## 45. சித்திரம் பேசேல்.

(இ - ள்.) சித்திரம் - மெய்போலத் தோன்றும் பொய்மொழிகளை, பேசேல் - நீ பேசாதே.

[க - து.] யாவரும் அதிசயிக்கும்படியாகப் பொய்களைச் சொல்லலாகாது.

## 46. சீர்மை மறவேல். *

(இ - ள்.) சீர்மை - புகழுக்கு ஏதுவாகிய குணத்தை, மறவேல் - நீ மறந்துவிடாதே.

[க - து.] மேன்மையான குணத்தைக் கைவிடலாகாது.

---

* சிறப்பான காரியங்களை நீ மறந்துவிடாதே என்றும் பொருள் கூறலாம்.

47. சுளிக்கச் சொல்லேல்.

(இ - ள்.) சுளிக்க - (கேட்பவர்) கோபிக்கும்படியாக, சொல்லேல் - (நீ ஒன்றையும்) பேசாதே.

[க - து.] கோபத்துக்குக்காரணமான பேச்சைப் பேசக்கூடாது.

48. சூது விரும்பேல்.

(இ - ள்.) சூது - சூதாடலை, விரும்பேல் - (நீ ஒருபோதும்) விரும்பாதே.

[க - து.] சூதாடக்கூடாது.

49. செய்வன திருந்தச்செய்.

(இ-ள்.) செய்வன-செய்யுங் காரியங்களை, திருந்த-செவ்வையாக, செய் - நீ செய்.

[க - து.] செய்யுங் காரியங்களைச் சரியாகச் செய்யவேண்டும்.

50. சேரிட மறிந்துசேர்.

(இ-ள்.) சேர் இடம்-அடையத்தகும் (நன்மையாகிய) இடத்தை, அறிந்து - தெரிந்து, சேர் - நீ அடை.

[க - து.] தகாத இடத்தைச் சேர்ந்தாற் கெடுதிவரும்.

51. சையெனத் திரியேல்.

(இ - ள்.) சை என-(பெரியோர் உன்னைச்) சீ என்று அருவருக்கும்படி, திரியேல் - (நீ துட்டனாய்த்) திரியாதே.

[க - து.] பிறர் இகழும்படி நடக்கலாகாது.

52. சொற்சோர்வு படேல்.

(இ - ள்.) சொல்-(நீ பிறரோடு பேசும்) சொற்களிலே, சோர்வு படேல் - மறதிபடப் பேசாதே.

[க - து.] சொல்லவேண்டுவதை மறவாமற் சொல்லவேண்டும்.

53. சோம்பித் திரியேல்.

(இ-ள்.) சோம்பி - (நீ செய்யவேண்டும் முயற்சியைச் செய்யாமல்) சோம்பல்கொண்டு, திரியேல் - (வீணாகத்) திரியாதே.

[க - து.] எந்த வேலையிலும் சோம்பலாகாது.

54. தக்கோ னெனத்திரி.

(இ - ள்.) தக்கோன் என - (உன்னைப் பெரியோர்கள்) யோக்கியன் என்று புகழும்படி, திரி - நீ நட.

[க - து.] யோக்கியன் எனப் பேரெக்கவேண்டும்.

55. தானமது விரும்பு.

(இ - ள்.) தானமது - (சற்பாத்திரங்களிலே) தானஞ்செய்தலை, விரும்பு - நீ விரும்பு.

[க - து.] சற்பாத்திரத்தில் தானஞ்செய்யவேண்டும்.

56. திருமாலுக் கடிமைசெய்.

(இ - ள்.) திருமாலுக்கு - விஷ்ணுவுக்கு, அடிமை செய் - நீ தொண்டு பண்ணு.

[க - து.] விஷ்ணுவைத் தொழவேண்டும்.

57. தீவினை யகற்று.

(இ - ள்.) தீவினை - பாவச்செயல்களை, அகற்று - (நீ எப்பொழுதுஞ் செய்யாமல்) நீக்கு.

[க - து.] பாவத் தொழில்களைச் செய்யக்கூடாது.

58. துன்பத்திற் கிடங்கொடேல்.

(இ - ள்.) துன்பத்திற்கு - (தொழில்செய்யும்போது முயற்சியினாலே வரும் சரீரப் பிரயாசத்தால் ஆகிய) துன்பத்துக்கு, இடம் கொ

டேல் - (நீ சிறிதாயினும்) இடங்கொடாதே. [அத்துன்பத்தை இன்பமென்று கொண்டு முயற்சியை விடாது செய் என்பது கருத்து.]

[க - து] துன்பத்துக்குக் காரணமானவைகளைச் செய்யக் கூடாது.

59. தூக்கி வினைசெய்.

(இ - ள்.) தூக்கி-(முடிக்கும் உபாயத்தை) ஆராய்ந்து, வினை - ஒருதொழிலை, செய் - (நீ அதன்பின்பு) செய்.

[க - து] யாதொரு காரியத்தையும் யோசித்துச் செய்யவேண்டும்.

60. தெய்வ மிகழேல்.

(இ - ள்.) தெய்வம் - கடவுளை, இகழேல் - (நீ மறந்தாயினும்) இகழாதே.

[க - து.] கடவுளை நிந்திக்கலாகாது.

61. தேசத்தோ டொத்துவாழ்.

(இ - ள்.) தேசத்தோடு - (நீ வசிக்கும்) தேசத்திலுள்ளவர்களுடனே, ஒத்து - (பகையில்லாமல்) ஒத்து, வாழ் - வாழு.

[க - து.] தேச ஆசாரப்படி நடக்கவேண்டும்.

62. தையல்சொற் கேளேல்.

(இ - ள்.) தையல் - (உன்) மனைவியுடைய, சொல் - சொல்லை, கேளேல் - நீ கேட்டு நடவாதே.

[க - து.] மனைவியாற் சொல்லுந் தீயமொழிகளைக் கேட்கலாகாது.

63. தொன்மை மறவேல்.

(இ - ள்.) தொன்மை - பழமையாகிய சிநேகத்தை, மறவேல்-நீ மறந்து விடாதே.

[க - து.] பழைய சிநேகத்தை விடலாகாது.

64. தோற்பன தொடரேல்.

(இ - ள்.) தோற்பன-தோல்வியடையக்கூடிய வழக்குக்களிலே, தொடரேல் - நீ சம்பந்தப்படாதே.

[க - து.] தப்பான வியாச்சியங்களில் பிரவேசிக்கக்கூடாது.

65. நன்மை கடைப்பிடி.

(இ - ள்.) நன்மை - புண்ணியத்தையே, கடைப்பிடி - (நீ எந்நாளும் விடாமல்) உறுதியாகப் பிடி.

[க - து.] நன்மையான காரியங்களைச் செய்யவேண்டும்.

66. நாடொப் பனசெய்.

(இ - ள்.) நாடு - உன் நாட்டில் உள்ளோர் பலரும், ஒப்பன - ஒத்துக்கொள்ளத்தக்க நல்ல காரியங்களை, செய் - நீ செய்.

[க - து.] நாட்டிலுள்ளார் சரி எனக்கொள்ளும் காரியங்களைச் செய்யவேண்டும்.

67. நிலையிற் பிரியேல்.

(இ - ள்.) நிலையில் - (நீ நிற்கின்ற உயர்ந்த) நிலையிலே நின்று, பிரியேல் -(ஒருபோதும்) நீங்காதே.

[க - து.] இருக்கும் நிலையிலிருந்து நீங்கலாகாது.

68. நீர்விளை யாடேல்.

(இ - ள்.) நீர் - (ஆழம் உள்ள) நீரிலே, விளையாடேல்-(நீ நீந்தி) விளையாடாதே.

[க - து.] ஆழமான கிணறு, குளம், ஏரி, மடு முதலியவைகளில் நீந்தி விளையாடக்கூடாது.

69. நுண்மை நுகரேல்.

(இ - ள்.) நுண்மை - (நோயைத் தருகிற) சிற்றுண்டிகளை, நுகரேல் - நீ உண்ணாதே.

[க - து.] சிறுதீனி தின்பதால் நோயுண்டாகுமாதலால் அதைத் தின்னலாகாது.

70. நூல்பல கல்.

(இ - ள்.) நூல் பல - (அறிவை வளர்க்கிற) நூல்கள் பலவற்றையும், கல் - (நீ மரணபரியந்தம்) படி.

[க - து.] அறிவு நூல்களை வாசித்தறியவேண்டும்.

71. நெற்பயிர் விளை.

(இ - ள்.) நெற்பயிர் - நெல்லுப்பயிரை, விளை - (நீ வேண்டிய முயற்சிசெய்து) விளைவி.

[க - து.] நெல்லுப்பயிர் பயிரிடவேண்டும்.

72. நேர்பட வொழுகு.

(இ - ள்.) நேர்பட - (உன் ஒழுக்கம் கோணாமல்) செவ்வைப் பட, ஒழுகு - நீ நட.

[க - து.] விதித்த வழியிலே நடக்கவேண்டும்.

73. நைவினை நணுகேல். *

(இ - ள்.) நை - (பிறர்) கெடத்தக்க, வினை - தீவினைகளை, நணுகேல் - (நீ ஒருபோதும்) சாராதே.

[க - து.] ஒருவருக்குக் கேட்டைத்தரும் செய்கைகளைச் செய்யலாகாது.

74. நொய்ய வுரையேல்.

(இ - ள்.) நொய்ய-(பயன் இல்லாத) அற்பவார்த்தைகளை, உரையேல் - (நீ ஒருபோதும்) சொல்லாதே.

[க - து.] அற்பமான வார்த்தைகளைச் சொல்லலாகாது.

---

* நைவன நணுகேல் என்றும் பாடங்கொள்வர்.

75. நோய்க் கிடங்கொடேல்.

(இ - ள்.) நோய்க்கு - வியாதிகளுக்கு, இடங்கொடேல் - (அவ பத்தியம் முதலானவைகளைச் செய்து) இடங்கொடாதே.

[க - து.] நோய் உண்டாவதற்குக் காரணமானவைகளைச் செய்யக்கூடாது.

76. பழிப்பன பகரேல்.

(இ - ள்) பழிப்பன - (அறிவுடையவர்களாலே) பழிக்கப்படுவனவாகிய இழிசொற்களை, பகரேல் - நீ பேசாதே.

இழிசொற்களாவன:—பொய், குறளை, கடுஞ்சொல், பயனில் சொல் என்கிற நான்குமாம்.

[க - து.] பிறர் பழிக்கும்படி பேசாதே.

77. பாம்பொடு பழகேல்.

(இ - ள்.) பாம்பொடு - (பால்கொடுத்தவருக்கும் விஷத்தைக் கொடுக்கிற) பாம்பைப்போல்பவர்களுடனே, பழகேல் - நீ சகவாசஞ் செய்யாதே.

[க - து.] பாம்பைப்போன்றவரோடு சிநேகிக்கக்கூடாது.

78. பிழைபடச் சொல்லேல்.

(இ - ள்.) பிழைபட - வழுக்கள் உண்டாகும்படி, சொல்லேல் - (நீ ஒன்றையும்) பேசாதே.

[க - து.] குற்றம் உண்டாகும்படி பேசாதே.

79. பீடு பெறநில்.

(இ - ள்.) பீடு - பெருமையை, பெற - பெறும்படியாக, நில் - (நீ நல்லவழியிலே) நில்.

[க-து.] பெருமை யுண்டாகும்படி நல்லவழியிலிருக்கவேண்டும்.

80. புகழ்ந்தாரைப் போற்றிவாழ்.

(இ - ள்.) புகழ்ந்தாரை - உன்னைத் துதிசெய்து அடுத்தவரை, போற்றி - (கைவிடாமற்) காப்பாற்றி, வாழ் - நீ வாழு.

[க - து.] அடுத்தவர்களைக் காப்பாற்றவேண்டும்.

81. பூமி திருத்தியுண்.

(இ - ள்.) பூமி - உன் விளைநிலத்தை, திருத்தி - சீர்திருத்திப் பயிர்செய்து, உண் - நீ உண்ணு.

[க - து.] பயிர்செய்து சீவனஞ் செய்யவேண்டும்.

82. பெரியாரைத் துணைக்கொள்.

(இ-ள்.) பெரியாரை-(அறிவிலேசிறந்த) பெரியோரை, துணைக் கொள் - நீ உனக்குத் துணையாகப் பேணிக்கொள்.

[க - து ] அறிவுடையோரைத் துணையாகக் கொள்ளவேண்டும்.

83. பேதைமை யகற்று.

(இ - ள்.) பேதைமை-(பிறவிக்குக் காரணமாகிய) அஞ்ஞானத் தை, அகற்று - (நீ மெஞ்ஞானத்தினாலே) போக்கு.

[க - து.] அறிவின்மை நீங்கி அறிவுடையோனாக வேண்டும்.

84. பையலோ டிணங்கேல்.

(இ-ள்.) பையலோடு-சிறுபிள்ளையோடு, இணங்கேல்-நீகூடாதே.

[க - து.] சிறு பிள்ளையோடு சிநேகஞ் செய்யக்கூடாது.

85. பொருடனைப் போற்றிவாழ்.

(இ - ள்.) பொருள்தனை - திரவியத்தை, போற்றி - (மேன் மேலும் உயரும்படி) காத்து, வாழ் - நீ வாழு.

[க - து.] சொத்துக்களைக் காப்பாற்றவேண்டும்.

86. போர்த்தொழில் புரியேல்.

(இ - ள்.) போர் - சண்டையாகிய, தொழில் - தொழிலை, புரியேல் - நீ செய்யாதே.

[க - து.] சண்டை செய்யலாகாது.

87. மனந்தடு மாறேல்.

(இ - ள்.) மனம் - மனசு, தடுமாறேல் - (நீ யாதொருவிஷயத்திலும்) கலங்காதே.

[க - து.] எந்த விஷயத்திலும் மனோதைரியத்தை விடலாகாது.

88. மாற்றானுக் கிடங்கொடேல்.

(இ - ள்.) மாற்றானுக்கு - பகைவனுக்கு, இடம் கொடேல் - உன்னை நெருக்கிப் பின் வருத்தும்படியாக நீ) இடங்கொடாதே.

[க - து.] பகைவனுக்கு இடங்கொடுக்கக்கூடாது.

89. மிகைபடச் சொல்லேல்.

(இ - ள்.) மிகை பட - (சொற்கள் சுருங்காமல்) அதிகப்படும்படி, சொல்லேல் - நீ சொல்லாதே.

[க - து] கற்றோர்முன் அதிகமாகப் பேசக்கூடாது.

90. மீதூண் விரும்பேல்.

(இ - ள்.) மீது ஊண் - அதிக போசனத்துக்கு, விரும்பேல் - நீ ஆசைப்படாதே.

[க - து.] பெருந்திண்டி யாகாது.

91. முனைமுகத்து நில்லேல்.

(இ - ள்.) முனை முகத்து - சண்டைமுகத்திலே, நில்லேல் - (நீ போய்) நில்லாதே.

[க - து] சண்டைசெய்யு மிடத்திற்குப் போகாதே.

92. மூர்க்கரோ டிணங்கேல்.

(இ - ள்.) * மூர்க்கரோடு - அறிவில்லாதவர்களுடனே, இணங்கேல் - நீ சினேகம் பண்ணாதே.

[க - து.] மூடரோடு சேரக்கூடாது.

93. மெல்லினல்லா டோள்சேர். ‡

(இ - ள்.) மெல் - மெல்லிய, இல் - (உன்) மனையாட்டியாகிய, நல்லாள் - பெண்ணினுடைய, தோள் - தோள்களையே, சேர் - நீ புணர்.

இதனாலே, பிறர்மனைவியர் பரத்தையர் என்கிற இவர்களுடைய தோள்களை ஒருபோதும் புணராதே என்பது பெறப்படும்.

[க - து.] பெண்சாதியோடு சுகித்திருக்கவேண்டும். பிறர்மனைவியரையும் பொதுமகளிரையுஞ் சேரக்கூடா தென்பதாம்.

94. மேன்மக்கள் சொற்கேள்.

(இ - ள்.) மேன்மக்கள்-மேன்மையாகிய மனிதருடைய, சொல்-சொல்லை, கேள் - (நீ கேட்டு) நட.

[க - து.] பெரியோர் சொற்களைக் கேட்கவேண்டும்.

95. மைவிழியார் மனையகல்.

(இ - ள்.) மை விழியார் - மைதீட்டிய கண்களையுடைய வேசிகளது, மனை - வீட்டை, அகல் - (நீ ஒருபோதும் கிட்டாமல்) அகன்றுபோ.

[க - து ] வேசிவீட்டுக்குப் போகக்கூடாது.

---

* "மூர்க்கரும் முதலையுங் கொண்டது விடா" என்றதனால் மூர்க்கர் பிடிவாதக்காரருமாம்.

‡ "மெல்லியா டோள்சேர்" என்ற பாடம் பொதுப்படப் பெண்ணை உணர்த்தலாற் சிறப்பின்று.

96. மொழிவ தறமொழி.

(இ - ள்.) மொழிவது - சொல்லப்படும் பொருளை, அற - (சந்தேகம்) நீங்கும்படி, மொழி - நீ சொல்லு.

[க - து.] சொல்வதைச் சந்தேகமில்லாமல் சரியாகச் சொல்ல வேண்டும்.

97. * மோகத்தை முனி.

(இ - ள்.) மோகத்தை - (நிலையாத பொருள்களின்மேலதாகிய) ஆசையை, முனி - நீ வெறுத்து விலக்கு.

[க - து.] மோகத்தை யடக்கவேண்டும்.

98. வல்லமை பேசேல்.

(இ - ள்.) வல்லமை-(உன்னுடைய) சாமர்த்தியத்தை, பேசேல் - (நீ புகழ்ந்து) பேசாதே.

[க - து.] ஒருவன் தனக்குள்ள வல்லமையைப் புகழ்ந்து பேசக் கூடாது.

99. வாதுமுற் கூறேல்.

(இ - ள்.) வாது - வாதுகளை, முன் - (பெரியோர்) முன்னே, கூறேல் - நீ பேசாதே.

[க - து.] வீண்தர்க்கம் பேசலாகாது.

100. வித்தை விரும்பு.

(இ - ள்.) வித்தை- கல்விப்பொருளையே, விரும்பு - நீ விரும்பு.

[க - து.] கல்வியை விருப்பத்தோடு கற்கவேண்டும்.

---

* மோகம் காமம் என்பன விருப்பத்தின் பரியாயநாமங்கள் என்பதை "***காம - மிச்சை பெட்பு மோக மேட்டை" என்னும் பிங்கலந்தைச் சூத்திரத்தாலறிக.

101. வீடு பெறநில்.

(இ - ள்.) வீடு - மோக்ஷத்தை, பெற - அடையும்படி, நில் - (அதற்குறிய ஞானவழியிலே) நில்.

[க-து.] மோக்ஷத்தை யடையும்படியான வழியிலே நடக்கவேண்டும்.

102. உத்தமனாயிரு.

(இ - ள்.) உத்தமனாய் - நற்குண நற்செய்கைகளினாலே எல்லாரிலும் மேலானவனாகி, இரு - நீ இரு.

[க - து.] நல்லவனாக இருக்கவேண்டும்.

103. ஊருடன் கூடிவாழ்.

(இ - ள்.) ஊருடன் - ஊரவர்களுடனே, கூடி - (சுபாசுபகன்மங்களிலே) அளாவி, வாழ் - நீ வாழு.

[க - து.] ஊரிலுள்ளவருடன் கலந்து வாழு.

104 வெட்டெனப் பேசேல்.

(இ - ள்.) வெட்டு என - கத்திவெட்டைப்போல, பேசேல் - (நீ ஒருவரோடுங் கடினமாகப்) பேசாதே.

[க - து.] கடூரமாகப் பேசலாகாது.

105. வேண்டி வினைசெயேல்.

(இ - ள்.) வேண்டி - (யாதொரு பிரயோசனத்தை) விரும்பி, வினை - தீவினையை, செயேல் - (நீ ஒருவருக்கும்) செய்யாதே.

[க - து.] கெட்ட செய்கைகளை மனப்பூர்வமாகச் செய்யலாகாது.

106. வைகறைத் துயிலெழு.

(இ - ள்.) வைகறை - (நீ தினந்தோறும்) விடியற்காலத்திலே, துயில் - நித்திரையை விட்டு, எழு - எழுந்திரு.

[க - து.] அதிகாலையிலேயே நித்திரை நீங்கி எழுந்திருக்கவேண்டும்.

**107.** ஒன்னாரைத் தேறேல். *

(இ - ள்.) ஒன்னாரை - பகைவர்களை, தேறேல்-(நீ ஒருபோதும்) நம்பாதே.

[க - து.] பகைவரோடு சேரலாகாது.

**108.** ஓரஞ் சொல்லேல்.

(இ - ள்.) ஓரம் - பக்ஷபாதத்தை, சொல்லேல் - (நீ யாதொரு வழக்கிலும்) பேசாதே.

[க - து.] பக்ஷபாதமாகப் பேசலாகாது.

ஆத்திசூடி மூலமும் உரையும்
முற்றுப்பெற்றது.

---

# விவேக விளக்கம்.

க. கிடைத்தற்கரிய இம்மானிடதேகம் நமக்குக் கிடைத்தது, நாம் கடவுளை வணங்கி முத்தியின்பம் பெறும்பொருட்டேயாம்.

உ. புண்ணியவசத்தாற் கிடைத்த இந்தத் தேகம் இன்ன காலத்திலே நீங்கும் என்பது நமக்குத் தெரியாமையால், நாம் எக்காலத்திலும் கடவுளை வழிபடல் வேண்டும்.

ங. கடவுளையும், அவரை வணங்கும் வழியையும், அதனால் அடையும் பயனையும் உனக்குப் போதிக்கும் அருள்வடிவாகிய ஆசாரியர் ஒருவரே உன் உயிருக்குத் துணையாயுள்ளவர்; ஆதலால், அவரை ஓர் பொழுதேனும் மறவாதே.

ச. ஈசுரபத்தியும் நல்லொழுக்கமும் உள்ள பிதா மாதாக்களை உடையதாயிருத்தலே எவ்வகைச் செல்வத்தினுஞ் சிறந்த செல்வம்.

---

* தேறேல் என்பதைச் சேரேல் எனப் பாடங்கொள்வாருமுளர்.

ரு. விரைவாகவேனும் மெதுவாகவேனும், நல்வினை இன்பத்தையும், தீவினை துன்பத்தையும் வருவிக்கும்.

சு. நன்மை செய்தற்குச் சமயம் வாய்க்கும்பொழுது செய்யா தொழிவையாகில், பின் ஒருகாலத்தில் அது வாய்ப்பது அரிது.

எ. சோம்பலே தீமைக்கும் துன்பத்துக்கும் பிறப்பிடம் ஆகையானே "சோம்பரென்பவர் தேம்பித்திரிவர்" என மூதுரையாட்டியாரு மொழிந்திருக்கின்றனர்.

அ. தங்கள் நயத்தின்பொருட்டு மாத்திரம் அன்றி, பிறர் நயத்தின்பொருட்டும் பிரயாசைப்பட்டவர்களே உத்தமர்.

கூ. எவ்வளவு அதிக இரகசியமாகச் செய்யப்படும் நன்மைகளையும், முற்றறிவு உடைய கடவுள் அறிந்து, பயன் அளிப்பார்; பிறர் அறிந்தென்! அறியாதிருந்தென்!

க0. தன்பொருட்டு மாத்திரம் பிரயாசைப்படுபவன் அற்ப இன்பத்தை மாத்திரமே அனுபவிப்பான்; பிறர்பொருட்டும் பிரயாசைப் படுபவன் மேலான இன்பத்தை அனுபவிப்பான்.

கக. அறிவும் அதனுல் ஆகிய நற்குண நற்செய்கைகளும் உள்ள சான்றோர்களாலே நன்கு மதிக்கப்படுவதற்கு யோக்கியனுய் இரு.

கஉ. நீ பிறர்க்குச் செய்த உபகாரங்களை நீயே எடுத்துப் புகழ்தல் தக்கது அன்று.

கங. அடக்கம் உடைமை பாலியர்களுக்குச் சிறந்த ஆபரணம்.

கச. நாம் எவ்வகைச் செல்வங்களையும் இழந்தாலும் நல்லொழுக்கத்தை மாத்திரம் இழத்தல் கூடாது.

கரு. சுசியுடைமை சரீரத்திற்கு ஆரோக்கியத்தையும், மனசுக்கு இன்பத்தையும் வளர்விக்கும்.

கசு. நீ பிறர்க்கு ஒன்றை வாக்குத்தத்தம் செய்யுமுன், அது உன்னுல் இயலுமோ இயலாதோ என ஆராய்ந்துசெய்.

கஎ. இளமையிலேயே ஒருவன் பழகிய பழக்கம் நன்றேயாயினும், தீதேயாயினும், அதுவே பெரும்பான்மையும் மரணபரியந்தம் அவனைத் தொடரும்.

கஅ. நமக்கு நல்லொழுக்கமும் புகழும் இன்பமும் வருதல் தவிர்தல்கள், முறையே பெரும்பான்மையும், நமது நற்சார்பு தீச்சார்புகளால் ஆகும்.

கக. நாம் இரகசியமாகக் குற்றம் செய்யும்போது, பிறர் நம்மைக் கண்டியாவண்ணம் தப்பித்துக்கொள்வோமாயினும், நம்முடைய மனம் நம்மைக் கண்டியாவண்ணம் தப்பித்துக்கொள்ளமாட்டோமே.

உ௦. நாம் சிறு துன்பங்களைச் சகிக்கப் பயிலல்வேண்டும்; பயில்வோமாகில், மேலே பெருந்துன்பங்கள் நேரிடின் அதையும் சகிக்க வல்லர் ஆவோம்.

உக. உள்ளது போதும் என்று மகிழ்ந்திருக்கும் மனமே குறைவற்ற களஞ்சியம்.

உஉ. வருவாய்க்குத் தக்க வாழ்க்கை இல்லாதபொழுது செல்வராவார் ஒருவரும் இலர்; இது உள்ளபொழுது, வறியராவார் மிக அரியர்.

உ௩. கடன்படும் செல்வர்களினும், கடன்படா வறியர்களே மிகுந்த சுகம் உடையவர்கள்.

உ௪. கோள் கேட்பவன் இல்லையாயின், கோள் சொல்பவனும் இல்லை. கோள்கேட்பது கொடிது; கோள் சொல்வது அதனினும் கொடிது.

உ௫. பிறருக்கு வரும் கல்வி செல்வங்களைக் காணும்பொழுது, பொறாமை இன்றி மகிழ்தலே நன் மனசுக்கு அழகு.

உ௬. நாம் செய்த குற்றங்களை நாமே வெளிப்படுத்தி, பச்சாத்தாபப் படுவோமாயின், அறிவினால் மூத்த பெரியோர்கள் நம்மேல் இரங்கி, அவைகளைப் பொறுத்துக் கொள்வார்கள்.

உ௭. நம்முடைய குற்றங்கள் இவைகள் என்று நமக்குத் தெரிவித்து, அவைகளை நீக்கி நடக்கும் நெறியை நமக்கும் போதித்தவர்களே நமக்கு உத்தம சிநேகிதர்கள்.

உ௮. நம்மேல் அன்பு இல்லாதவர்கள் மேலும், நாம் அன்பு உள்ளவர்களாகியே இருத்தல்வேண்டும்.

உ௯. பிறர் உனக்குச் செய்த குற்றங்களினாலே உனக்குக் கோபம் தோன்றும்பொழுது, நீ பிறருக்குச் செய்த குற்றங்களை நினைப்பாயாகில், அது அடங்கிவிடும்.

௩௦. நம்முடைய செயல்கள் அனைத்தும் சாஸ்திரத்துக்கும் யுத்திக்கும் பொருத்தமாயிருக்கவேண்டும்.

உ

கடவுள் துணை.

ஔவையார் அருளிச்செய்த

# கொன்றைவேந்தன்

## மூலமும் உரையும்.

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1913

விலை பை 9

உ

கடவுள் துணை.

ஔவையார் அருளிச்செய்த

# கொன்றைவேந்தன்

## மூலமும் உரையும்.

### காப்பு.

கொன்றை வேந்தன் செல்வ னடியிணை
என்று மேத்தித் தொழுவோ மியாமே.

(இதன் பொருள்.) கொன்றை - கொன்றைப்பூமாலையைச் சூடிய, வேந்தன் - சிவபெருமானுக்கு, செல்வன் - மூத்தகுமாரராகிய விநாயகக்கடவுளுடைய, அடி இணை - பாதங்களிரண்டையும், என்றும் - எந்நாளும், ஏத்தி - துதிசெய்து, தொழுவோம் - வணங்குவோம், யாம் - நாங்கள் என்றவாறு. ஏகாரம் - ஈற்றசை.

(கருத்து.) சிவகுமாரனாகிய விநாயகக் கடவுளின் திருவடிகளைத் துதித்து வணங்குவோம்.

---

### சூத்திரம்.

1. அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம்.

(இ - ள்.) அன்னையும் - தாயும், பிதாவும் - தகப்பனும், முன் - முன்னே, அறி - காணப்பட்ட, தெய்வம் - தெய்வங்களாவார்.

[க - து] தாயுந்தந்தையு முதலிற் காணப்படுந் தெய்வங்களாம்.

## 2. ஆலயந் தொழுவது சாலவு நன்று.

(இ - ள்.) ஆலயம் - கோயிலுக்குப்போய், தொழுவது - கடவுளை வணங்குவது, சாலவும் - மிகவும், நன்று - நல்லது.

[க - து.] கடவுளை வணங்குவது நல்லது.

## 3. இல்லற மல்லது நல்லற மன்று.

(இ - ள்.) இல்லறம் - (மனையாளோடு கூடிச் செய்யும்) இல்லறமானது, நல் அறம் - எளிதிற் செய்யத்தகும் அறமாகும், அல்லது - இல்லறமல்லாத துறவறமானது, அன்று - எளிதிற்செய்யத்தகும் அறமன்றாகும்.

[க - து.] மனையாளோடு கூடிவாழுதலே நல்ல தருமமாம்.

## 4. ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்.

(இ - ள்.) ஈயார் - கொடாதவருடைய, தேட்டை - சம்பாத்தியத்தை, தீயார் - (கள்ளர் முதலாகிய) தீயவர், கொள்வர் - அபகரிப்பார்.

[க - து.] தனது சம்பாத்தியத்தை நல்வழியிற் செலவு செய்ய வேண்டும்.

## 5. உண்டி சுருங்குதல் பெண்டிர்க் கழகு.

(இ - ள்.) உண்டி - போசனம், சுருங்குதல் - (அளவிற்) குறைதல், பெண்டிர்க்கு - பெண்களுக்கு, அழகு - அழகாகும்.

[க - து.] பெண்டுகள் அதிகஞ் சாப்பிடலாகாது.

## 6. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.

(இ - ள்.) ஊருடன் - (தான் இருக்கும்) ஊராருடன், பகைக்கின் - (ஒருவன்) விரோதித்தால், வேருடன் - (தன்) வமிசத்துடன், கெடும் - (அவன்) கெடுவான்.

[க - து.] தானிருக்கும் ஊராருடன் விரோதிப்பவன் கெடுவான்.

**7.** எண்ணு மெழுத்துங் கண்ணெனத் தகும்.

(இ - ள்.) எண்ணும் - கணிதநூலும், எழுத்தும் - இலக்கணநூலும், கண் எனத் தகும் - (மனிதருக்கு) இரண்டு கண்களென்று சொல்லப்படும்.

[க - து.] மனிதர்கள் முக்கியமாகக் கற்றுக்கொள்ள வேண்டியவைகள் கணக்கும் இலக்கணமும்.

**8.** ஏவா மக்கண் மூவா மருந்து.

(இ - ள்.) ஏவா - (பெற்றவர் இதைச் செய் என்று) ஏவுதற்கு முன் குறிப்பறிந்து செய்கிற, மக்கள் - பிள்ளைகள், மூவா மருந்து - (அப்பெற்றவருக்குத்) தேவாமிர்தம்போல்வார்.

[க - து.] தாய்தந்தையர்களின் மனம்போல் நடக்கிற பிள்ளைகளிடத்து அத்தாய் தந்தையர்கள் அன்பாயிருப்பார்கள்.

**9.** ஐயம் புகினுஞ் செய்வன செய்.

(இ - ள்) ஐயம் புகினும் - பிச்சையெடுத்தாலும், செய்வன - செய்யத்தகுங் கருமங்களையே, செய் - (நீ விடாது) செய்.

[க - து.] வறுமை யடைந்தகாலத்தும் செய்யத்தகுங் காரியங்களை விடாமற் செய்யவேண்டும்.

**10.** ஒருவனைப் பற்றி யோரகத் திரு. *

(இ - ள்.) ஒருவனை - (நற்குணமுடைய) ஒருவனை, பற்றி - (துணையாகப்) பற்றிக்கொண்டு, ஓரகத்து-ஓரிடத்திலேதானே, இரு - (நீ எப்போதும்) வாசம்பண்ணு.

---

* இதற்கு, நற்குணமுடைய ஒரு கணவனை (விவாகஞ்செய்து துணையாகப்) பற்றிக்கொண்டு ஓரில்லத்திலேதானே (நீ எப்பொழுதும்) வாசம்பண்ணு எனப் பெண்ணை நோக்கிக் கூறினதாகவும் பொருள் கொள்வாருமுளர்.

[க - து.] எப்போதும் நல்ல துணையுடன் ஒரு இடத்திலே வாசம் பண்ணவேண்டும்.

11. ஓதலி னன்றே வேதியர்க் கொழுக்கம்.

(இ - ள்.) வேதியர்க்கு - பிராமணருக்கு, ஒழுக்கம் - ஆசாரமானது, ஓதலின் - (வேதம்) ஓதலினும், நன்றே - நல்லதே.

[க - து] பிராமணர்கள் தஞ்சாதி யொழுக்கத்தில் தவறாதிருக்க வேண்டும்.

12. ஒளவியம் பேசுத லாக்கத்திற் கழிவு.

(இ - ள்.) ஒளவியம் - பொறாமை வார்த்தைகளை, பேசுதல் - (ஒருவன்) பேசுதல், ஆக்கத்திற்கு - (அவன்) செல்வத்திற்கு, அழிவு - கேட்டைத் தருவதாகும்.

[க - து.] பொறாமை வார்த்தைகளைப் பேசலாகாது.

13. அஃகமும் காசுஞ் சிக்கெனத் தேடு.

(இ - ள்.) அஃகமும் - தானியத்தையும், காசும் - திரவியத்தையும், சிக்கெனத் தேடு - நீ வீண் செலவு செய்யாமற் சம்பாதி.

[க-து.] தானியத்தையும் திரவியத்தையும் சம்பாதிக்கவேண்டும்.

14. கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை.

(இ - ள்) கற்பு எனப்படுவது - (பெண்களுக்குக்) கற்பென்று சொல்லப்படுவது, சொல் - (கணவர்) சொல்லுக்கு, திறம்பாமை - தப்பி நடவாமையாம்.

[க - து ] கணவன் சொல்லை மீறி நடக்கலாகாது.

15. காவ றானே பாவையர்க் கழகு.

(இ-ள்.) காவல் தானே - (கற்புக்கு அழிவு வாரமல் தம்மைக்) காத்துக்கொள்வதுதானே, பாவையர்க்கு - பெண்களுக்கு, அழகு - அழகாகும்.

[க - து] ஸ்திரீகள் தம்மைக் காத்துக்கொள்வதே கற்புக்கு அழகாகும்

16. கிட்டா தாயின் வெட்டென மற.

(இ - ள்.) கிட்டாது ஆயின் - (இச்சித்த ஒருபொருள்) கிடையாதானல், வெட்டென-சீக்கிரத்திலேதானே, மற - (அப்பொருளை) மறந்துவிடு.

[க - து.] கிடைக்காத பொருளை இச்சிக்கக்கூடாது.

17. கீழோ ராயினுந் தாழ வுரை.

(இ - ள்.) கீழோர் ஆயினும் - (கேட்பவர் உனக்குக்) கீழ்ப்பட்டவராய் இருந்தாலும், தாழ-(உன் சொல்) வணக்கமுடையதாய் இருக்கும்படி, உரை - (நீ அவருடன்) பேசு.

[க - து ] யாவருடனும் வணக்கமாகப் பேசவேண்டும்.

18. குற்றம் பார்க்கிற் சுற்ற மில்லை.

(இ - ள்.) குற்றம் - குற்றங்களை, பார்க்கின் - (ஆராய்ந்து)பார்த்தால், சுற்றம் - உறவாவோர், இல்லை - (ஒருவரும்) இல்லை.

[க - து.] உறவினரிடத்தில் குற்றம் பாராட்டக்கூடாது.

19. கூரம் பாயினும் வீரியம் பேசேல்.

(இ - ள்.) கூர் அம்பு ஆயினும்-(உன்கையிலிருக்கிறது) கூர்மை பொருந்திய அம்பானலும், வீரியம் - வீரத்தன்மையை, பேசேல் - (நீ வீணகப்) பேசாதே.

[க - து.] வெல்லுஞ் சக்தியிருந்தாலும் வீரிய வார்த்தை உதவாது.

20. கெடுவது செய்யின் விடுவது கருமம்.

(இ - ள்.) கெடுவது - கெடுவதை, செய்யின் - (தன்சிநேகன்) செய்தால், விடுவது-(அவன்சிநேகத்தை) விடுவதே, கருமம்-(விவேகிக்கு) நற்செய்கையாம்.

[க - து.] கெடுதியைத்தருஞ் சிநேகனோடு சிநேகியாமல் விட்டுவிடவேண்டும்.

## 21. கேட்டி லுறுதி கூட்டு முடைமை.

(இ-ள்.) கேட்டில் - (கைப்பொருள்) இழந்தகாலத்தில், உறுதி - மனந்தளராமை, உடைமை - முன்போல அப்பொருளுடையனாந்தன்மையை, கூட்டும் - சேர்க்கும்.

[க - து.] மனந்தளராமை பொருளினு மேலாகும்.

## 22. கைப்பொரு டன்னின் மெய்ப்பொருள் கல்வி.

(இ-ள்.) கைப்பொருள் தன்னின் - கையிலிருக்கிற பொருளைப் பார்க்கிலும், மெய்ப்பொருள் - மெய்ப்பொருளாவது, கல்வி - கல்வியேயாம்.

[க - து] செல்வப்பொருளைவிட கல்விப்பொருள் மேன்மையைத் தரும்.

## 23. கொற்றவ னறித லுற்றிடத் துதவி.

(இ - ள்.) கொற்றவன் - அரசனானவன், அறிதல் - (ஒருவனை) அறிந்திருத்தல், உற்ற இடத்து-(அவனுக்கு ஆபத்து) வந்த இடத்து, உதவி - உதவியாகும்.

[க - து.] அரசனால் அறியப்பட்ட மனிதன் நன்மை யடைவான்.

## 24. கோட்செவிக் குறளை காற்றுட னெருப்பு.

(இ - ள்.) கோட்செவி - கோள்கேட்குங் குணத்தோனுடைய காதிலே, குறளை-(பிறர்மேல் ஒருவன் வந்து சொன்ன) கோளானது, காற்றுடன் - காற்றுடன் சேர்ந்த, நெருப்பு - நெருப்பைப்போல மூளும்.

[க - து.] கோள்கேட்குதலும் கோள்சொல்லுதலுங் கூடாவாம்.

## 25. கௌவை சொல்லி னெவ்வருக்கும் பகை.

(இ - ள்.) கௌவை - (பிறர்மேலே) பழிச்சொல்லுகளை, சொல்லின் - (ஒருவன்) சொல்லினால், எவ்வருக்கும் - எல்லாருக்கும், பகை- (அவன்) பகையாவான்.

[க - து.] பழிச்சொல்லுகளைச் சொல்லுபவன் யாவருக்கும் பகைவனாவான்.

## 26. சந்ததிக் கழகு வந்தி செய்யாமை.

(இ - ள்.) சந்ததிக்கு - தன் வமிசம் பெருகுதற்கு, அழகு - அழகாவது, வந்தி - மலடியாக, செய்யாமை - செய்யாமல் (தன்மனையாளோடு) கூடி வாழ்தலாம்.

[க - து.] சந்ததிபெருக மனைவியுடன் கூடி வாழவேண்டும்.

## 27. சான்றோ ரென்கை யீன்றோட் * கழகு.

(இ - ள்.) சான்றோர் என்கை - (தன்புத்திரரைக் கல்வியறிவால்) நிறைந்தோர் என்று (கற்றவர்) சொல்லுகிறது, ஈன்றோட்கு - பெற்றவளுக்கு, அழகு - அழகாகும்.

[க - து.] பெற்றவள் மகிழும்படி அறிவுடையோரென்று பெயரெடுக்கவேண்டும்.

## 28. சிவத்தைப் பேணிற் றவத்திற் கழகு.

(இ - ள்.) சிவத்தை-(முதற்பொருளாகிய) பரமசிவத்தை, பேணின் - (ஒருவன்) வழிபட்டால், தவத்திற்கு - (அவன்செய்யுந்) தவத்திற்கு, அழகு - அழகாகும்.

[க - து.] பரமசிவத்தை வழிபடுதல் தவத்தினுக்கு அழகாம்.

---

* ஈன்றோர்க்கு எனப் பாடங்கொள்ளுவாருமுளர்.

29. சீரைத் தேடி னேரைத் தேடு.

(இ - ள்.) சீரை - சௌக்கியத்தை, தேடின் - (உனக்குத்) தேடு வாயானால், ஏரை - பயிரிடுந்தொழிலை, தேடு - நீ தேடிக்கொள்ளு.

[க - து.] பயிரிட்டால் சௌக்கியமுண்டாம்.

30. சுற்றத்திற் கழகு சூழ விருத்தல்.

(இ - ள்.) சுற்றத்திற்கு - உறவினருக்கு, அழகு - அழகாவது, சூழ - (சுபாசுபங்களிலே பலரும் வந்து) சூழ, இருத்தல் - (சமீபங் களிலே) குடியிருக்கையாகும்.

[க - து.] பந்துக்களோடு கூடியிருத்தல் அழகு.

31. சூதும் வாதும் வேதனை செய்யும்.

(இ - ள்.) சூதும் - சூதாடுதலும், வாதும் - தருக்கம் பேசுதலும், வேதனை - வருத்தத்தை, செய்யும் - உண்டாக்கும்.

[க - து.] சூதாடலும் வாதம் பேசுதலும் துக்கத்தைத் தருவன வாம்.

32. செய்தவ மறந்தாற் கைதவ மாளும்.

(இ-ள்.) செய் தவம் - செய்யும்தவத்தை, மறந்தால் - (ஒருவன்) மறந்தால், கைதவம்-பொய்யாகிய அஞ்ஞானமானது, ஆளும்-(அவனை அடிமைகொண்டு) ஆளும்.

[க - து.] செய்யுந் தவத்தைச் செய்யாமல் விடலாகாது.

33. சேமம் புகினும் யாமத் துறங்கு.

(இ - ள்.) சேமம் - காவற்கூடத்திலே, புகினும் - போய் (ஒரு வேலையும் இல்லாமல்) இருந்தாலும், யாமத்து - ஏழரை நாழிகைக்குப் பின், உறங்கு - நீ நித்திரை பண்ணு.

[க - து.] நாள்தோறும் இரவில் ஏழரை நாழிகைக்குப்பின் நித் திரை செய்யவேண்டும்.

**34.** சையொத் திருந்தா லைய மிட்டுண்.

(இ - ள்.) சை ஒத்து இருந்தால் - பொருள் ஒத்திருந்தால், ஐயம் இட்டு - பிச்சை இட்டு, உண் - நீயும் உண்ணு. [சை - பொருள்].

[க - து.] பிச்சை கொடுத்து உண்ணவேண்டும்.

**35.** சொக்க ரென்பவர் ரத்தம் பெறுவர்.

(இ - ள்.) சொக்கர் என்பவர் - பொன்னுடையவர் என்று சொல்லப்படுவோர், அத்தம் - (அறமும் இன்பமுமாகிய மற்றைப்) புருஷார்த்தங்களையும், பெறுவர் - பெறுவார். [சொக்கு - பொன்.]

[க - து.] பொருளுடையோர் புருஷார்த்தங்களைப் பெறுவர்.

**36.** சோம்ப ரென்பவர் தேம்பித் திரிவர்.

(இ - ள்.) சோம்பர் என்பவர்-சோம்பலுடையவர் என்று சொல்லப்படுவோர், தேம்பி - (வருமையினால்) வருந்தி, திரிவர் - (இரந்து) திரிவார்.

[க - து] சோம்பலுடையோர் தரித்திரத்தை அனுபவிப்பார்கள்.

**37.** தந்தைசொன் மிக்க மந்திர மில்லை.

(இ - ள்.) தந்தை - பிதாவினுடைய, சொல்-சொல்லுக்கு, மிக்க-மேற்பட்ட, மந்திரம் - (பலனைத்தரும்) மந்திரமானது, இல்லை - (ஒருவனுக்கு எந்தநூலிலும்) இல்லை.

[க - து.] தந்தையின் சொல்லையே வேதமந்திரமாகக் கொள்ளவேண்டும்.

**38.** தாயிற் சிறந்தொரு கோயிலு மில்லை.

(இ - ள்.) தாயின் - மாதாவைப்பார்க்கிலும், சிறந்த - சிறப்புப் பொருந்திய, ஒருகோயிலும் - ஒரு ஆலயமும், இல்லை - (ஒருவனுக்கு எங்கும்) இல்லை.

[க - து] தாயாரைப்போற்றினால் கோயிலுக்குப்போன பலன் தரும்.

## 39. திரைகட லோடியுந் திரவியந் தேடு.

(இ - ள்.) திரை கடல் - அலைகின்ற கடலிலே, ஓடியும் - (தோணியேறித் தூரதேசங்களிற்) போயானாலும், திரவியம் - திரவியத்தை, தேடு - நீ சம்பாதி.

[க - து.] முக்கியமாகத் திரவியத்தைத் தேடவேண்டும்.

## 40. தீராக் கோபம் போரா முடியும்.

(இ - ள்.) தீரா - நீங்காத, கோபம் - கோபமானது, போரா - (பின்பு) சண்டையாக, முடியும் - முடிந்துவிடும்.

[க - து] கோபமே சண்டைக்குக் காரணமாகும்.

## 41. துடியாப் பெண்டிர் மடியி னெருப்பு.

(இ - ள்.) துடியா - (தங்கணவருக்குத் துன்பம் வந்தபோது) மனம் பதையாத, பெண்டிர் - பெண்கள், மடியில் - (அவர்) வயிற்றில், நெருப்பு - அக்கினிக்கு ஒப்பாவார்.

[க - து] கணவருக்குத் துன்பம் வந்தபோது மனம் பதையாத மனைவியர்கள் அக்கணவர்களுக்கு அடிவயிற்றில் நெருப்புப்போலாம்.

## 42. தூற்றும் பெண்டிர் கூற்றெனத் தகும்.

(இ - ள்.) தூற்றும் - (தங்கணவர்மேற் குற்றஞ் சொல்லித்) தூற்றுகிற, பெண்டிர் - பெண்களை, கூற்று எனத்தகும் - (அவருக்கு) இயமன் என்று எண்ணத்தகும்.

[க - து.] கணவரைத் தூற்றுகின்ற பெண்டுகள் அவர்களுக்கு இயமனாம்.

43. தெய்வம் சீறிற் கைதவ மாளும்.

(இ - ள்.) தெய்வம் - தெய்வமானது, சீறின் - (ஒருவனைக்) கோபித்தால், கைதவம் - (அவனுக்குக்) கைகூடியிருந்த தவமும், மாளும் - (பயன்கொடாமல்) அழியும்.

[க - து.] வழிபடுந்தெய்வங் கோபித்தால் செய்திருந்த தவமும் அழிந்துவிடும்.

44. தேடா தழிக்கிற் பாடா முடியும்.

(இ - ள்.) தேடாது - (ஒருவன் வருந்திச்) சம்பாதியாமல், அழிக்கின் - (இருக்கிறபொருளைச்) செலவழித்தால், பாடாமுடியும் - (அவனுக்குப் பின்) வருத்தமாக முடியும்.

[க - து.] முன்னோர்கள் தேடியபொருளைச் செலவழிக்கக் கூடாது.

45. தையு மாசியும் வையகத் துறங்கு.

(இ - ள்.) தையும் - தைமாதத்திலும், மாசியும் - மாசிமாதத்திலும், வை அகத்து - (பனிவருத்தந்தாராத) வைக்கோல்வீட்டிலே, உறங்கு - நீ நித்திரைபண்ணு

[க - து.] பனிக்காலத்தில் வைக்கோல் வீட்டில் நித்திரைசெய்ய வேண்டும்.

46. தொழுதூண் சுவையி னுழுதூ ணினிது.

(இ - ள்.) தொழுது - (ஒருவரைச்) சேவித்து, ஊண் - உண்ணும் உணவினது, சுவையின் - சுவையைப்பார்க்கிலும், உழுது - உழுது பயிர்செய்து, ஊண் - உண்ணும் உணவின்சுவை, இனிது - இன்பந்தருவதாகும்.

[க - து.] ஒருவரிடத்து வேலைசெய்து சாப்பிடுவதிலும் பயிரிட்டுச் சாப்பிடுதல் மேலானதா யிருக்கும்.

## 47. தோழ னோடு மேழைமை பேசேல்.

(இ-ள்.) தோழனோடும்-(உன்) சிநேகனோடாயினும், ஏழைமை-(உனக்கு இருக்கிற) சிறுமையை, பேசேல்-(நீ எப்படிப்பட்டவேளையிலும்) பேசாதே.

[க - து.] தனக்குண்டாயிருக்குஞ் சிறுமையை ஒருவருடனுஞ் சொல்லலாகாது.

## 48. நல்லிணக்க மல்ல தல்லற் படுத்தும்.

(இ - ள்) நல் இணக்கம் அல்லது - நல்ல சகவாசம் அல்லாதது, அல்லல் - துன்பத்தையே, படுத்தும் - உண்டாக்கும்.

[க - து.] பொல்லாத சகவாசம் துன்பத்தை உண்டாக்கும்.

## 49. நாடெங்கும் வாழக் கேடொன்று மில்லை.

(இ - ள்.) நாடு எங்கும் - தேசமெங்கும், வாழ - செழித்திருக்குமாயின், கேடு ஒன்றும்-(திருட்டுமுதலாகிய) கேடொன்றும், இல்லை-இல்லை.

[க - து.] தேசஞ் செழித்திருந்தால் திருடு முதலியவைகள் உண்டாகாது.

## 50. நிற்கக் கற்றல் சொற்றிறம் பாமை.*

(இ - ள்.) நிற்க-(தன்னிடத்தே) நிலைபெறும்படி, கற்றல்-கற்றலாவது, சொல்-(தான் சொல்லும்) சொல்லுகளிலே, திறம்பாமை - (ஒருபோதும்) தப்பிப்போகாமையாம்.

[க-து.] தாங்கள் சொல்லுஞ் சொல்லை ஒருவரும் தவறக்கூடாது.

---

* ஒருவன் தான் சொல்லும் சொல்லுகளிலே (ஒருபோதும்) தப்பிப்போகாமை, தன்னிடத்திலே நிலைபெறும்படி கற்கக்கடவன் எனவும் பொருள்கொள்ளுவாருமுளர். கற்றல் - வியங்கோள்.

**51.** நீரகம் பொருந்திய வூரகத் திரு.

(இ - ள்.) நீர் - நீர்வளமானது, அகம் - தனக்குள்ளே, பொருந்திய - (மழையில்லாத பஞ்சத்திலும்) அமைந்த, ஊரகத்து-ஊரினிடத்திலே, இரு - நீ குடியிரு.

[க - து.] நீர்வளம் பொருந்திய ஊரில் வாசஞ் செய்யவேண்டும்.

**52.** நுண்ணிய கருமமு மெண்ணித் துணி.

(இ - ள்.) நுண்ணிய - சிறிய, கருமமும் - தொழிலையும், எண்ணி - (முடிக்கும் வழியை நன்றாக) ஆலோசித்து, துணி - (நீ பின்பு அதைச்) செய்யத் துணி.

[க - து.] செய்யுங்காரியஞ் சிறியதாயிருந்தாலும் ஆலோசித்துச் செய்யவேண்டும்.

**53.** நூன்முறை தெரிந்து சீலத் தொழுகு.

(இ - ள்.) நூல் - தருமநூலிலே சொல்லப்பட்ட, முறை - (விதிகளின்) முறையை, தெரிந்து - அறிந்து, சீலத்து - நல்லொழுக்க வழியில், ஒழுகு - நீ நட.

[க - து.] தருமசாஸ்திர வழிப்படி நடக்கவேண்டும்.

**54.** நெஞ்சை யொளித்தொரு வஞ்சக மில்லை.

(இ - ள்.) நெஞ்சை - (தம்முடைய) மனசுக்கு, ஒளித்த - மறைக்கப்பட்ட, ஒருவஞ்சகம் - யாதொருவஞ்சனையும், இல்லை - (யாவரிடத்திலும்) இல்லை.

[க - து.] மனமறியாத வஞ்சகம் ஒருவருஞ் செய்வதில்லை.

**55.** நேரா நோன்பு சீரா காது.

(இ - ள்.) நேரா - (மனசினால்) உடன்படாத, நோன்பு - தவமானது, சீர் ஆகாது - சீராக முடியாது.

[க - து.] மனதொருமித்துச் செய்யாத விரதம் எந்தப்பலனையுங் கொடாது.

**56.** நைபவ ரெனினு நொய்ய வுரையேல்.

(இ - ள்.) நைபவர் எனினும் - (கேட்போர் எதிர்பேசாமல்) வருந்துவோராயினும், நொய்ய - அற்பவார்த்தைகளை, உரையேல் - நீ சொல்லாதே.

[க - து.] உன்னைவிட வேறு கதியில்லாமல் நீ சொல்லும்படியான வார்த்தைகளுக்கு எதிர்மொழி கூறாது வருந்துவோர்களானாலும் அவர்களை அற்ப வார்த்தைகளால் ஒன்றும் சொல்லக்கூடாது.

**57.** நொய்யவ ரென்பவர் வெய்யவ ராவர்.

(இ - ள்.) நொய்யவர் என்பவர் - (உருவத்தினாலே) சிறியவர் என்று இகழப்படுவோரும், வெய்யவர் ஆவர் - செய்காரியத்தால் யாவரும் விரும்புங் குணத்தையுடையவராவர்.

[க - து.] சிறியவரென் றிகழப்படுவோர்களும் அவர்கள் செய்யும் நற்காரியங்களால் யாவரும் விரும்பப்பட்டவர்களுமாவார்கள்.

**58.** நோன்பென் பதுவே கொன்று தின்னாமை.

(இ - ள்.) நோன்பு என்பது - தவமென்று சொல்லப்படுவது, கொன்று - (ஒரு சீவனை) வதைசெய்து, தின்னாமையே - (அதன் மாமிசத்தைத்) தின்னாமையேயாம்.

[க - து.] யாதொரு ஜீவனையுங் கொன்று அதன் மாமிசத்தைத் தின்னாமையே தவமாம்.

**59.** பண்ணிய பயிரிற் புண்ணியம் தெரியும்.

(இ - ள்.) பண்ணிய - (ஒருவன்) செய்த, பயிரின் - பயிரின் விளைவினாலும் விளைவில்லாமையினாலும், புண்ணியம் - (அவனிடத்தே) புண்ணியம் இருத்தலும் இல்லாமையும், தெரியும்-அறியப்படும்.

[க - து.] ஒருவன் இட்ட பயிரினாலேயே அவன் செய்த புண்ணிய பாவங்கள் தெரியும்.

## 60. பாலோ டாயினுங் கால மறிந்துண்.

(இ - ள்.) பாலோடு ஆயினும் - பாலோடு கூடிய அன்னத்தை உண்டாலும், காலம் அறிந்து - (உண்ணத்தகுந்) காலத்தை அறிந்து, உண் - (நீ அதை) உண்ணு.

[க - து.] எவ்வகைப்பட்ட உயர்ந்த ஆகாரமாயினுங் காலமறிந்து சாப்பிடவேண்டும்.

## 61. பிறன்மனை புகாமை யறமெனத் தகும்.

(இ - ள்.) பிறன் - பிறனுடைய, மனை - மனையாளிடத்தில், புகாமை - (இச்சித்துப்) போகாமையே, அறம் எனத்தகும்-(எல்லாத் தருமங்களினும் உயர்ந்த) தருமம் என்று சொல்லத்தகும்.

[க - து.] அந்நிய ஸ்திரீகளை அணுயாமையே மேலான தருமமாம்.

## 62. பீரம் பேணி பாரந் தாங்கும்.

(இ - ள்.) பீரம் பேணி - முலைப்பால் குறைவற உண்டு வளர்ந்தவன், பாரம் - பாரமான சுமையை, தாங்கும்-சுமப்பான். [அதுபோல முன்னே காரணங்களைக் குறைவறக் கொண்டவன் பின்னே பெரிய காரியங்களையும் வருத்தமின்றி முடிப்பான்.] [பீர் - முலைப்பால், அம்-சாரியை]

[க - து.] முலைப்பால் குறைவறவுண்டவன் அதிக பலமுடையவனாவான்.

## 63. புலையுங் கொலையுங் களவுந் தவிர்.

(இ - ள்.) புலையும் - புலாலுண்ணுதலையும், கொலையும்-சீவவதை செய்தலையும், களவும் - பிறர் பொருளைத் திருடுதலையும், தவிர் - (நீ செய்யாது) ஒழித்துவிடு.

[க - து.] மாமிசந்தின்னுதல் வதைசெய்தல் திருடுதல் இம்மூன்றும் பாவச்செய்கையாதலால் அதை நீக்குதல் வேண்டும்.

**64.** பூரியோர்க் கில்லை சீரிய வொழுக்கம்.

(இ - ள்.) பூரியோர்க்கு - கீழ்மக்களுக்கு, சீரிய - சிறப்பாகிய, ஒழுக்கம் - நடையானது, இல்லை - (உண்டாதல்) இல்லை.

[க - து.] கீழ்மக்களுக்கு உயர்ந்த நடையில்லை.]

**65.** பெற்றோர்க் கில்லை சுற்றமுஞ் சினமும்.

(இ - ள்.) பெற்றோர்க்கு - (மெய்ஞ்ஞானத்தைப்) பெற்றவருக்கு, சுற்றமும் - உறவினர்மேல் ஆசையும், சினமும்-(மற்றவர்மேல்) வெறுப்பும், இல்லை - இல்லை.

[க - து] ஞானிகளுக்கு ஆசையுங் கோபமுங் கிடையாது.

**66.** பேதைமை யென்பது மாதர்க் கணிகலம்.

(இ-ள்.) பேதைமை என்பது-அறியாமையென்று சொல்லப்படுங் குணமானது, மாதர்க்கு - பெண்களுக்கு, அணிகலம்-ஆபரணமாகும்.

[க - து.] அறியாமை யென்பதே ஸ்திரீகளுக்கு ஆபரணமாம்.

**67.** பையச் சென்றால் வையந் தாங்கும்.

(இ - ள்.) பைய - மெள்ள, சென்றால் - (ஒருவன் தகுதியான வழியிலே) நடந்தால், வையம் - பூமியிலுள்ளோர், தாங்கும்-(அவனை) மேலாகக் கொள்வார்.

[க - து.] நல்ல மாதிரியாய் நடந்துகொள்ளவேண்டும்.

**68.** பொல்லாங் கென்பவை யெல்லாந் தவிர்.

(இ - ள்.) பொல்லாங்கு என்பவை - தீங்குகளென்று சொல்லப்பட்டவைகளாகிய, எல்லாம் - எல்லாவற்றையும், தவிர் - (நீ செய்யாது) ஒழித்துவிடு.

[க - து] தீமையான காரியங்களைச் செய்யக்கூடாது.

## 69. போனக மென்பது தானுழந் துண்டல்.

(இ - ள்.) போனகம் என்பது - போசனமென்று சொல்லப்படுவது, தான் உழந்து - தான் பிரயாசைப்பட்டுச் சம்பாதித்து, உண்டல் - உண்ணுதலாம். [உழப்பு-முயற்சி.]

[க - து.] கஷ்டப்பட்டு உண்ணும் உணவே மேலான உணவாம்.

## 70. மருந்தே யாயினும் விருந்தோ டுண்.

(இ - ள்.) மருந்தே ஆயினும் - (உண்ணப்படுவது கிடைத்தற்கு அரிய) தேவாமிர்தமேயானாலும், விருந்தோடு - (வந்த) விருந்தாளிகளோடு கூடி, உண் - நீயும் உண்ணு.

[க - து.] உயர்ந்த உணவாயிருந்தாலும் விருந்தாளிகளை விட்டுவிட்டு உண்ணக்கூடாது.

## 71. மாரி யல்லது காரிய மில்லை.

(இ- ள்.) மாரி அல்லது - மழையினால் அல்லாமல், காரியம் - யாதொரு காரியமும், இல்லை - (யாருக்கும் நடப்பது) இல்லை.

[க-து.] மழையில்லாவிட்டால் உலகில் ஒரு காரியமும் நடவாது.

## 72. மின்னுக் கெல்லாம் பின்னுக்கு மழை.

(இ - ள்.) மின்னுக்கு எல்லாம் - (வானத்திலே காணப்பட்ட) மின்னலுக்கு எல்லாம், பின்னுக்கு மழை - (அப்போது மழை யில்லையாயினும்) பின்னே மழை உண்டாகும். [அதுபோல ஒருவனிடத்திலே காணப்பட்ட நல்ல முயற்சிகளுக்கெல்லாம் அப்போது பயன் இல்லையாயினும் பின்னே பயன் உண்டாகும்.]

[க - து.] ஒருவனிடத்திலே முன்பு தோன்றும் முயற்சியானது பின்பு பலனைக் கொடுக்கும்.

**73. மீகாம னில்லா மரக்கல மோடாது.**

(இ - ள்.) மீகாமன் - (தன்னை ஓட்டத்தக்க) மாலுமி, இல்லா - இல்லாத, மரக்கலம் - தோணியானது, ஓடாது - (கடலிலே செவ்வையாக) ஓடாது. [அதுபோலத் தன்னை முடிக்கத்தக்கவன் இல்லாத யாதொரு கருமமும் செவ்வையாக முடியாது.]

[க - து] கர்த்தா இன்றி காரியம் நடவாது.

**74. முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்.**

(இ - ள்.) முற்பகல் * - ஒருமுகூர்த்தகாலத்தின் முன்பங்கிலே, செய்யின் - பிறனுக்குத் தீங்கு செய்தால், பிற்பகல் * - அதன் பின் பங்கிலே, விளையும் - (செய்தவனுக்கு அத்தீங்குதானே) உண்டாகும், [பகல் - முகூர்த்தம்.]

[க - து.] முன்னே செய்தவினை பின்னே பலனைக் கொடுக்கும்.

**75. மூத்தோர் சொன்ன வார்த்தை யமிர்தம்.**

(இ - ள்.) மூத்தோர்-(கல்வியறிவினாலே) முதிர்ந்தவர், சொன்ன - சொல்லிய, வார்த்தை - வார்த்தையானது, அமிர்தம் - தேவாமிர்தத்தைப்போலும்.

[க - து.] பெரியோர்சொல் தேவாமிர்தம்போல் இன்பந்தரும்.

**76. மெத்தையிற் படுத்த னித்திரைக் கழகு.**

(இ - ள்.) மெத்தையில் - பஞ்சணையிலே, படுத்தல் - படுத்தலானது, நித்திரைக்கு - (ஒருவன் செய்கிற) நித்திரைக்கு, அழகு - அழகாகும்.

[க - து.] பஞ்சணையிலே நித்திரை செய்யவேண்டும்.

---

* முற்பகல் பிற்பகல் என்பன பின்முன்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத்தொகை.

77. மேழிச் செல்வங் கோழை படாது.

(இ - ள்.) மேழி - கலப்பை பிடித்து உழுது பயிர்செய்தலால் உண்டாகுகின்ற, செல்வம் - செல்வமானது, கோழை படாது - (ஒரு போதும்) குறைவை அடையாது.

[க - து.] பயிரிடுவதால் உண்டாகுஞ் செல்வம் குறைவுபடாது.

78. மைவிழி யார்தம் மனையகன் றொழுகு.

(இ - ள்.) மைவிழியார்தம் - மை தீட்டிய கண்ணையுடைய வேசிகளது, மனை - வீடுகளை, அகன்று ஒழுகு - நீ அணுகாமலே விலகிப் போ.

[க - து.] வேசியர் வீட்டிற்குப் போகக்கூடாது.

79. மொழிவது மறுக்கி னழிவது கருமம்.

(இ - ள்.) மொழிவது - (சற்றோர்) சொல்லுகின்ற உபாயத்தை, மறுக்கின்-கேளாமற்செய்தால், கருமம்-(ஒருவன் செய்யுந்) தொழில், அழிவது - கெடுவதாகும்.

[க - து.] சற்றோர் வார்த்தையைக் கேட்டு நடவாவிட்டால் குற்றம் வரும்.

80. மோன மென்பது ஞான வரம்பு.

(இ - ள்.) மோனம் என்பது - மௌனநிலை என்பது, ஞானம் - மெய்ஞ்ஞானத்துக்கு, வரம்பு - எல்லையாகும்.

[க - து.] மௌனநிலை மெய்ஞ்ஞானத்துக்கு எல்லை.

81. வளவ னாயினு மளவறிந் தழித்துண்.

(இ - ள்.) வளவன் ஆயினும் - (சம்பத்திலே) சோழனுக்கு ஒப்பானவனாய் இருந்தாயானாலும், அளவு - (பொருள்வரவின்) அளவை

அறிந்து - தெரிந்து, அழித்து - (அதற்குத்தகச்)செலவழித்து, உண்- நீ அனுபவி.

[க - து.] செல்வம் மிகுதியாயினும் அளவறிந்து செலவு செய்ய வேண்டும்.

### 82. வானஞ் சுருங்கிற் றானஞ் சுருங்கும்.

(இ - ள்.) வானம் - மழையானது, சுருங்கின்-பெய்தல் குறையுமாயின், தானம் - (சற்பாத்திரங்களுக்குக் கொடுக்கிற) கொடையும், சுருங்கும் - குறைவுபடும்.

[க - து.] மழையில்லாவிடின் தானமுந் தருமமும் நடவாது.

### 83. விருந்திலோர்க் கில்லை பொருந்திய வொழுக்கம்.

(இ - ள்.) விருந்து இலோர்க்கு-விருந்தினரை உபசரித்தல் இல்லாதவருக்கு, பொருந்திய - தாம் பொருந்திய, ஒழுக்கம் - இல்லறம், இல்லை - (இருந்தாயினும்) இல்லாததற்குச் சமானமாகும்.

[க - து.] விருந்தினரை உபசரிக்காதவர்களுக்கு ஒழுக்கங் கிடையாவாம்.

### 84. வீரன் கேண்மை கூரம் பாகும்.

(இ - ள்.) வீரன் - வீரனுடைய, கேண்மை - சிநேகம் ஒருவனுக்கு இருந்தால், கூர் அம்பு ஆகும் - (அவனுக்கு அதுவே தன்பகையை வெல்லுதற்குக்) கூர்மைபொருந்திய அம்பாகும்.

[க - து.] வீரத்தன்மையுள்ள ஒருவனது சிநேகம் இருந்தால் பகைவனை வெல்ல எளிதாகும்.

### 85. உரவோ ரென்கை இரவா திருத்தல்.

(இ - ள்.) உரவோர் என்கை - வல்லவரென்று சொல்லப்படுதல், இரவாது - (தமக்குச் சிறுமை வந்த காலத்திலும் பிறரை) இரவாமல், இருத்தல் - இருக்கையாம்.

[க - து.] சிறுமைவந்த காலத்திலும் பிறரிடத்தில் இரவாதிருத்தலே நன்மையாம்.

**86.** ஊக்க முடைமை யாக்கத்திற் கழகு.

(இ - ள்.) ஊக்கம் - (செய்தொழிலிலே) மனந்தளராமையை, உடைமை-(ஒருவன்) உடையனாதல், ஆக்கத்திற்கு-(அவன்) செல்வத்திற்கு, அழகு - அழகாகும்.

[க-து.] மனந்தளராமையே செல்வத்திற்கு அழகு.

**87.** வெள்ளைக் கில்லை கள்ளச் சிந்தை.

(இ - ள்.) வெள்ளைக்கு - களங்கமில்லாத பரிசுத்த முடையவனிடத்து, கள்ளம் - வஞ்சனைபொருந்திய, சிந்தை - நினைப்பானது, இல்லை - இல்லை.

[க - து.] பரிசுத்தமான குணவானிடத்து வஞ்சனை இராது.

**88.** வேந்தன் சீறி னாந்துணை யில்லை.

(இ - ள்.) வேந்தன் - அரசனானவன், சீறின் - (ஒருவனைக்) கோபித்தால், ஆம் - (அப்போது அவனுக்கு உபயோகம்) ஆகின்ற, துணை - துணை, இல்லை - (ஒருவரும்) இல்லை.

[க-து.] அரசன் கோபித்தால் வேறு ஒருவரும் துணையாகமாட்டார்கள்.

**89.** வையந் தோறுந் தெய்வந் தொழு.

(இ - ள்.) வையம் தோறும் - பூமியிலுள்ள தலந்தோறும் (போய்), தெய்வம் - கடவுளை, தொழு - (நீ தரிசித்து) வணங்கு.

[க-து.] ஸ்தலங்கள்தோறும் போய்க் கடவுளை வணங்கவேண்டும்.

**90.** ஒத்த விடத்து நித்திரை கொள்.

(இ-ள்.) ஒத்த இடத்து - (மேடுபள்ளம் இல்லாமற்) சமமான இடத்திலே, நித்திரைகொள் - (நீ படுத்து) நித்திரைபண்ணு.

[க-து.] சமமான இடத்திலே நித்திரை பண்ணவேண்டும்.

**91.** ஓதாதார்க் கில்லை யுணர்வொடு மொழுக்கம்.

(இ-ள்.) ஓதாதார்க்கு - (அறிவுநூல்களைப்) படியாதவருக்கு, உணர்வொடும் - அறிவுடனே, ஒழுக்கம் - நல்லநடையும், இல்லை - (உண்டாதல்) இல்லை.

[க-து.] படியாதவர்கட்கு அறிவும் நல்லநடையுமில்லை.

கொன்றைவேந்தன் மூலமும் உரையும்
முற்றிற்று.

---

# பெரியோரைப் பேணல்.

பிதா, மாதா பாட்டன், பாட்டி, மாமன், மாமி, தமையன், தமக்கை, தமையன் மனைவி, உபாத்தியாயர், குரு முதலாகிய பெரியோர்களை அச்சத்தோடும் அன்போடும் வழிபடல்வேண்டும். அவர்கள் குற்றஞ் செய்தார்களாயினும், அதனைச் சிறிதும் பாராட்டாது பொறுத்துக் கொள்ளல்வேண்டும். இராசா யாது குற்றஞ் செய்யினும் அவனோடு சிறிதும் எதிர்க்காது அவனுக்கு அடங்கி நடத்தல்போலவே பிதா மாதா முதலாயினோருக்கும் அடங்கி நடத்தல்வேண்டும்.

பிதா மாதா முதலாயினோர் முட்டுப்படாவண்ணம் இயன்றமட்டும் அன்னவஸ்திர முதலியவை கொடுத்து, அவர்களை எந்நாளும் பாதுகாத்தல் வேண்டும். அவர்களுக்கு வியாதி வந்தால், உடனே மனம் பதைபதைத்துச் சிறந்த வைத்தியரைக்கொண்டு மருந்து செய்வித்தல்வேண்டும். அவர்கள் ஏவிய ஏவல்களைக் கூச்சமின்றிச் செய்

தல்வேண்டும். பிள்ளைகள் தங்கள் கல்விக்கும் நல்லொழுக்கத்துக்கும் இடையூறாகப் பிதா மாதாக்கள் சொல்லுஞ் சொற்களை மறுத்தல் பாவமாகாது. "தந்தைதாய் பேண்" என்னு நீதிமொழியைச் சிந்தியாது, மூடர்கள் அநேகர் தங்களை மிக வருந்திப் பெற்றுவளர்த்த பிதாமாதாக்கள் பசித்திருப்பத் தாமும் தம்முடைய பெண்டிர் பிள்ளைகளும் வயிறு நிறையப் புசித்துக்கொண்டு, தம்மையும் பொருளாக எண்ணி, தமக்கு வரும் பழிபாவங்கட்கு அஞ்சாது திரிகின்றார்கள். பிதாமாதாக்களையும் சுற்றத்தாரையும் வஞ்சித்து அன்னியர்களுக்கு உதவி செய்கின்றார்கள்.

பிதா மாதா முதலாயினோர் இறக்கும்பொழுது அவரைப் பிரியாது உடனிருத்தல்வேண்டும். அவர் மனம் கலங்கும்படி அவரெதிரே அழலாகாது. அவர் மனம் கடவுளுடைய திருவடியிலே அழுந்தும்படி அறிவொழுக்க முடையவரைக்கொண்டு அருட்பாக்களை ஓதுவிக்கவும் நல்லறிவைப் போதிப்பிக்கவும் வேண்டும். அவர் இறந்தபின்பு உத்தரக்கிரியைகளை உலோபமின்றித் தம்பொருளளவுக்கு எற்ப விதிப்படி சிரத்தையோடு செய்து முடித்தல்வேண்டும். வருடந்தோறும் அவர் இறந்த திதியிலும் புரட்டாதி மாசத்திலும் சிராத்தம் தவறாமற் செய்தல்வேண்டும். அநேகர் தங்கள் பிதாமாதாக்கள் சீவந்தர்களாய் இருக்கும்பொழுது அவர்களை அன்னவஸ்திர முதலியவை கொடுத்துப் பேணாது அவர்களுக்குத் துன்பத்தையே விளைவித்து, அவர்கள் இறந்தபின்பு உத்தரக்கிரியைகளை உலகத்தார் மெச்சும்பொருட்டு வெகு திரவியஞ் செலவிட்டுச் செய்கின்றார்கள். ஐயையோ இது எவ்வளவோ ரறியாமை! இச்செய்கையால் வரும் பயன் யாது? உத்தரக்கிரியையைச் சிறிது பொருள் செலவிட்டும் செய்யலாம், அதற்குச் சிரத்தையே முக்கியம். பிதாமாதாக்கள் சீவந்தர்களாய் இருக்கும்பொழுது அவர்களை முட்டுப்படாவண்ணம் அன்னவஸ்திரங் கொடுத்துப் பாதுகாத்தலிலே இயன்றமட்டும் பொருள் செலவிடுதலே ஆவசியகம்.

பிதா மாதா முதலிய பெரியோர்களைக் கடுஞ்சொற் சொல்லிக் கோபித்து உறுக்கிய பாவிகள், நரகத்திலே தங்கள் முகத்தை அட்டைகள் குடைந்து இரத்தங் குடிக்க, அதனாற் பதைத்து விழுவார்கள். பின்பு அவர்கள் சரீரநடுங்கி அலறும்படி இயமதூதர்கள் சுடுகின்ற காரநீரையும் உருக்கிய தாமிரநீரையும் அவர்கண்மீது வார்ப்பார்கள். அப்பெரியோர்களுக்கு ஏவல் செய்யக் கூசின பாவிகளுடைய முகத்

தை இயமதூதர்கள் குடாரியினலே கொத்துவார்கள்; அப்பெரியோர்களைக் கோபத்தினலே கண் சிவந்து ஏறிட்டுப் பார்த்தவர்களுடைய கண்களிலே இயமதூதர்கள் அக்கினியிற் காய்ச்சிய ஊசிகளை உறுத்திக் காரநீரை வார்ப்பார்கள்.

பிதா மாதா முதலாயினேரை நிந்தித்தவர்களும், அவர்களைப் பேணுது தள்ளிவிட்டவர்களும், பைத்தியத்தினலும், நாக்குப்புற்றினலும், நேத்திர ரோகத்தினலும், காலிற்புண்ணினலும், சர்வாங்க வாயுரோகத்தினலும், பெருவியாதியினலும் வருந்துவர்கள். பிதா மாதா முதலாயினேரைப் பேணுதவர்களும், உபாத்தியாயருக்குக் கொடுக்கற்பாலதாகிய வேதனத்தைக் கொடாதவர்களும், குருவுக்குக் கொடுக்கற்பாலதாகிய காணிக்கையைக் கொடாதவர்களும், தரித்திரர்களாய்ப் பசியினல் வருந்திப் பெண்டிரும் பிள்ளைகளுங் கதற இரக்கத்தகாத இடங்களெல்லாம் பிச்சையிரந்து உழல்வார்கள்.

பிதா மாதாக்களுக்குச் சிராத்தஞ் செய்யாதவர்களும், புரட்டாதி மாசத்திலே மகாளயசிராத்தஞ் செய்யாதவர்களும் சிரோரோகங்களினல் வருந்துவார்கள். புலவராயினும், ஞானிகளாயினும், மூடர்களாயினும், பெண்களாயினும், பிரமசாரிகளாயினும், இறந்த தினச் சிராத்தத்தைச் செய்யாதொழிந்தால், கோடி சனனத்திலே சண்டாளராவார்கள்.

எவன் தன்னுடைய தாய்தந்தை முதலிய பந்துக்கள் வறுமையினல் வருந்தும்போது இம்மையிலே புகழின்பொருட்டு அன்னியர்களுக்குத் தானங் கொடுக்கின்றனே, அந்தத் தானம் தருமமன்று. அது முன்பு தேன்போல இனிதாயிருப்பினும், பின்பு விஷம்போலத் துன்பப்படுத்தும். பார்க்கும்போது புகழுக்கு ஏதுப்போலத் தோன்றினும், பின்பு நரகத்துன்பத்துக்கே ஏதுவாகும் என்பது கருத்து. எவன் தான் ஆவசியகமாகப் பாதுகாக்கவேண்டிய மனைவி பிள்ளை முதலாயினேரைத் துன்பப்படுத்திப் பரலோகத்தின்பொருட்டுத் தானஞ் செய்கின்றனே அந்தத் தானமும் அவனுக்கு இம்மையிலும் மறுமையிலும் துன்பத்தையே விளைவிக்கும்.



உ

கடவுள் துணை.

அதிவீரராமபாண்டியன் அருளிச்செய்த

நறுந்தொகை என்னும்

# வெற்றிவேற்கை

## மூலமும் உரையும்.





சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

1914

விலை அணா 1

உ

கடவுள் துணை.

# வெற்றிவேற்கை

## மூலமும் உரையும்.

காப்பு.

பிரணவப் பொருளாம் பெருந்தகை யைங்கரன்
சரணவற் புதமலர் தலைக்கணி வோமே.

(இதன் பொருள்.) பிரணவம்-பிரணவம் என்னும் மந்திரத்தினது, பொருள் ஆம்-பொருளாகிய, பெரு-பெரிய, தகை-தகுதியையுடைய, ஐங்கரன் - ஐந்து கைகளையுடைய விநாயகரது, அற்புதம் - ஆச்சரியத்தைத் தரத்தக்க, சரணம் - பாதங்களாகிய, மலர் - தாமரை மலர்களை, தலைக்கு - (எமது) தலைக்கு, அணிவோம் - (யாம் அலங்காரமாகத்) தரித்துக்கொள்ளுவோம். ஏகாரம் ஈற்றசை.

(கருத்து.) விநாயகப் பெருமானது திருவடிகளாகிய தாமரை மலர்களை எமது தலைக்கு அலங்காரமாகத் தரித்துக்கொள்ளுவோம்.

---

நூற்பயன்.

வெற்றி வேற்கை வீர ராமன்
கொற்கை யாளி குலசே கரன்புகல்
நற்றமிழ் தெரிந்த நறுந்தொகை தன்னால்
குற்றங் களைவோர் குறைவிலா தவரே.

(இ - ள்.) கொற்கை - கொற்கை என்ற நகரத்தை, ஆளி-ஆள் பவனாகியும், குலம் - (தன்) குலத்திற்கு, சேகரன் - மகுடம்போல் பவனாகியும், வெற்றி - செயத்தைத் தரும், வேல் - வேலைத்தாங்கிய, கை - கையையுடையவனாகியும் விளங்கிய, வீரராமன் - அதிவீரராம பாண்டியன், புகல் - சொன்ன, நல் - நல்ல, தமிழ்-தமிழ் நூல்களில், தெரிந்த - ஆராய்ந்தெடுக்கப்பட்ட, நறுந்தொகை தன்னால் - நறுந் தொகை என்று பெயர்பூண்ட இந்த வெற்றிவேற்கையென்னும் நூலைக்கற்று அதனாலே, குற்றம் களைவோர்-தமது குற்றங்களை நீக்கு வோர், குறைவு இலாதவர் - குறை தீர்ந்தவராவர். ஏ-அசை.

(க - து.) அதிவீரராமபாண்டியனாற் சொல்லப்பட்ட வெற்றி வேற்கை என்று பெயர்பூண்ட நறுந்தொகையாகிய இந்த நூலின் முறைப்படி நடந்தவர்கள் யாதொரு குற்றமு மில்லாதவர்களென்று சொல்லப்படுவோர்கள்.

---

## நூல்.

1. எழுத்தறி வித்தவ னிறைவ னாகும்.

(இ - ள்.) எழுத்து - (இலக்கணமுதலிய) நூல்களை, அறிவித்த வன்-கற்பித்த ஆசிரியன், இறைவன் ஆகும்-கடவுள் ஆவான்.

(க - து.) நூல்களைக் கற்பித்த குருவே கடவுளாவான். (க)

2. கல்விக் கழகு கசடற மொழிதல்.

(இ - ள்.) கல்விக்கு - வித்தைக்கு, அழகு - அழகாவது, கசடு அற - குற்றம் நீங்க, மொழிதல் - பேசுதலாம்.

(க - து.) படித்த படிப்புக்கு அழகு பேசுஞ்சொற்களில் குற் றம் நீங்கப் பேசுதல். (உ)

### 3. செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்.

(இ - ள்.) செல்வர்க்கு - தனவான்களுக்கு, அழகு - அழகாவது, செழு - செழுமையாகிய, கிளை - சுற்றத்தாரை, தாங்குதல் - காப்பாற்றுதலாம்.

(க - து.) பணமுள்ளவர்க்கு அழகு பந்துக்களைக் காப்பாற்றல்.

### 4. வேதியர்க் கழகு வேதமு மொழுக்கமும்.

(இ - ள்.) வேதியர்க்கு - பிராமணர்க்கு, அழகு - அழகாவது, வேதமும் - வேதம் (ஓதுதலும்), ஒழுக்கமும் - (அவ்வேத விதிப்படி) ஒழுக்கந்தவறாது நிற்றலுமாம்.

(க - து.) பிராமணருக்கு அழகு வேதமோதலும் அவ் வேத விதிப்படி நடத்தலும். (ச)

### 5. மன்னவர்க் கழகு செங்கோன் முறைமை.

(இ - ள்.) மன்னவர்க்கு - அரசருக்கு, அழகு - அழகாவது, செங்கோல் முறைமை - அரச நீதிப்படி நடத்தலாம்.

(க - து) அரசருக்கு அழகு மனுநீதிப்படி அரசாளல். (ரு)

### 6. வைசியர்க் கழகு வளர்பொரு ளீட்டல்.

(இ - ள்.) வைசியர்க்கு - வணிகர்க்கு, அழகு - அழகாவது, வளர் பொருள் - வளர்தற்குரிய பொருளை, ஈட்டல் - சம்பாதித்தலாம்.

(க - து.) செட்டிகளுக்கு அழகு நாணயந் தவறாது பொருள் சம்பாதித்தல். (சு)

### 7. உழவர்க் கழகிங் குழுதூண் விரும்பல்.

(இ - ள்.) உழவர்க்கு - உழுது பயிர்செய்யும் வேளாளர்க்கு, அழகு - அழகாவது, இங்கு - இவ்வுலகத்தில், உழுது - உழுது பயிர் செய்து, ஊண் - உண்பதற்கு, விரும்பல் - விரும்புதலாம்.

(க - து ) வேளாளருக்கு அழகு உழுது பயிர்செய்து உண்ண விரும்புதல். (எ)

8. மந்திரிக் கழகு வரும்பொரு ளுரைத்தல்.

(இ - ள்.) மந்திரிக்கு - அமைச்சனுக்கு, அழகு - அழகாவது, வரும்பொருள் - மேல்வருங் காரியங்களை, உரைத்தல் - (முன்னறிந்து) அரசர்களுக்குச் சொல்லுதலாம்.

(க - து.) மந்திரிகளுக்கு அழகு மேல்வருங் காரியங்களை முன் அறிந்து அரசர்களுக்குச் சொல்லுதல். (அ)

9. தந்திரிக் கழகு தறுக ணாண்மை.

(இ - ள்.) தந்திரிக்கு - சேனைத்தலைவனுக்கு, அழகு - அழகாவது, தறுகண் - சண்டையில் அஞ்சாத, ஆண்மை - தைரியமுடைமையாம்.

(க - து.) சேனைபதிக்கு அழகு சண்டையி லஞ்சாத ஆண்மை. ()

10. உண்டிக் கழகு விருந்தோ டுண்டல்.

(இ - ள்.) உண்டிக்கு - (ஒருவன் உண்ணும்) உணவிற்கு, அழகு - அழகாவது, விருந்தோடு - விருந்தினரோடு, உண்டல் - உண்ணுதலாம்.

(க - து.) ஒருவன் உண்ணும் உணவிற்கு அழகு விருந்தாளிகளோடு உண்ணுதல். (கo)

11. பெண்டிர்க் கழகெதிர் பேசா திருத்தல்.

(இ - ள்.) பெண்டிர்க்கு - மனைவியர்க்கு, அழகு - அழகாவது, எதிர் பேசாது - (தம் கணவரோடு) எதிர்த்துப் பேசாமல், இருத்தல் - (அடங்கி) இருத்தலாம்.

(க - து.) மனைவியர்க்கு அழகு தங்கணவருக்கு அடங்கி இருத்தல். (கக)

## 12. குலமகட் கழகுதன் கொழுநனைப் பேணுதல்.

(இ - ள்.) குலமகட்கு - (நல்ல) குலத்திற் பிறந்த ஸ்திரீக்கு, அழகு - அழகாவது, தன் கொழுநனை - தன் கணவனை, பேணுதல் - (உண்டி முதலியவைகளால்) உபசரித்தலாம்.

(க-து.) குலஸ்திரீகளுக்கு அழகு கணவனை உபசரித்தல். (கஉ)

## 13. விலைமகட் கழகுதன் மேனி மினுக்குதல்.

(இ - ள்.) விலைமகட்கு - வேசைக்கு, அழகு - அழகாவது, தன் மேனி - தன் உடம்பை, மினுக்குதல் - (ஆடை ஆபரணங்கள் முதலியவைகளால்) அழகு செய்துகொள்ளலாம்.

(க - து.) வேசிகளுக்கு அழகு தங்களுடம்பை ஆடையாபரணங்களால் அலங்காரஞ் செய்துகொள்ளல். (கங)

## 14. அறிவோர்க் கழகு கற்றுணர்ந் தடங்கல்.

(இ-ள்.) அறிவோர்க்கு - அறிவுடையோர்க்கு, அழகு - அழகாவது, கற்று - (நூல்களை) வாசித்து, உணர்ந்து - (ஒழுக்கங்களை) அறிந்து, அடங்கல் - (அவ்வொழுக்க முறையில்) அடங்கி நிற்றலாம்.

(க - து.) அறிவுடையோருக்கு அழகு நூல்களை வாசித்து அவ்வழியே அடங்கி நடத்தல். (கச)

## 15. வறியோர்க் கழகு வறுமையிற் செம்மை.

(இ-ள்.) வறியோர்க்கு - தரித்திருக்கு, அழகு - அழகாவது, வறுமையில் - தரித்திரகாலத்திலும், செம்மை - (ஒழுக்கமு நாணமும்) கெடாம லிருத்தலாம்.

(க-து.) தரித்திரர்களுக்கு அழகு எப்படிப்பட்ட தரித்திரகாலத்திலும் ஒழுக்கந் தவறு திருத்தல். (கரு)

அதனால் - ஆகையால்,

16. தேம்படு பனையின் றிரள்பழத் தொருவிரை
வானுற வோங்கி வளம்பெற வளரினும்
ஒருவற் கிருக்க நிழலா காதே.

(இ - ள்.) பனையின் - பனைமரத்தினது, தேம்படு - இனிமையா இருக்கின்ற, திரள் பழத்து - திரண்ட பழத்திலுள்ள, ஒரு விரை - ஒரு பெரிய விரையானது, வான் உற - ஆகாயத்தைப் பொருந்த, ஓங்கி - உயர்ந்து, வளம் பெற - செழுமையாக, வளரினும் - வளர்ந் தாலும், ஒருவற்கு இருக்க - ஒருவன் இருப்பதற்கும், நிழல் ஆகாது - நிழலைத்தராது.

(க - து.) பனைமரமானது ஆகாயமளாவ வளர்ந்திருந்தாலும் ஒருவர் தங்கியிருக்கவும் நிழலைக் கொடாது. (கசு)

17. தெள்ளிய வாலின் சிறுபழத் தொருவிரை
தெண்ணீர்க் கயத்துட் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே யாயினு மண்ணல் யானை
அணிதேர் புரவி யாட்பெரும் படையோடு
மன்னர்க் கிருக்க நிழலா கும்மே.

(இ-ள்.) ஆலின் - ஆலமரத்தினது, சிறு பழத்து - சிறிய பழத்திலுள்ள, தெள்ளிய - தெள்ளியெடுக்கத்தக்க, ஒரு விரை - ஒரு வித்தானது, தெள் நீர் - தெளிந்த நீரையுடைய, கயத்துள் - குளத்திலுள்ள, சிறு மீன் - சிறிய மீனினது, சினையினும் - முட்டையினும், நுண்ணிதே ஆயினும் - சிறியதாய் இருக்கினும் (அதுமரமாக வளருமா

யின்), அண்ணல் - பெருமை பொருந்திய, யானை - யானையும், அணி தேர் - அழகிய தேரும், புரவி - குதிரையும், ஆள் - காலாள்களும் (ஆகிய), பெரும் படையொடு - பெரிய சேனைகளோடு, மன்னர்க்கு இருக்க - அரசர்களுக்கிருக்க, நிழல் ஆகும்-நிழலைத் தரும். ஏ-அசை.

(க - து) ஆலம்பழத்தின் விதை சிறிய மீனினது முட்டையைப் பார்க்கினும் சிறியதா யிருந்தாலும் அது முளைத்து வளர்ந்து மரமானபிறகு அரசர்கள் தங்கள் சேனைகளோடு தங்கியிருக்க நிழலைத் தரும். (கஎ)

அதனால் - ஆகையால்,

## 18. பெரியோ ரெல்லாம் பெரியரு மல்லர்.

(இ - ள்.) பெரியோர் எல்லாம் - (உருவில்) பெரியோ ரெல்லாம், பெரியரும் அல்லர் - (அறிவில்) பெரியோராகார்.

(க - து.) அறிவிலாதவர் உருவத்திலும் வயதிலும் பெரியராயினும் அவர் பெரியராகார். (கஅ)

## 19. சிறியோ ரெல்லாம் சிறியரு மல்லர்.

(இ - ள்.) சிறியோர் எல்லாம் - (உருவில்) சிறியவரெல்லாம், சிறியரும் அல்லர் - (அறிவில்) சிறியவராகார்.

(க-து) அறிவுடையோர் உருவத்திலும் வயதிலும் சிறியராயினும் அவர் சிறியராகார். (கக)

## 20. பெற்றோ ரெல்லாம் பிள்ளைக ளல்லர்.

(இ-ள்.) பெற்றோர் எல்லாம்-(ஒருவர் பெற்ற) பிள்ளைகளெல்லாம், பிள்ளைகள் அல்லர்-(அறிவொழுக்கமுடைய) புதல்வர்களாகார்.

(க - து.) அறிவுடைய பிள்ளைகளே பிள்ளைகளாவரன்றி அறிவிலாப் பிள்ளைகள் பிள்ளைகளாகமாட்டார்கள். (உ0)

**21.** உற்றோ ரெல்லா முறவின ரல்லர்.

(இ-ள்.) உற்றோர் எல்லாம் - உறவின ரெல்லாம், உறவினர் அல்லர் - (அன்புள்ள) உறவினராகார்.

(க-து.) அன்புள்ள உறவினர்தாம் உறவினராவர்; அன்பில்லா உறவினர் உறவினராகார். (உக)

**22.** கொண்டோ ரெல்லாம் பெண்டிரு மல்லர்.

(இ-ள்.) கொண்டோர் எல்லாம்-கொண்ட மனைவியர் யாவரும், பெண்டிரும் அல்லர் - (கற்புடைய) மனைவியராகார்.

(க-து.) கற்புத்தன்மையுடைய மனைவியர்கள்தாம் மனைவியர்களன்றி, கற்புத்தன்மை யில்லாத மனைவியர்கள் மனைவியராகார்கள். (உஉ)

**23.** அடினு மாவின்பா றன்சுவை குன்றாது.

(இ-ள்.) ஆவின்பால் - பசுவின்பால், அடினும் - காய்ச்சப்படினும், தன் சுவை - தன்னுடைய சுவையில், குன்றாது-குறையாது (மிகும்).

(க-து.) பாலை எவ்வளவு சுண்டக் காய்ச்சினும் அது அளவு குறையுமேயன்றி உருசி குறையாது. (உங)

**24.** சுடினுஞ் செம்பொன் றன்னொளி கெடாது.

(இ-ள்.) செம் பொன்-சிவந்த பொன், சுடினும்-சுடப்படினும், தன் ஒளி-தன்னுடைய மாற்றொளி, கெடாது-கெடாது (மிகும்).

(க-து.) பொன்னைப் புடம் போடப் போட அது மாற்றுயர்ந்து பிரகாசிக்கும். (உச)

25. அரைக்கினுஞ் சந்தனந் தன்மண மறாது.

(இ - ள்.) சந்தனம் - சந்தனக்கட்டை, அரைக்கினும் - அரைக்கப்பட்டாலும், தன் மணம் - தன் வாசனை, அறாது - குறைந்துபோகாது.

(க - து.) சந்தனக்கட்டை எவ்வளவு அரைக்கப்பட்டாலும் அது தன் வாசனையிற் சிறிதுங் குறையாது. (உரு)

26. புகைக்கினுங் காழகில் பொல்லாங்கு கமழாது.

(இ-ள்.) காழ் - வயிரம்பற்றிய, அகில் - அகிற்கட்டை, புகைக்கினும் - புகைக்கப்பட்டாலும், பொல்லாங்கு - துர்க்கந்தம், கமழாது - வீசாது.

(க-து.) அகிற்கட்டையைப் புகையச் செய்யினும் அது கெட்ட வாசனை வீசாது. (உசு)

27. கலக்கினுந் தண்கடல் சேறா காதே.

(இ - ள்.) தண் கடல் - குளிர்ச்சிபொருந்திய கடல், கலக்கினும் - கலக்கப்படினும், சேறு ஆகாது - சேறாகமாட்டாது. ஏ - அசை.

(க - து.) கடலைக் கலக்கினாலும் தண்ணீர் அதிகமிருத்தலால் அது சேறாகாது. (உஎ)

28. அடினும்பால் பெய்துகைப் பறாதுபேய்ச் சுரைக்காய்.

(இ - ள்.) பேய்ச்சுரைக்காய் - பேய்ச்சுரைக்காயானது, பால் பெய்து - பாலைவிட்டு, அடினும் - சமைக்கப்படினும், கைப்பு - கசப்பு, அறாது - நீங்காது.

(க - து.) பேய்ச்சுரைக்காயில் பாலைவிட்டுச் சமையல் செய்யினும் அது கசப்பு நீங்காது. (உஅ)

29. ஊட்டினும் பல்விரை யுள்ளி கமழாதே.

(இ - ள்.) உள்ளி - உள்ளிப்பூண்டானது, பல் விரை - பல வாசனைகளை, ஊட்டினும் - உண்பிக்கப்படினும், கமழாது - நற்கந்தம் வீசாது. ஏ-அசை.

(க - து.) உள்ளிப்பூண்டைப் பலவித வாசனைகளைச் சேர்த்துச் சமைத்தாலும், அது துர்வாசனை நீங்காது. (உகூ)

30. ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே.

(இ - ள்.) ஒருநாள் - ஒருதினம், பழகினும் - பழகினலும், பெரியோர் - பெரியோருடைய, கேண்மை - உறவு (சிநேகம்), இரு நிலம் பிளக்க - பெரிய பூமி பிளக்க, வேர் வீழ்க்கும் - மரத்திற்கு வேர் உறுதி தருவதுபோல நிலைபெற்று நிற்கும். ஏ-அசை.

(க - து.) அறிவுடையோர்களிடத்து ஒருதினம் பழகினலும் அவர்களுடைய சிநேகம் பூமியில் வேறிரங்கி நிற்கும் விருக்ஷம்போல நிலைபெறும். (௩௦)

31. நூறாண்டு பழகினு மூர்க்கர் கேண்மை
நீர்க்குட் பாசிபோல் வேர்க்கொள் ளாதே.

(இ - ள்) மூர்க்கர்-மூடரோடு, நூறு ஆண்டு பழகினும்-நூறு வருடம் பழகினலும், கேண்மை - உறவாந் தன்மை, நீர்க்குள் - நீரி லுள்ள, பாசிபோல்-பாசியைப்போல, வேர் கொள்ளாது-நிலைபெருது.

(க - து.) மூடர்களோடு நூறு வருடம் பழகினலும் அவர்கள் சிநேகம் ஜலத்திலுள்ள பாசியைப்போல் நிலைபெற்று நில்லாது. (௩க)

அதனால் - ஆகையால்,

32. பெருமையுஞ் சிறுமையுந் தான்தர வருமே.

(இ-ள்.) பெருமையும் - மேன்மையும், சிறுமையும் - கீழ்மையும், தான் தர - (ஒருவன்) தானே உண்டாக்கிக்கொள்ள, வரும் - (அவனிடத்து) வரும். ஏ-அசை.

(க - து.) ஒருவனுக்குச் சிறுமையும் பெருமையும் அவன் நடவடிக்கையினால் உண்டாகும். (௩௨)

33. சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம்
பெரியோ ராயிற் பொறுப்பது கடனே.

(இ-ள்.) சிறியோர் செய்த-கீழோர் செய்த, சிறு-சிறிய, பிழை-குற்றங்கள், எல்லாம்-எல்லாவற்றையும், பெரியோர் ஆயின்-மேலோர்கள் ஆனால், பொறுப்பது - சகிப்பது, கடன்-கடனாம். ஏ-அசை.

(க - து.) சிறியோர்கள் சிறிய பிழையைச் செய்வார்களானால் அதைப் பெரியோர் பொறுத்துக்கொள்ளவேண்டுதல் கடமை. (௩௩)

34. சிறியோர் பெரும்பிழை செய்தன ராயின்
பெரியோ ரப்பிழை பொறுத்தலு மரிதே.

(இ - ள்.) சிறியோர் - கீழோர், பெரும்பிழை-பெரிய குற்றங்களை, செய்தனர் ஆயின்-செய்வார் ஆனால், பெரியோர்-மேலாயினோர், அப்பிழை - அக்குற்றத்தை, பொறுத்தலும் - பொறுத்துக்கொள்ளுதலும், அரிது - அரிதாம். ஏ-அசை.

(க - து) சிறியவர்கள் பிறரால் சகிக்கக்கூடாத பிழைகளைச் செய்வார்களானால் பெரியோர்கள் அப்பிழைகளைப் பொறுக்கமாட்டார்கள். (௩௪)

அதனால் - ஆகையால்,

35. கற்கை நன்றே கற்கை நன்றே.

(இ - ள்.) கற்கை - நூல்களைக் கற்றறிதல், நன்றே - நல்லதே, கற்கை - நூல்களைக் கற்றறிதல், நன்றே - மிகவும் நல்லதே.

(க - து.) எவ்வித நலங்களினும் பெரியது கல்வி நலமே. (௩௫)

36. பிச்சை புகினுங் கற்கை நன்றே.

(இ-ள்.) பிச்சை புகினும்-பிச்சை யெடுத்தாலும் (இரந்தாலும்), கற்கை - கற்றுணர்தல், நன்று-நல்லதேயாம். ஏ-தேற்றம்.

(க - து.) பிச்சை யெடுக்கப்போனாலும் கல்வியிருக்கவேண்டும். (௩௬)

37. கல்லா வொருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுட் பிறந்த பதரா கும்மே.

(இ-ள்.) கல்லா-கல்லாத, ஒருவன்-ஒருவன், குலம் நலம்-தன் குலச்சிறப்பை, பேசுதல் - எடுத்துப் பேசுவது, நெல்லினுள்-நெல்லினுள்ளே, பிறந்த - தோன்றிய, பதர் ஆகும் - பதரை ஒக்கும். ஏ-அசை.

(க - து.) வாசியாத ஒருவன் தன் குலச்சிறப்பை எடுத்துப்பேசுவது நெல்லினுள் பிறந்த பதரை ஒக்கும். (௩௭)

38. நாற்பாற் குலத்தின் மேற்பா லொருவன்
கற்றில னாயிற் கீழிருப் பவனே.

(இ - ள்.) நால் பால்-நான்கு வகுப்பான, குலத்தில்-சாதிகளுள், மேல் பால் - மேற்பட்ட சாதியிற் (பிறந்த), ஒருவன் - ஒருவன், கற்றிலன் ஆயின் - கல்லாதவனாயிருந்தால், கீழ் இருப்பவனே-கீழ் வருணத்தானாகவே எண்ணப்படுவான். ஏ-தேற்றம்.

(க - து.) ஒருவன் உயர்ந்த சாதியிற் பிறந்திருந்தாலும் அவன் கல்வியில்லாதவனானால் அவனைத் தாழ்ந்தவனாகவேயெண்ணுவார்கள்.

39. எக்குடி பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடி கற்றோரை மேல்வரு கென்பர்.

(இ - ள்.) எக்குடி பிறப்பினும் - எவ்வகைப்பட்ட தாழ்ந்த குடியிற் பிறந்தவராயினும், யாவரே ஆயினும்-எவ்வளவு தாழ்ந்தவருணத்தாராயினும், அக்குடி - அவ்விழிந்த குடியில் (பிறந்த), கற்றோரை-கற்றவர்களை, மேல் - மேலிடத்து, வருக என்பர் - வருகவென்று உபசரிப்பர்.

(க து.) ஒருவன் இழிந்த சாதியனாயும் அதிலும் இழிந்தவமிசத்தனாயும் பிறந்திருந்தாலும், அவன் படிப்பாளியாயிருந்தால், அறிவுடையோர்கள் தாங்களிருக்கும் உயர்ந்த இடத்திற்கு வாவென்றழைத்து மரியாதை செய்வார்கள். (௩௯)

40. அறிவுடை யொருவனை யரசனும் விரும்பும்.

(இ - ள்.) அறிவுடை ஒருவனை - கல்வியறிவுடையவனை, அரசனும் - வேந்தனும், விரும்பும் - விரும்புவான்.

(க - து:) அறிவுடையோனை அரசனும் விரும்புவான். (௪0)

அதனால் - ஆகையால்,

41. அச்சமுள் ளடக்கி யறிவகத் தில்லாக்
கொச்சை மக்களைப் பெறுதலி னக்குடி
எச்சமற் றேமாந் திருக்கை நன்றே.

(இ - ள்.) அச்சம் உள் அடக்கி - பயத்தை உள்ளே அடக்கிக்கொண்டு, அறிவு அகத்து இல்லா - அறிவு (சிறிதும்) உள்ளேயில்

லாத, சொச்சை - ஆடுகளை ஒத்த, மக்களை-பிள்ளைகளை, பெறுதலின்-பெறுவதிலும், அக்குடி - அந்தக் குலத்துள்ளார், எச்சம் அற்று-சந்ததி யில்லாமல், ஏமாந்து இருக்கை - களிப்புற் றிருப்பது, நன்று-நலமே. ஏ-அசை.

(க - து.) நற்குலத்தார் அறிவில்லாத பிள்ளைகளைப் பெற்றுத் துக்கப்படுவதைப் பார்க்கிலும் பிள்ளைக ளில்லாமல் சந்தோஷித்திருப்பது நல்லதாயிருக்கும். (சக)

## 42. யானைக் கில்லை தானமுந் தருமமும்.

(இ - ள்.) யானைக்கு - யானைக்குக் (கை நீண்டிருப்பினும்), தானமும்-கொடுத்தலும், தருமமும்-தருமஞ் (செய்தலும்), இல்லை-இல்லை.

(க-து.) யானைக்குக் கை நீண்டிருப்பது போல் உலோபிகளுக்குக் கை நீண்டிருப்பினும் அவர்கள் தானதருமஞ் செய்யார்கள். ()

## 43. பூனைக் கில்லை தவமுந் தயையும்.

(இ - ள்.) தவமும் - தவஞ் செய்தலும், தயையும்-சாந்தகுணமுடைமையும், பூனைக்கு-பூனைக்கு, இல்லை - இல்லை .

(க - து.) பூனைபோலும் வஞ்சக நெஞ்சமுள்ளவர்களை நம்பப்படாது. (சஙு)

## 44. ஞானிக் கில்லை இன்பமுந் துன்பமும்.

(இ - ள்.) ஞானிக்கு - ஞானமுடையவனுக்கு, இன்பமும்-சுகமும், துன்பமும் - துக்கமும், இல்லை - இல்லை.

(க - து.) ஞானிகளுக்குச் சுகமும் துக்கமும் இல்லை. (சச)

45. சிதலைக் கில்லை செல்வமுஞ் செருக்கும்.

(இ - ள்.) சிதலைக்கு - செல்லுக்கு, செல்வமும் - (பிறர்க்குப் பயன்படும்) செல்வமுள்ளவர் பொருளென்பதும், செருக்கும்-(தாமே) உண்டு களிப்பவருடைய பொருளென்பதும், இல்லை - இல்லை.

(க - து.) தமக்கன்றிப் பிறருக்கும் பயன்படும் செல்வர்கள் பொருளென்றும், பிறருக்குக் கொடாது தாமே உண்டு செருக்கடைபவர்கள் பொருளென்றும் செல்லுகள் எண்ணாமல் பொருள்களை அரிக்கும். (சரு)

46. முதலைக் கில்லை நீத்து நிலையும்.

(இ - ள்.) முதலைக்கு - முதலைக்கு, நீத்தும்-நீந்துதற்கு எற்ற நீரென்பதும், நிலையும்-நிலைக்கு எற்ற நீரென்பதும், இல்லை-இல்லை.

(க - து.) முதலைக்கு நீந்தும் நீரென்றும் நிலைக்கு நீரென்றும் இல்லாமல் அது எவ்வளவு ஆழமுள்ள நீரிலும் வாசஞ்செய்யும். (சசு)

இவைபோல,

47. அச்சமு நாணமு மறிவிலோர்க் கில்லை.

(இ - ள்.) அச்சமும் - அஞ்சுதலும், நாணமும் - நாணுதலும், அறிவிலோர்க்கு - அறிவீனர்க்கு, இல்லை - இல்லை.

(க-து.) அறிவில்லாதவர்களுக்கு அச்சமும் நாணமும் இல்லை.

4?. நாளுங் கிழமையு நலிந்தோர்க் கில்லை.

(இ-ள்.) நாளும் - நட்சத்திரமும், கிழமையும் - வாரமும், நலிந்தோர்க்கு - (வியாதியால்) பீடிக்கப்பட்டவர்க்கு, இல்லை - இல்லை.

(க-து.) வியாதியாளருக்கு மருந்து முதலிய கொடுப்பதற்கு நட்சத்திரத்தையும் வாரத்தையும் யோசிக்கவேண்டுவதில்லை. (சஅ)

49. கேளுங் கிளையுங் கெட்டோர்க் கில்லை.

(இ-ள்.) கேளும் - நட்பினரும், கிளையும்-சுற்றத்தாரும், கெட்டோர்க்கு - (குலம்) கெட்டோர்க்கு, இல்லை - இல்லை.

(க-து.) குலம் கெட்டவர்களுக்குச் சிநேகரும் சுற்றத்தாரும் இல்லை. (சகூ)

50. உடைமையும் வறுமையு மொருவழி நில்லா.

(இ-ள்.) உடைமையும் - பொருளுடைமையும், வறுமையும் - பொருளின்மையும், ஒருவழி-ஓரிடத்தில், நில்லா-நிற்பன அல்ல.

(க-து.) செல்வமும் தரித்திரமும் ஓரிடத்தில் நிலையாக நிற்காது. (ருo)

51. குடைநிழ லிருந்து குஞ்சர மூர்ந்தோர்
நடைமெலிந் தோரூர் நண்ணினு நண்ணுவர்.

(இ-ள்.) குஞ்சரம் - யானையின்மீது, ஊர்ந்தோர் - சென்ற அரசர், நடை மெலிந்து - நடத்தலால் வாடி, ஓர் ஊர் - ஒரு கிராமத்தை, நண்ணினும் - சேர்ந்தாலும், நண்ணுவர் - சேர்வர்.

(க-து.) குடைநிழலிலிருந்து அரசாட்சி செய்து யானையேறிச் சவாரி செய்யும் அரசர்களும் ஓர்காலத்தில் பகையரசர்களால் தமது செல்வங்களை யிழந்து நடப்பதற்கும் சக்தியற்று ஒரு ஊரை அடைந்தாலும் அடைவர்கள். (ருக)

52. சிறப்புஞ் செல்வமும் பெருமையு முடையோர்
அறக்கூழ்ச் சாலை யடையினு மடைவர்.

(இ-ள்.) சிறப்பும் - உயர்வும், செல்வமும் - ஐச்சுவரியமும், பெருமையும் - மானமும், உடையோர் - உடையவர்கள், அறம் - தரு

மத்திற் கிடப்படும், கூழ் சாலை - அன்ன சத்திரங்களை, அடையினும் அடைவர் - அடைந்தாலும் அடைவார்கள்.

(க - து.) மேன்மை செல்வம் மானம் இவைகளை உடையவர்களும் ஒரு காலத்தில் அன்ன மிடப்படும் தருமசத்திரங்களை அடைந்தாலும் அடைவர்கள். (ருஉ)

53. அறத்திடு பிச்சை கூவி யிரப்போர்
அரசோ டிருந்தர சாளினு மாளுவர்.

(இ - ள்.) அறத்து இடு பிச்சை - தருமத்துக்காக இடப்படும் பிச்சை என்று, கூவி - கூப்பிட்டு, இரப்போர் - யாசிப்பவர், அரசோடு - அரசுக்கேற்ற பல அங்கங்களோடு, இருந்து - கூடியிருந்து, அரசு ஆளினும் - அரசாண்டாலும், ஆளுவர் - ஆளுவர்.

(க-து.) பிச்சையெடுத்து உண்பவர்களும் ஒருகாலம் அரசாங்கத்தோடு கூடியிருந்து அரசாண்டாலும் ஆளுவர். (ருங)

54. குன்றத் தனையிரு நிதியைப் படைத்தோர்
அன்றைப் பகலே யழியினு மழிவர்.

(இ - ள்.) குன்று அத்தனை - மலையவ்வளவு, இரு நிதியை - மிக்கதனத்தை, படைத்தோர் - பெற்றவர்கள், அன்றைப் பகலே - அன்றைத்தினமே, அழியினும் அழிவர் - (அப்பொருளை) இழப்பினும் இழப்பர்.

(க - து.) மலையவ்வளவு மிக்க பொருளையுடைய செல்வர்கள் ஒரு பகற்பொழுதிலேயே அச்செல்வத்தை யிழந்தாலு மிழப்பர்கள்.

55. ஏழுநிலை மாடங் கால்சாய்ந் துக்குக்
கழுதை மேய்பா ழாகினு மாகும்.

(இ - ள்.) எழு நிலை - ஏழு அடுக்குகளையுடைய, மாடம் - மாளிகைகள், கால் சாய்ந்து - அடியோடே சாய்ந்து, உக்கு - நொறுங்கி, கழுதை மேய் - கழுதைகள் மேய்கின்ற, பாழ் ஆகினும் - பாழ்நிலங்களானாலும், ஆகும் - ஆகும்.

(க - து.) எழு நிலைகளையுடைய உப்பரிகைகளும் அடியோடு சாய்ந்து கழுதைகள் மேயும் பாழ்நிலங்களுமாகும். (௫௫)

56. மணவணி யணிந்த மகளி ராங்கே
பிணவணி யணிந்துதங் கொழுநரைத் தழீஇ
உடுத்த வாடை கோடி யாக
முடித்த கூந்தல் விரிப்பினும் விரிப்பர்.

(இ - ள்.) மண அணி - மணக்கோலத்தை, அணிந்த - பூண்ட, மகளிர் - மாதர்கள், ஆங்கே-அந்த மணப்பந்தலிலேயே, பிண அணி - பிணக்கோலத்தை, அணிந்து-பூண்டு, தம்-தம்முடைய, கொழுநரை-கணவரை, தழீஇ-தழுவிக்கொண்டு, உடுத்த - (முன்) உடுத்திருந்த, ஆடை - புது வஸ்திரமே, கோடியாக-(கழுத்துக்கிடும்) புது வஸ்திரமாக, முடித்த கூந்தல் - (சீவி) முடித்த தலைமயிரை, விரிப்பினும் விரிப்பர் - விரித்தாலும் விரிப்பார்கள் [விரித்து அழுவார்கள் என்றபடி].

(க-து.) மணக்கோலங் கொண்ட மாதர்கள் அந்த மணப்பந்தலிலேயே தமது கணவர்களிறக்க அக் கணவர்களைத் தழுவிக்கொண்டு இடையிலுடுத்த புது வஸ்திரத்தைக் கழுத்துக்கிடும் வஸ்திரமாகக் கொண்டு பூ முடித்த கூந்தலை விரித்து அழுதாலும் அழுவார்கள். ()

57. பெற்றமுங் கழுதையு மேய்ந்த வப்பாழ்
பொற்றொடி மகளிரு மைந்தருஞ் செறிந்து
நெற்பொலி நெடுநக ராயினு மாகும்.

(இ - ள்.) பெற்றமும் - மாடுகளும், கழுதையும்-கழுதைகளும், மேய்ந்த - மேய்ந்துகொண்டிருந்த, அப்பாழ்-அந்தப் பாழ்நிலமானது, பொன் தொடி - பொன்வளையலை யணிந்த, மகளிரும் - மாதர்களும், மைந்தரும் - புருடர்களும், செறிந்து-நெருங்கி, நெல் பொலி-நெல்லினது அம்பாரங்களையுடைய, நெடு நகர் - பெரிய நகரம், ஆயினும் ஆகும் - ஆனாலுமாகும்.

(க - து) மாடுகள் கழுதைகள் முதலியவைகள் மேய்ந்திருந்த பாழ்நிலமானது ஸ்திரீகளும் புருஷர்களும் சூழ்ந்து நெற்சேர் முதலிய பல வளங்களு மிகுந்த பெரிய பட்டணமானாலு மாகும். (டுஎ)

## 58. இல்லோ ரிரப்பது மியல்பே யியல்பே.

(இ - ள்.) இல்லோர் - தரித்திரர்கள், இரப்பதும்-யாசிப்பதும் (பிச்சையெடுப்பதும்), இயல்பே இயல்பே - இயற்கையேயாம்.

(க-து.) தரித்திரர்கள் பிச்சையெடுப்பதும் உலக இயற்கை. ()

## 59. இரந்தோர்க் கீவது முடையோர் கடனே.

(இ - ள்.) இரந்தோர்க்கு - பிச்சையெடுக்கிறவர்களுக்கு, ஈவதும் - (தன்னிடத்தி லுள்ளதை இல்லை யென்னாமல்) கொடுப்பதும், உடையோர் - பொருளுடையவரது, கடனே - கடமையேயாம்.

(க-து.) பிச்சையெடுக்கும் தரித்திரர்களுக்குக் கொடுக்கவேண்டுவதும் செல்வர்களுக்குக் கடன். (டுகூ)

## 60. நல்ல ஞாலமும் வானமும் பெறினும்
## எல்லா மில்லை இல்லில் லோர்க்கே.

(இ - ள்.) நல்ல - சிறந்த (நலம் பொருந்திய), ஞாலமும் - இவ்வுலகச் செல்வமும், வானமும் - விண்ணுலகச் செல்வமும், பெறினும் - ஒருவன் பெற்றாலும், இல் - (இல்லறத்திற் கேற்ற) மனைவி,

இல்லோர்க்கு - இல்லாதவர்களுக்கு, எல்லாம் - அனைத்தும், இல்லை - இல்லையாம். ஏ - அசை.

(க - து.) கற்புடைய மனைவி யில்லாதவர்கள் மண்ணுலகச் செல்வமும் விண்ணுலகச் செல்வமும் உடையவர்களாயினும் அச் செல்வம் இல்லாதவர்க ளென்றே சொல்லப்படுபவர்க ளாவார்கள். ()

61. தறுகண் யானை தான்பெரி தாயினும்
சிறுகண் மூங்கிற் கோற்கஞ் சும்மே.

(இ - ள்.) தறுகண் - அஞ்சாமையுள்ள, யானைதான் - யானை யானது, பெரிது ஆயினும் - (எல்லா மிருகங்களிலும்) உருவத்தாற் பெரியதாயினும், சிறு-சிறிய, கண்-கணுக்களுள்ள, மூங்கில் கோற்கு-மூங்கிற்கொம்பிற்கு, அஞ்சும் - பயப்படும். ஏ - அசை.

(க - து.) யானை உருவத்தாற் பெரிதா யிருப்பினும் சிறிய மூங் கிற் கொம்புக்கும் அஞ்சும். (சுக)

62. குன்றுடை நெடுங்கா டூடே வாழினும்
புன்றலைப் புல்வாய் புலிக்கஞ் சும்மே.

(இ - ள்.) குன்று உடை - மலைகளுடைய, நெடுங்காடு ஊடே - பெரிய காட்டிலே, வாழினும் - வாழ்ந்தாலும், புல் தலை - சிறிய தலை யையுடைய, புல்வாய் - மானானது, புலிக்கு - புலிக்கு, அஞ்சும்-பயப் படும். ஏ - அசை.

(க - து.) மானானது காட்டில் வசித்தாலும் புலிக்குப் பயப் படும். (சுஉ)

63. ஆரையாம் பள்ளத் தூடே வாழினுந்
தேரை பாம்பிற்கு மிகவஞ் சும்மே.

(இ - ள்.) ஆரை - ஆரைப்பூண்டு, ஆம் - மிகுந்த, பள்ளத்தூடு- நீரையுடைய கயத்திலே ஆழ்ந்த, வாழினும் - வாழ்ந்தாலும், தேரை - தவளையானது, பாம்பிற்கு - பாம்பினுக்கு, மிக-மிகவும், அஞ்சு-பயப் படும். ஏ - அசை.

(க - து.) ஆரைப்பூண்டு படர்ந்த ஆழமாகிய குளமுதலிய நீர் நிலைகளில் இருந்தாலும் தவளை பாம்புகளுக்குப் பயப்படும். (சுஙு)

64. கொடுங்கோன் மன்னர் வாழு நாட்டில்
கடும்புலி வாழுங் காடு நன்றே.

(இ - ள்.) கொடுங்கோல் - கொடுங்கோலையுடைய, மன்னர் - அரசர், வாழும் - வாழ்கின்ற, நாட்டில் - தேசத்தில் (இருத்தலினும்), கடு - கொடிய, புலி - புலிகள், வாழும் - வாழ்கின்ற, காடு நன்று - காட்டில் (இருத்தல்) நலம். ஏ - அசை.

(க-து.) கொடுங்கோலையுடைய அரசர்கள் ஆளும் நாட்டில் வாழ் வதைப் பார்க்கினும் புலிவாழும் காட்டில் வசிப்பது நன்மை. (சுச)

65. சான்றோ ரில்லாத் தொல்பதி யிருத்தலின்
தேன்றேற் குறவர் தேய நன்றே.

(இ - ள்.) சான்றோர் - (அறிவால்) நிறைந்தோர், இல்லா - இல்லாத, தொல் - பழமையாகிய, பதி - ஊரில், இருத்தலின் - வாழ் தலினும், தேன் - தேனை, தேர் - ஆராய்கின்ற, குறவர் - குறவர்கள் வாழ்கின்ற, தேயம் - நாடு, நன்று - நல்லதாம். ஏ - அசை.

(க - து.) அறிவில்லாதவர்கள் வாழு மூரிலிருந்து வசிப்பதைப் பார்க்கிலும் வேடர்கள் வாழும் காட்டில் வசிப்பது நல்லது.

66. காலையு மாலையு நான்மறை யோதா
அந்தண ரென்போ ரணைவரும் பதரே.

(இ - ள்.) காலையும் காலையிலும், மாலையும் - மாலையிலும், நான் மறை - நான்கு வேதங்களை, ஓதா - ஓதாத, அந்தணர் என்போர் - பிராமண ரெனப்படுவோர், அனைவரும் - யாவரும், பதர்-பதராவார். ஏ - அசை.

(க - து.) காலையிலும் மாலையிலும் வேதங்களை யோதாத பிராமணர்களைப் பதரென்று சொல்லப்படும். (சுசு)

**67.** குடியலைத் திரந்து கோலொடு நின்ற
முடியுடை யிறைவனு மூர்க்கனும் பதரே.

(இ - ள்.) குடி-குடிகளை, அலைத்து - வருத்தி, இரந்து-யாசகஞ் செய்து, கோலோடு நின்ற - கொடுங்கோலோடு கூடிநின்ற, முடியுடை - கிரீடத்தையுடைய, இறைவனும் - அரசனாகிய, மூர்க்கனும் - மூடனும், பதர் - பதராவான். ஏ - அசை.

(க - து.) குடிகளை வருத்திப் பொருள் பறிக்கின்ற அரசனைப் பதரென்று சொல்லப்படும். (சுஎ)

**68.** முதலுள பண்டங் கொண்டுவா ணிபஞ்செய்
ததன்பய னுண்ணா வணிகரும் பதரே.

(இ - ள்.) முதல் உள - தம்மிடத்துள்ள முதற்பொருளால், பண்டம் கொண்டு-(நெல் மணி முதலிய) சரக்குகளை வாங்கி, வாணிபம் செய்து - வியாபாரஞ் செய்து, அதன் பயன் - அதனால் வரும் இலாபத்தை, உண்ணா - அனுபவியாத, வணிகரும் - வைசியரும், பதர் - பதராவர். ஏ - அசை.

(க - து.) முதற்பொருளால் இலாபஞ் சம்பாதித்து உண்ணாது அம் முதற்பொருளைச் செலவழிக்கும் வர்த்தகர்களைப் பதரென்று சொல்லப்படும். (சுஅ)

69. வித்து மேரு மூளவா யிருப்ப
எய்த்தங் கிருக்கு மேழையும் பதரே.

(இ-ள்.) வித்தும் ஏரும் - விதையும் ஏரும், உள ஆய் இருப்ப - உள்ளனவாயிருக்க, எய்த்து - (சோம்பலினால்) இளைப்படைந்து, இருக்கும் - இருக்கின்ற, ஏழையும் - அறிவீனனும், பதர் - பதராவான். அங்கு, ஏ - அசை.

(க-து.) ஏருழவேண்டியதற்குச் சகல உபகரணமும் நேர்ந்திருக்க அத்தொழிலைச் செய்யாது சோம்பலடைந்திருக்கும் அறிவீனனைப் பதரென்று சொல்லப்படும். (சுகூ)

70. தன்மனை யாளைத் தாய்மனைக் ககற்றிப்
பின்பவட் பாராப் பேதையும் பதரே.

(இ-ள்.) தன் மனையாளை - தன் மனைவியை, தாய் மனைக்கு - தாய் வீட்டிற்கு, அகற்றி - போக்கி, பின்பு - பின்னர், அவள் பாரா - அவளைப் பாராமலிருக்கிற, பேதையும் - மூடனும், பதர் - பதராவான்.

(க-து.) தன் மனைவியைத் தாய் வீட்டிற் கனுப்பிப் பிறகு அவளைப் பாராம லிருக்கிற அறிவீனனைப் பதரென்று சொல்லப்படும். (எ০)

71. தன்மனை யாளைத் தனிமனை யிருத்திப்
பிறன்மனைக் கேகும் பேதையும் பதரே.

(இ-ள்.) தன் மனையாளை - தன் மனைவியை, தனி மனை இருத்தி - தன் வீட்டில் தனிமையாக இருக்கச்செய்து, பிறன் மனைக்கு - பிறன் மனையாளிடத்து, ஏகும் - செல்லுகின்ற, பேதையும் - மூடனும், பதர் - பதராவான். ஏ - அசை. (எக)

(க-து.) தன் மனைவியைத் தனியாக வீட்டிலிருத்தி அன்னியனுடைய ஸ்திரீயைச் சேருபவனையும் பதரென்று சொல்லப்படும்.()

72. தன்னா யுதமுந் தன்கையிற் பொருளும்
பிறன்கையிற் கொடுக்கும் பேதையும் பதரே.

(இ - ள்.) தன் - தன்னுடைய, ஆயுதமும் - ஆயுதத்தையும், தன் கையில் - தன் கையிலிருந்த, பொருளும் - திரவியத்தையும், பிறன் கையில் - பிறனுடைய கையில், கொடுக்கும் - கொடுத்துவிட்டிருக்கும், பேதையும் - மூடனும், பதர் - பதராவன். ஏ - அசை.

(க - து.) தனது ஆயுதத்தையும் தனது பொருளையும் பிறனுடைய கையிற் கொடுத்துவிட்டு ஏமாந்திருக்கும் அறிவில்லாதவனையும் பதரென்று சொல்லப்படும். (எ௨)

73. வாய்ப்பறை யாகவு நாக்கடிப் பாகவும்
சாற்றுவ தொன்றைப் போற்றிக் கேண்மின்.

(இ - ள்.) வாய் - வாயே, பறை ஆகவும் - பறையாகவும், நாக்கு - நாவே, அடிப்பு ஆகவும் - அப்பறைபடிக்குங் கோலாகவும், சாற்றுவது ஒன்றை - சொல்வதொன்றை, போற்றி - (மனம் மற்றொன்றில் செல்லாமல்) காத்து, கேண்மின் - கேளுங்கள்.

(க - து.) மனதை வேறொன்றிற் செலுத்தாது பிறன் சொல்வதைக் கேட்கவேண்டும். (எ௩)

74. பொய்யுடை யொருவன் சொல்வன் மையினால்
மெய்போ லும்மே மெய்போ லும்மே.

(இ - ள்.) பொய் உடை ஒருவன் - பொய் பேசுதலையுடைய ஒருவன், சொல் வன்மையினால் - சொல்லுந் திறத்தால், மெய்போலும்மே மெய்போலும்மே - (அவன்பேசும் பொய்) மெய்போலவே தோன்றும்.

(க-து.) பொய் பேசவல்லவன் சொல்லுஞ் சாமர்த்தியத்தினால் அவன் சொல்லும் பொய்யும் மெய்போலவே தோன்றும். (எச)

75. மெய்யுடை யொருவன் சொன்மாட் டாமையால்
பொய்போ லும்மே பொய்போ லும்மே.

(இ-ள்.) மெய் உடை ஒருவன் - மெய் பேசுகிற ஒருவன், சொல் மாட்டாமையால் - பேசுந் திறம் இன்மையால், பொய்போலும்மே பொய்போலும்மே - (அவன் சொல்லும் மெய்) பொய்போலவே தோன்றும்.

(க-து.) மெய்யுடைய ஒருவன் பேசுவதற்குத் திறமில்லாமையினால் அவன் சொல்லும் மெய் பொய்போலவே தோன்றும். ()

அதனால் - ஆகையால்,

76. இருவர்தஞ் சொல்லையு மெழுதரங் கேட்டே
இருவரும் பொருந்த வுரையா றாயின்
மனுநெறி முறையின் வழக்கிழந் தவர்தாம்
மனமுற மறுகிநின் றழுத கண்ணீர்
முறையுறத் தேவர் மூவர் காக்கினும்
வழிவழி யீர்வதோர் வாளா கும்மே.

(இ-ள்.) இருவர்தம் - வாதிப்பிரதிவாதிகளுடைய, சொல்லையும் - வாக்குமூலங்களையும், எழுதரம் கேட்டு - (மடக்கி மடக்கி) எழுமுறை விசாரித்து, இருவரும் - அவ்விருவரும், பொருந்த - ஒருமைப்பட, மனுநெறி முறையின் - மனுநீதி முறைப்படி, உரையான் ஆயின் - (ஒருவன்) தீர்ப்புச் சொல்லானாயின், மனம் - மனமானது, உற மறுகி நின்று - மிகக் கலக்கமுற்றுநின்று, வழக்கு இழந்தவர் - வழக்கில் தோற்றவர், அழுத கண்ணீர் - அழுத கண்ணீரானது, முறை உற -

முறையாக, தேவர் மூவர் - அயன், அரி, அரன் என்னு முத் தேவர்களும், காக்கினும் - காத்தாலும், வழி வழி-(அவனுடைய) சந் ததியை, ஈர்வது - அறுப்பதாகிய, ஓர்-ஒப்பற்ற, வாள் ஆகும்-வாளா யிருக்கும். தாம், ஏ - அசை.

(க-து.) அரசனாயினும் அரசாங்க அதிகாரத்தை மேற்கொண்ட உத்தியோகஸ்தனாயினும் வாதிப்பிரதிவாதிகள் சொல்லும் வார்த்தை களை எழுதாங் கேட்டு நீதிப்பிரகாரம் தீர்ப்புச் சொல்லானாயின் வழக் கிழந்தவர்கள் அழுத கண்ணீரே வாளாக நின்று அவன் வமிசத்தை அறுத்துவிடும். (எசு)

77. பழியா வருவது மொழியா தொழிவது.

(இ - ள்.) பழி ஆ - நிந்தையோடு, வருவது - வருஞ்சொற்களை, மொழியாது - சொல்லாது, ஒழிவது - நீங்குவது நலம்.

(க - து.) நிந்தையாய் வருஞ் சொற்களைச் சொல்லலாகாது. ()

78. சுழியா வருபுன லிழியா தொழிவது.

(இ-ள்.) சுழியா - சுழித்துக்கொண்டு வரு புனல் - வருகின்ற நீரில், இழியாது - இறங்காது, ஒழிவது-நீங்குவது நலம்.

(க - து.) சுழித்துக்கொண்டு வரும் ஆழமுள்ள நீரிலே இறங்கா திருத்தல் வேண்டும். (எஅ)

79. துணையோ டல்லது நெடுவழி போகேல்.

(இ - ள்.) துணையோடு அல்லது - துணையுடனே அல்லாமல், நெடு வழி - தூரமான வழியில், போகேல் - போகாதே.

(க து.) துணையில்லாமல் நெடுந்தூரம் போகக்கூடாது. (எகூ)

80. புணைமீ தல்லது நெடும்புன லேகேல்.

(இ - ள்.) புணைமீது அல்லது - தெப்பதின்மீது அல்லாமல், நெடும் புனல் - மிக்க நீரில், ஏகேல் - செல்லாதே.

(க - து.) அதிகமான ஜலத்தைத் தெப்பமின்றிக் கடத்த லாகாது. (அ0)

81. எழிலார் முலைவரி விழியார் தந்திரம்
இயலா தனகொடு முயல்வா காதே.

(இ - ள்.) எழில் ஆர் - அழகு பொருந்திய, முலை-ஸ்தனங்களை யும், வரி - வரிகள் பொருந்திய, விழியார் - கண்களையுடைய மாதர் கள், தந்திரம்-(சொல்லும்) உபாயத்தில், இயலாதன கொடு-பொருந் தாதவைகளைக் கொண்டு, முயல்வு ஆகாது-முயற்சி செய்தல் ஆகாது. ஏ - அசை.

(க-து.) ஸ்திரீகள் செய்யும் தந்திரத்தினால் பொருந்தாத செயல் களைச் செய்யக்கூடாது. (அக)

82. வழியே யேகுக வழியே மீளுக.

(இ - ள்.) வழியே ஏகுக-நல்ல வழியிலேயே செல்லுக, வழியே மீளுக - அவ்வழியிலேயே திரும்புக.

(க - து.) வழியே போய் வழியே திரும்ப வேண்டும். (அஉ)

83 இவைகா ணுலகிற் கியலா மாறே.

(இ - ள்,) இவை - இவ்வறங்கள்தாம், உலகிற்கு - உயர்ந்தோர் க்கு, இயலாம் - பொருந்திய, ஆறு - வழியாம். காண், ஏ - அசை. ()

(க - து.) இந்நூலிற் கூறியவைகள் அறிவுடையோர்கள் செல்லும் வழியாம்.

84. வாழிய நலனே வாழிய நலனே.

(இ - ள்.) நலன் - (எல்லா) நன்மைகளும், வாழிய - வாழ்க, நலன் - (எல்லா) இன்பங்களும், வாழிய-வாழ்க. ஏ - அசை.

(க - து.) எல்லா நன்மைகளும் இன்பங்களும் வாழ்க. (அச)

## வெற்றிவேற்கை மூலமும் உரையும்

முற்றிற்று.



# தமிழ்.



சம்ஸ்கிருதம் தமிழ் என்னும் இரண்டு பாஷைக்கும் முதலாசிரியர் சிவபெருமான். சிவபெருமான் சம்ஸ்கிருதத்துக்கு இலக்கணநூல் பாணினிமுனிவருக்கும், தமிழுக்கு இலக்கணநூல் அகத்தியமுனிவருக்கும் அருளிச்செய்தார். அம்முனிவர்கள் இருவரும் முறையே அம்முதனூல்கள் இரண்டின் வழியாகப் பாணினீயம் அகத்தியம் என்னுநூல்களை அருளிச்செய்தார்கள். திராவிட மென்னும் வடமொழி தமிழென்ருயிற்று.

தமிழ் வழங்கு நிலம், பரதகண்டத்தில் வடக்கின்கண்ணே திருவேங்கடமும், தெற்கின்கண்ணே கன்னியாகுமரியும், கிழக்கின்கண்ணும் மேற்கின்கண்ணும் கடலும், எல்லையாக உடைய தென்ஞடாம். இத்தென்ஞடு திராவிடதேசமெனப் பெயர் பெறும். இத்தென்ஞட்டில் வழங்குதல்பற்றித் தமிழ்மொழி தென்மொழி யெனவும்படும். சம்ஸ்கிருதம் பொதுவாயினும், ஆதியிலே வடதிசையினின்றும் தென்றிசைக்கு வந்தமையால் வடமொழி யெனப்படும்.

அகத்தியமுனிவருக்குச் சிவபெருமானேயன்றி முருகக்கடவுளும் தமிழைச் செவியறிவுறுத் தருளினர். அவ்வகத்திய முனிவருக்கு மாணக்கர் பன்னிருவர்:—தொல்காப்பியர், அதங்கோட்டாசிரியர், துராலிங்கர், செம்பூட்சேய், வையாபிகர், வாய்ப்பியர், பனம்பாரனர், கழாரம்பனர், அவினயனர், காக்கைபாடினியர், நற்றத்தனர், வாமனர். அகத்தியமுனிவர் தாஞ்செய்த அகத்தியத்தை அப்பன்னிரண்டு மாணக்கர்களுக்கும் கற்பித்தருளினர். அப்பன்னிருவர்களும்

அவ்வகத்தியத்தை முதனூலாகக்கொண்டு, தனித்தனியே வழிநூல் செய்தார்கள். அவைகளுள்ளே, சமதக்கினிமுனிவருடைய புத்திரரும் திரணதூமாக்கினியென்னும் பெயரை யுடையவருமாகிய தொல்காப்பியமுனிவர் செய்தநூலே மிகச் சிறந்தது. தொல்காப்பியர் முதலிய பன்னிருமாணாக்கர்களுங் கூடிப் புறப்பொருட் பன்னிருபடலம் என்னும் ஓர் நூல் செய்தார்கள்.

அகத்தியத்துள்ளே இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்னும் மூன்று தமிழும் விரவிக் கூறப்பட்டன. அவற்றுள், இயற்றமிழை வேறுபிரித்து வழிப்படுத்தார் தொல்காப்பியர் முதலாயினோர்; இசைத்தமிழை வேறு பிரித்து வழிப்படுத்தார் பெருநாரை பெருங்குருகு முதலிய நூலுடையார்; நாடகத்தமிழை வேறுபிரித்து வழிப்படுத்தார் முறுவல், சயந்தம், குணநூல், செயிற்றிய முதலிய நூலுடையார்.

தமிழ்மொழி தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்னும் மூன்று சங்கங்களாலும் ஆராயப்பட்டது. இச்சங்க மூன்றையுந் தாபித்தவர்கள் பாண்டிய ராசாக்கள்.

தலைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தவர்கள் இறையனார், குமாரவேள், அகத்தியமுனிவர் முதலாகிய ஐஞ்ஞூற்று நாற்பத்தொன்பதின்மர்கள். அவர்களுக்கு நூல் அகத்தியம்.

இடைச்சங்க மிருந்து தமிழாராய்ந்தவர்கள் அகத்தியர், தொல்காப்பியர் முதலாகிய ஐம்பத்தொன்பதின்மர்கள். அவர்களுக்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும், மாபுராணமும், இசைநுணுக்கமும், பூதபுராணமுமாம்.

கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தவர்கள் நக்கீரர், மருதனிள நாகனார், சிறுமேதாவியர் முதலாகிய நாற்பத்தொன்பதின்மர்கள். அவர்களுக்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமும். அவர்கள் சரசுவதியினுடைய திருவவதாரமாய் உள்ளவர்கள். சதுரமாய் இரண்டு சாணளவினதாகிய சங்கப்பலகை ஒன்று அவர்களுக்குச் சிவபெருமானாலே கொடுத்தருளப்பட்டது. அது மெய்ப்புலவர்களுக் கெல்லாம் முழம் வளர்ந்து இருத்தற்கு இடங் கொடுப்பது. அக்கடைச் சங்கத்துப் புலவர்கள் சுந்தரமூர்த்திநாயனாராலே திருத்தொண்டத் தொகையிலே பொய்யடிமையில்லாப் புலவர்கள் என்று துதிக்கப் பட்டார்கள்.

கடைச்சங்கத்தார் காலத்திலே இறையனார் பாண்டியன்பொருட்டு "அன்பினைந்திணை" என்பது முதலிய அறுபது சூத்திரங்களினால் ஓரகப்பொருணூல் செய்தருளினார். அது களவியலெனவும், இறையனாரகப்பொருளெனவும் பெயர் பெறும். அதற்குக் கடைச்சங்கத்துப்புலவர் நாற்பத்தொன்பதின்மரும் தனித்தனியே உரைசெய்தார்கள். அவ்வுரைகளுள்ளே நக்கீரர் செய்த உரையே முருகக்கடவுளது திருவவதாரமாய் மதுரை வைசியர் மரபிற்றோன்றிய ஐந்து பிராயத்தையுடைய உருத்திரசன்மராலே மெய்யுரையெனக் கொள்ளப் பட்டது.

பிரமதேவருடைய திருவவதாரமாய் விளங்கிய தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் திருக்குறளென்னும் உத்தரவேதத்தைச்செய்து, மேற்கூறிய கடைச்சங்கத்தில் அரங்கேற்றியருளினார். அப்பொழுது அசரீரிவாக்கின்படியே சங்கப்பலகை அத்திருவள்ளுவ நாயனாருக்கும் உருத்திரசன்மருக்கும் மாத்திரமே இடங்கொடுத்தது.

சம்ஸ்கிருதமும் தமிழும் சிவபெருமானாலும் இருடிகளாலும் அருளிச்செய்யப்பட்ட இலக்கணநூல்களை உடைமையாலும், ஆன்றோர்களாலே தழுவப்பட்டமையாலும், தம்முள்ளே சமத்துவமுடையனவேயாம்.

## காஞ்சிப்புராணம்.

வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற்
கடல்வரைப்பி னிதன்பெருமை யாவரே கணித்தறிவார்.

இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப
விருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்பு
மிருமொழியு மான்றவரே தழீஇயினா ரென்றாலிவ்
விருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ.

## திருவிளையாடற்புராணம்.

கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோ
லெண்ணி டைப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ.

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை
யுண்ட பாலனை யழைத்ததும் எலும்புபெண் ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்.

பாலபாடம்.



உ

கடவுள் துணை.

ஔவையார் அருளிச்செய்த

மூதுரை என்று வழங்குகின்ற

# வாக்குண்டாம்

## மூலமும் உரையும்.

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1913

விலை அணா 1¼

உ

கடவுள் துணை.

# வாக்குண்டாம்

## மூலமும் உரையும்.

### நூன் முகம்.

வாக்குண்டா நல்ல மனமுண்டா மாமலராள்
நோக்குண்டா மேனி நுடங்காது - பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கை யான்பாதந்
தப்பாமற் சார்வார் தமக்கு.

(இதன் பொருள்.) துப்பு ஆர் - பவளம்போற் சிவந்த [துப்பு - பவளம்(போலும் நிறம்), ஆர் - நிறைந்த,] திருமேனி - தேகத்தையும், தும்பிக்கையான் - துதிக்கையையும் உடைய விநாயகரது, பாதம் - திருவடிகளை, பூ கொண்டு - மலரைக்கொண்டு, தப்பாமல் - தவறாமல், சார்வார் தமக்கு - சேர்ந்து பூசிப்பவர்க்கு, வாக்கு உண்டாம் - (நல்ல) வாக்கு உண்டாகும்; நல்ல மனம் உண்டாம் - நல்ல மனம் உண்டாகும்; மா மலராள் - பெருமையுள்ள செந்தாமரைப் பூவிலிருக்கிற சீதேவியினது, நோக்கு உண்டாம் - (அருட்)பார்வை உண்டாகும்; மேனி நுடங்காது - தேகம் (பிணியால்) வாடாது, எ-று.

(கருத்து.) விநாயகரது திருவடிகளைப் பூசிப்பவர்க்குக் கல்வியும், மனத்தூய்மையும், செல்வமும், தேகவலிமையும் உண்டாகும்.

(விசேஷ உரை.) நடங்காது-அஃறிணை ஒன்றன்பாற் படர்க்கை எதிர்மறை வினைமுற்று; நடங்கு-பகுதி, ஆ-எதிர்மறை விகுதி, உகரக் கேடு சந்தி, அனைத்தும் ஓர் பகுதி, து-விகுதி.

---

## நூல்.

1. நன்றி யொருவற்குச் செய்தக்கா லந்நன்றி
என்று தருங்கொ லெனவேண்டா - நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்றருத லால்.

(இ-ள்.) நின்று-நிலைபெற்று, தளரா வளர் தெங்கு - சோர்வடையாமல் வளர்கின்ற தென்னமரமானது, தாள் உண்ட நீரை-(தன்) அடியால் உண்ட ஜலத்தை, தலையாலே - முடியினாலே, தருதலால் - (இளநீராகக்) கொடுத்தலால், ஒருவற்கு - (நற்குணமுடைய) ஒருவனுக்கு, நன்றி செய்தக்கால் - உபகாரங்களைச் செய்தால், அ நன்றி-அவ்வுபகாரங்கள், என்று தரும் என - எந்நாளில் செய்யப்படுமோவென்று, வேண்டா - (செய்தோனால்) வேண்டப்படா, எ-று.

(க-து.) யோக்கியனுக்கு உபகாரம் செய்தால் அவன் அதனினு மேலான உபகாரத்தை விரைந்து வணக்கத்துடன் செய்வான்.

(வி-ரை.) எழுவாய் - நன்றி; பயனிலை-வேண்டா. கொல், தான்-அசை; எ - பிரிநிலை. செய்தக்கால் - காரணப்பொருட்டாய் வந்த வினையெச்சம்; செய்-பகுதி, து, அ-சாரியைகள், உகரக்கேடும் ககரத்தோற்றமும் சந்தி; கால் - இறந்தகால வினையெச்ச விகுதி. தளரா-எதிர்மறை வினையெச்சம், ஈறுதொகுத்தல். வளர் - வினைத்தொகை. நன்றி: நல் - பகுதி, றி - பண்புப்பெயர் விகுதி, லகரம் னகரமானது சந்தி. தரும்: தா- பகுதி, இது த ஆனது குறுக்கல் விகாரம், ரு-விரித்தல் விகாரம், உம் - விகுதி, உகரக்கேடு சந்தி.

2. நல்லா ரொருவர்க்குச் செய்த வுபகாரங்
கன்மே லெழுத்துப்போற் காணுமே - அல்லாத
ஈரமில்லா நெஞ்சத்தார்க் கீந்த வுபகாரம்
நீர்மே லெழுத்திற்கு நேர்.

(இ-ள்.) நல்லார் ஒருவர்க்கு - நற்குணமுடையவராகிய ஒருவருக்கு, செய்த உபகாரம் - செய்த உதவியானது, கல்மேல் எழுத்துப் போல் - கல்லில் செதுக்கிய எழுத்துப்போல, காணும் - தோன்றும் (அவரால் நினைக்கப்படும்); அல்லாத - அவரொழிந்த (யோக்கியரல்லாத), ஈரம் இல்லா நெஞ்சத்தார்க்கு - அன்பில்லாத மனமுடையவர்க்கு, ஈந்த உபகாரம் - செய்த உதவியானது, நீர்மேல் எழுத்துக்கு நேர் - நீரில் (எழுதிய) எழுத்துக்கொப்பாகும் (அவரால் உடனே மறக்கப்படும் என்றபடி), எ-று.

(க - து.) நல்லோருக்குச் செய்த உபகாரம் பயன்றரும்.

(வி-ரை.) எழுவாய் - உபகாரம் உ-ம்; பயனிலை - காணும், நேர். இல்லாதென்பதில் ஈறு தொகுத்தல்; ஈந்த: ஈ - பகுதி, த் - சந்தி, த் - இடைநிலை, அ - பெயரெச்சவிகுதி, சந்தி தகரம் நகரமானது மெலித்தல் விகாரம். நேர் என்னும் முதனிலை முற்றுப்பொருளில் வந்தது. ஏ - அசைநிலை. (உ)

3. இன்னா விளமை வறுமைவந் தெய்தியக்கால்
இன்னா வளவி லினியவும் - இன்னாத
நாளல்லா நாள்பூத்த நன்மலரும் போலுமே
ஆளில்லா மங்கைக் கழகு.

(இ - ள்.) இளமை - இளமைப்பருவத்தில், வறுமை - தரித்திரம், வந்து எய்தியக்கால் - வந்து கூடுமாயின், இன்னா - துன்பந்தருவதாகும்; இன்னா அளவில் - துன்பந்தரும் (முதுமைப்) பருவத்தில், இனியவும் -

இன்பந்தரும் பொருள்களும், இன்னாத - துன்பந் தருவனவாகும்; (இவை) நாள் அல்லா நாள் - காலமல்லாத காலத்தில், பூத்த-புஷ்பித்த, நல் மலரும் - சிறந்த புஷ்பத்தையும், ஆள் இல்லா - நாயகன் இல்லாத, மங்கைக்கு - பெண்ணுக்குண்டாகிய, அழகும் - அழகையும், போலும்- ஒக்கும், எ-று.

(க.- து.) வறுமையோடு கூடிய இளமையும், முதுமையோடு கூடிய செல்வமும் பயன்படாவாம்.

(வி-ரை.) எழுவாய்-இளமை, இனிய; பயனிலை - இன்னா, இன்னாத. இன்னா-ஈறுகெட்ட ஒன்றன்பாற்படர்க்கைவினைமுற்று. எய்தியக்கால் - காரணப்பொருட்டாய் வந்த வினையெச்சம்; எய்து-பகுதி, இன்-சாரியை, சாரியையீற்று னகரக்கேடு கடைக்குறை, ய் - சந்தி, அ - சாரியை, க்-சந்தி, கால் - இறந்தகால வினையெச்சவிகுதி. இன்னா அளவு - பண்புத்தொகைநிலைத்தொடர்; இன்னாமையாகிய அளவு என விரியும். இன்னாத: இன்னா-பகுதி, த்-எழுத்துப்பேறு, அ-பலவின்பால் விகுதி. ஏ-அசை. (உ)

4. அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவல்ல
நட்டாலு நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலு மேன்மக்கண் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்.

(இ-ள்.) அட்டாலும் - காய்ச்சினாலும், பால் சுவையில் குன்றாது- பாலானது (தன்) மதுரத்தினின்று குறையாது (மிகும்); சங்கு-சங்கு, சுட்டாலும்-(நெருப்பில் வைத்துச்)சுடப்பட்டாலும், வெண்மை தரும்- வெண்ணிறத்தையே காட்டும்; (அதுபோல) கெட்டாலும் - (தமது செல்வம்) கெட்டாலும், மேல் மக்கள் மேல் மக்களே-மேலோர் மேலோராம் குணத்தையே காட்டுவர்; அளவு அல்ல நட்டாலும் - நெடுநாள்

சிநேகித்தாலும், நண்பு அல்லார் - சிநேகத்தன்மை யில்லார், நண்பு அல்லர் - சிநேகத்தன்மை உடையராகார், எ-று.

(க-து.) மேலோரோடு சிநேகிக்கவேண்டும்.

(வி-ரை.) எழுவாய்-மேன்மக்கள், நண்பல்லார்; பயனிலை-மேன்மக்கள், நண்பல்லர். சுவையின்-இதில் ஐந்தனுருபு நீக்கப்பொருள். முன்னுள்ள உம்மைகள் உயர்வுசிறப்பு; பின்னுள்ள உம்மைகள் எதிர்மறை; அட்டால், சுட்டால், கெட்டால்-அடு, சுடு, கெடு பகுதிகள் இரட்டித்தது விகாரம், ஆல் எதிர்கால வினையெச்சவிகுதி, இகரக்கேடு சந்தி. நட்டால்: நள்-பகுதி, து - சாரியை, ஆல் - விகுதி, ளகர தகரங்கள் டகரமானதும், உகரக்கேடும் சந்தி. அளவளாய் என்றும்பாடம்; அளவளாய்-கலந்து. (௪)

5. அடுத்து முயன்றாலு மாகுநா ளன்றி
எடுத்த கருமங்க ளாகா - தொடுத்த
உருவத்தா னீண்ட வுயர்மரங்க ளெல்லாம்
பருவத்தா லன்றிப் பழா.

(இ - ள்.) தொடுத்த - கிளைத்த, உருவத்தால் நீண்ட - உருவத்தினால் நீண்டிருக்கின்ற, உயர் மரங்கள் எல்லாம் - உயர்வாகிய எல்லா மரங்களும், பருவத்தால் அன்றி - (பழுக்குங்) காலத்தில் அல்லாமல், பழா - பழுக்காவாம்; (அதுபோல) அடுத்து முயன்றாலும் - மேலுமேலும் முயற்சிசெய்தாலும், ஆகும் நாள் அன்றி - முடியுங் காலம் அல்லாமல், எடுத்த கருமங்கள் ஆகா - (தான்) மேற்கொண்ட தொழில்கள் முடியாவாம், எ-று.

(க-து) முடியுங்காலம் அறிந்து யாதொரு தொழிலையுந் தொடங்கல் வேண்டும்.

(வி-ரை.) எழுவாய் - கருமங்கள்; பயனிலை - ஆகா. முயன்றால்: முயல்-பகுதி, ஆல் - எதிர்கால வினையெச்சவிகுதி, து - சாரியை, லகர தகரங்கள் றகரமானதும், றுன்னது மெலிந்ததும் சந்தி விகாரங்கள்; பருவத்தால் - உருபுமயக்கம். உம்மை - இறந்தது தழீஇயதனோடு உயர்வுசிறப்புமாம். அன்றி - குறிப்பு வினையெச்சம்; அல், றி - பகுதி, விகுதிகள். ஆகா, பழா - எதிர்மறை வினைமுற்றுக்கள். (ரு)

6. உற்ற விடத்தி லுயிர்வழங்குந் தன்மையோர்
பற்றலரைக் கண்டாற் பணிவரோ - கற்றூண்
பிளந்திறுவ தல்லாற் பெரும்பாரந் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான்.

(இ-ள்.) கல் தூண் - கல்லுக்கம்பம், பெரும்பாரம் தாங்கின் - பெரிய சுமையைச் சுமந்தால், பிளந்து இறுவது அல்லால் - பிளந்து முறிவது அல்லாமல், தளர்ந்து வளையுமோ-குழைந்து வளையாது; (அது போல) உற்ற இடத்தில்-(மானக்கேடு) வந்தவிடத்தில், உயிர் வழங்கும்- உயிரைவிடும், தன்மையோர்-குணமுடையார், பற்றலரைக் கண்டால் - பகைவரைக் கண்டால், பணிவரோ-வணங்குவரோ (வணங்கார்), எ-று.

(க-து.) மானிகள் தமக்கு என்ன துன்பம் வரினும் பகைவரை வணங்கார்.

(வி-ரை.) எழுவாய்-தன்மையோர்; பயனிலை - பணிவரோ. கற்றூண்-முதற்கருவிப்பொருளில்வந்த மூன்றும்வேற்றுமை உருபும்பயனு முடன்தொக்க தொகைநிலைத்தொடர்; ஓ இரண்டும் எதிர்மறை; தன்மையோர் - ஈற்றயல் ஆகாரம் ஓகாரமாய்த் திரிந்தது. தளர்ந்து: தளர்-பகுதி, த் - சந்தி, த் - இடைநிலை, உ - வினையெச்ச விகுதி, சந்தி தகரம் நகரமானது விகாரம். உற்ற: உறு - பகுதி, பகுதி இரட்டி இறந்தகாலங்காட்டியது, அ - விகுதி, உகரக்கேடு சந்தி; இனிவரும்

பெற்ற அற்ற முதலியவும் இவ்வகைய. கண்டால்: காண் - பகுதி, குறு
கிற்று. தான் - அசை. (சு)

7. நீரளவே யாகுமா நீராம்ப லுங்கற்ற
நூலளவே யாகுமா நுண்ணறிவு — மேலைத்
தவத்தளவே யாகுமாந் தாம்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகுங் குணம்.

(இ-ள்.) நீர் ஆம்பல்-நீரில் இருக்கின்ற அல்லியானது, நீர் அளவே ஆகும் - நீரின் உயரத்தின் அளவே உயரும்; (அதுபோல) தாம் கற்ற நூல் அளவே-தாம் படித்த நூலின் அளவாகவே, நுண் அறிவு ஆகும்-நுட்பமாகிய புத்தி உண்டாகும்; தாம் பெற்ற செல்வம்-தாம் அடைந்த ஐசுவரியம், மேலை தவத்து அளவே ஆகும் - முற்பிறப்பிற்செய்த தவத்தின் அளவாகவே உண்டாகும்; குலத்து அளவே குணம் ஆகும்-(தாம் பிறந்த) குலத்தின் அளவாகவே குணங்கள் உண்டாகும், எ-று.

(க - து.) ஒருவருக்கு அறிவு கல்வியின் அளவும், செல்வம் தவத்தின் அளவும், குணம் குலத்தின் அளவும் ஆகும்.

(வி-ரை.) எழுவாய் அளவு, செல்வம், குணம்; பயனிலை-ஆகும். ஏ நான்கும் தேற்றம். கற்ற: இறந்தகாலப் பெயரெச்சம்; கல் - பகுதி, ற்-இடைநிலை, அ - விகுதி. ஆம் ம - ம் அசை. தவத்தளவு முதலியன ஆரும்வேற்றுமைப் பண்புத் தற்கிழமைப் பொருள். (எ)

8. நல்லாரைக் காண்பதுவு நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவு நன்றே - நல்லார்
குணங்க ளுரைப்பதுவு நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவு நன்று.

(இ - ள்.) நல்லாரை காண்பதுவும் - நற்குணமுடையாரைக் காணுதலும், நன்றே - நலமுடையதே; நலம் மிக்க - நன்மை மிகுந்த, நல்லார்

சொல் கேட்பதுவும் - நல்லவரது சொற்களைக் கேட்டலும், நன்றே - நலமுடையதே; நல்லார் - நற்குணமுடையாரது, குணங்கள் உரைப்பதுவும்-குணங்களைச் சொல்லுதலும், நன்றே-நலமுடையதே; அவரோடு-அந் நல்லவருடன், இணங்கி இருப்பதுவும்-நட்பாயிருத்தலும், நன்று - நலமுடையதே, எ-று.

(க - து.) நல்லாரைக் காணல் முதலியன நல்லனவாம்.

(வி-ரை.) எழுவாய் - காண்பது, கேட்பது, உரைப்பது, இருப்பது; பயனிலை - நன்று. மேல் நின்ற ஏகாரத்தை இச்செய்யுளிறுதியில் நன்றென்பதனோடுங் கூட்டுக. ஏகாரங்கள் தேற்றம். காண்பது முதலிய தொழிற்பெயர்கள் குற்றியலுகர ஈறுகெடாமல் பொதுவிதிப்படி வகர உடம்படுமெய் பெற்றன. ஓடு - இடப்பொருளில் வந்தது. உம்மைகள் உயர்வுசிறப்பில் வந்தன. நன்று: நல், று - பகுதி, விகுதிகள். (அ)

9. தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவுந் தீதே - தீயார்
குணங்க ளுரைப்பதுவுந் தீதே யவரோ
டிணங்கி யிருப்பதுவுந் தீது.

(இ - ள்.) தீயாரைக் காண்பதுவும் - தீக்குணமுடையாரைக் காணுதலும், தீதே - தீயதே; திரு அற்ற-சிறப்பில்லாத, தீயார் சொல் கேட்பதுவும் - தீக்குணமுடையவரது சொற்களைக் கேட்டலும், தீதே- தீயதே; தீயார் - தீக்குணமுடையவரது, குணங்கள் உரைப்பதுவும் - குணங்களைச் சொல்லுதலும், தீதே - தீயதே; அவரோடு-அத்தீக்குணமுடையரோடு, இணங்கி இருப்பதுவும் - நட்பாய் இருத்தலும், தீது - தீயதே, எ-று.

(க - து). துட்டரைக் காணல் முதலியன தீயனவாம்.

(வி-ரை.) எழுவாய் - காண்பது, கேட்பது, உரைப்பது, இருப்பது; பயனிலை - தீது. மேலைச் செய்யுளிற் கூறியவை எல்லாம் இதற்கும் ஒக்கும். உம்மைகள் இழிவுசிறப்பில் வந்தன. (௯)

10. நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கு மாங்கே பொசியுமாம் - தொல்லுலகில்
நல்லா ரொருவ ருளரே லவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யு மழை.

(இ-ள்.) நெல்லுக்கு இறைத்த நீர் - நெற்பயிருக்கு இறைக்கப்பட்ட நீரானது, வாய்க்கால் வழி ஓடி - வாய்க்காலின் வழியே போய், ஆங்கு - அங்குள்ள, புல்லுக்கும் பொசியும் - புற்களுக்கும் கசிந்தூறும்; (அது போல) மழை - மழையானது, தொல் உலகில் - பழமையாகிய உலகத்தில், நல்லார் ஒருவர் உளரேல் - நற்குணமுடையவராகிய வொருவர் இருப்பாராயின், அவர் பொருட்டு - அவரது பொருட்டால் (அவரைப் பற்றியே), எல்லார்க்கும் பெய்யும் - மற்றை யாவர்க்கும் பெய்யாநிற்கும், எ-று.

(க - து.) நல்லவரைச் சேர்ந்த மற்றவர்களும் பயன் பெறுவர்.

(வி-ரை.) எழுவாய் - மழை; பயனிலை - பெய்யும். நான்கன் உருபுகள் கொடைப்பொருளில் வந்தன. புல்லுக்கும் என்பதின் உம்மை இழிவுசிறப்போடு இறந்ததுதழீஇயதுமாம். எல்லார்க்கும் என்பதின் உம்மை முற்றுப்பொருளில் வந்தது. ஓடி : ஓடு - பகுதி, இ - விகுதி, விகுதியே இறந்தகாலங் காட்டும். இணங்கி, ஆகி, வாடி, அழுக்கி முதலியவற்றிற்கும் இவ்வகை உறுப்பமைக்க. (௧0)

11. பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் முளையாதாம் - கொண்டபேர்

ஆற்ற லுடையார்க்கு மாகா தளவின்றி
ஏற்ற கருமஞ் செயல்.

(இ-ள்.) பண்டு முளைப்பது-(உமி நீங்குதற்கு) முன்னே முளைப்பது, அரிசியே ஆனாலும் - அரிசியாகவே யிருந்தாலும், உமி விண்டு போனால் - உமியானது நீங்கிப்போமாயின், முளையாது - (அவ்வரிசி) முளையாது; (அதுபோல) கொண்ட - (தம்மிடத்து) நீங்காத பேர் ஆற்றல் - மிக்க வல்லமையை, உடையார்க்கும் - உடையவர்க்கும், அளவு இன்றி - துணைவலி இல்லாமல், ஏற்ற கருமம் - எடுத்துக்கொண்ட தொழிலை, செயல் ஆகாது - செய்து முடித்தல் கூடாது, எ-று.

(க-து.) முடிக்க வல்லவர்க்கும் துணைவலி இல்லாமல் யாதொரு கருமமு முடிக்கலாகாது.

(வி-ரை.) எழுவாய்-செய்தல்; பயனிலை-ஆகாது ஏ-தேற்றம். உம்மை இறந்ததுதழீஇயதனோடு உயர்வுசிறப்பு. விண்டு - வினையெச்சம்; விள்-பகுதி, உ-விகுதி, ட்-இடைநிலை, ளகரத்திரிபு சந்தி. உடையார் - உடன்பாட்டுக் குறிப்பு வினையாலணையும் பெயர். இன்றி - எதிர்மறைக் குறிப்பு வினையெச்சம்; இல் - பகுதி, றி - விகுதி, லகரத்திரிபு சந்தி. அன்றி என்பதும் இப்படியே. ஏற்ற: ஏல், ற், அ - உறுப்புக்கள். போனால்: போ, இன், ஆல் - பகுதி, இடைநிலை, விகுதிகள். இடைநிலை முதல்குறைந்தது. ஆம் - அசை. (கக)

12. மடல்பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல்சிறிய ரென்றிருக்க வேண்டா - கடல்பெரிது
மண்ணீரு மாகா ததனருகே சிற்றூறல்
உண்ணீரு மாகி விடும்.

(இ-ள்) தாழை - தாழம்பூவின், மடல் பெரிது - இதழ் பெரியது; மகிழ் - (இதழ்கள் சிறியனவான) மகிழம்பூவினது, கந்தம்

இனிது - வாசனை இனியது; கடல் பெரிது - கடல் பெரிது; மண் நீரும் ஆகாது - (அதிலுள்ள நீர்) உடம்பழுக்கைக் கழுவும் ஜலமும் ஆகாது; அதன் அருகு - அந்தக்கடலின் அருகில் (உள்ள), சிறு ஊறல் - சிறிய ஊற்றுக்குழிநீர், உண் நீரும்-உண்ணத்தக்க நீரும், ஆகிவிடும் - ஆகும்; (ஆதலால்) உடல் சிறியர் என்று - (அறிவுடையாரை) உருவத்தால் சிறியவரென்று, இருக்க வேண்டா-(மதியாமல்) இருத்தல் கூடாது, எ-று.

(க - து.) ஒருவரை உருவத்தினாலே மதிக்காமல் குணத்தால் மதிக்கவேண்டும்.

(வி-ரை.) எழுவாய் - இருக்க (இருத்தல்); பயனிலை - வேண்டா. தாழை, மகிழ் - பொருளாகுபெயர். வேண்டா என்பதில் ஈறு தொகுத்தல். பெரிது, இனிது - குறிப்புமுற்று. பெருமை, இனிமை என்பவைகளில் மை ஈறுகெட்ட பெரு, இனி-பகுதி, து-விகுதி, பெரு என்பதில் உகரம் இகரமானது சந்தி. இருக்க என்னுஞ் செயவெனெச்சம் ஈண்டுத் தொழிற்பெயர்ப் பொருள்பட நின்றது. (கஉ)

13. கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள் - சவைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவனன் மரம்.

(இ - ள்.) கவை ஆகி - கிளைகளையுடையனவாகியும், கொம்பு ஆகி - கொம்புகளை யுடையனவாகியும், காட்டகத்து நிற்கும் - காட்டில் நிற்கின்ற, அவை - அம்மரங்கள், நல்ல மரங்கள் அல்ல - நல்லமரங்கள் அல்லவாம்; சவை நடுவே - சபைநடுவில், நீட்டு ஓலை-கொடுத்த ஓலையில் (எழுதியிருப்பதை), வாசியா நின்றான் - வாசியாமல் நின்று, குறிப்பு அறியமாட்டாதவன்-(அதன்) கருத்தை அறிந்துகொள்ளத் திறமையில்லாதவனே, நல் மரம் - நல்ல மரமாம், எ-று.

(க-து.) கல்வி அறிவில்லாதவன் ஓரறிவுடைய மரத்தினும் கடையாவன்.

(வி-ரை.) எழுவாய் - அறியமாட்டாதவன், பயனிலை - மரம். நீட்டோலை - வினைத்தொகை நிலைத்தொடர்; நீட்டிய ஓலையென விரியும். ஓலை - இடவாகுபெயர். வாசியா - எதிர்மறை வினையெச்சம் ஈறுதொக்கது. நின்றான் - வினைமுற்று வினையெச்சமாய் அறிய என்னும் வினை கொண்டது; நில்-பகுதி, ஆன் - விகுதி, ற்-இடைநிலை. ஏ - இரண்டும் அசை. மாட்டாதவன்-வினையாலணையும் பெயர்; ஈற்றில் பிரிநிலை ஏகாரந் தொகுத்தல். (கங)

14. கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானு மதுவாகப் பாவித்துத் - தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி.

(இ-ள்.) கல்லாதான்-(நூல்களைக்) கற்காதவன், கற்ற கவி-(தான்) படித்த பாட்டிற்குப் (பொருள் கூறல்), கானம் மயில் ஆட-காட்டில் மயிலானது (தன் அழகிய கலாபத்தை விரித்து) ஆடாநிற்க, கண்டு இருந்த-(அதைப்) பார்த்திருந்த, வான்கோழி - வான்கோழியானது, தானும் அது ஆக - தானும் அம் மயிலாக, பாவித்து - நினைத்து, தானும் - தானும், தன் பொல்லா சிறகை விரித்து-தனது அழகில்லாத சிறகைப் பரப்பி, ஆடினால் போலும் - நடனஞ் செய்தாற்போலும், எ-று.

(க-து.) கல்லாதவன் பிரசங்கம் இகழப்படும்.

(வி-ரை.) எழுவாய் - கவி; பயனிலை - போலும். உம்மைகள் இரண்டில் முன்னது இழிவுசிறப்பு, பின்னது இழிவுசிறப்போடு இறந்தது தழீஇயது ஆம். பொல்லா - ஈறுகெட்ட பெயரெச்சம்; பொல் - பகுதி, ல் - சந்தி, ஆ - சாரியை, த்-விரித்தல் விகாரம், அ-பெயரெச்ச

விகுதி. கல்லாதான் - எதிர்மறை வினையாலணையும் பெயர். ஏ-அசை. ஆட இங்கு நிகழ்காலம். (கசு)

15. வேங்கை வரிப்புலிக்குத் தீர்த்த விடதாரி
ஆங்கதனுக் காகார மானாற்போல் - பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த வுபகாரம்
கல்லின்மே லிட்ட கலம்.

(இ-ள்.) வேங்கை வரி புலிக்கு - வரிகளையுடைய வேங்கைப்புலிக்கு, தீர்த்த விடதாரி - விஷநீக்கியவன் (வயித்தியன்), ஆங்கு - அப்பொழுதே, அதனுக்கு - அந்தப் புலிக்கு, ஆகாரம் ஆனால்போல் - இரையானாற்போல, பாங்கு அறியா - நட்பின் தன்மை அறியாத, புல் அறிவாளர்க்கு - அற்பபுத்தியுடையவருக்கு, செய்த உபகாரம்-செய்த உதவியும், கல்லின்மேல் இட்ட - கல்லின்மேல் போட்ட, கலம் - மட்பாத்திரம்போல (அழியும்), எ - று.

(க - து.) துஷ்டர்களுக்கு உபகாரஞ் செய்தால் கேடுவரும்.

(வி-ரை.) எழுவாய் - உபகாரம்; பயனிலை - கலம். உபகாரமென்பதின் இறுதியில் இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. 'கல்லின்மேல் இட்டகலம்' என்பதற்குக் கற்பாறையில் தாக்கிய மாக்கலமெனப் பொருள் கூறலும் பொருந்தும். இட்ட - செய்த என்னும் பெயரெச்சம் செயப்படுபொருளைக் கொண்டு முடிகின்றது. வேங்கைப்புலி - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. வரிப்புலி - இரண்டனுருபும்பயனு மூடன்தொக்கதொகை. (கரு)

16. அடக்க முடையா ரறிவிலரென் றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா - மடைத்தலையில்
ஓடுமீ னோட வுறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாங் கொக்கு.

(இ - ள்.) கொக்கு - கொக்கானது, மடைதலையில் ஓடி-நீர்மடையினிடத்துச் சென்று, மீன் ஓட-(சிறு) மீன்கள் ஓடாநிற்க, உறு மீன் வரும் அளவும் - (தன்னிரைக்கு) அமைந்தமீன் வருகிறவரைக்கும், வாடி யிருக்கும்-சோர்ந்து இருக்கும்; (அதுபோல) அடக்கம் உடையார்-அடங்கியிருக்குங் குணமுடையவரை, அறிவு இலர் என்று - விவேகம் இல்லாதவர் என்று, எண்ணி - நினைத்து, கடக்க - (அவரை) வெல்ல, கருதவும் வேண்டா - நினைக்கவும் வேண்டுவதில்லை, எ-று.

(க-து) அடக்க முடையரா யிருப்பவரை அறிவிலரென்று வெல்ல நினைக்கலாகாது.

(வி-ரை.) எழுவாய் - கருதல்; பயனிலை - வேண்டா. கருதவென்னும் செயவெனெச்சம் இங்கு தொழிற்பெயர்ப் பொருளில் வந்தது. அடக்கம்: அடங்கு - பகுதி, அம் - விகுதி, உகரக்கேடு சந்தி, ங் - க் ஆனது வலித்தல். உடையார் - குறிப்பு வினையாலணையும் பெயர். உம்மை - இறந்தது தழீஇய எச்சவும்மை. வேண்டா - ஈறுதொகுத்தல். உறுமீன் - வினைத்தொகை நிலைத்தொடர். என்று - இடைச்சொல். ஆம் - அசை. (கசு)

17. அற்ற குளத்தி னறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வா ருறவல்லர் - அக்குளத்தில்
கொட்டியு மாம்பலு நெய்தலும் போலவே
ஒட்டி யுலர்வா ருறவு.

(இ-ள்.) அற்ற குளத்தின் - (நீர்) வற்றிய குளத்தினின்றும், அறு நீர்ப் பறவைபோல் - நீங்குகின்ற நீர்வாழ் பறவைகள்போல், உற்றுழி - (துன்பம்) வந்த இடத்தில், தீர்வார் - நீங்குவோர், உறவு அல்லர் - உறவினர் ஆகார்; அக்குளத்தில் - அந்தக் குளத்தில், கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே - கொட்டிப்பூண்டும் அல்லிக்கொடி

யும் நெய்தற்கொடியும் போலவே, ஒட்டி உலர்வார் உறவு - நீங்காது நின்று வருந்தி இருப்பவரே உறவினராவர், எ-று.

(க-து.) துன்பம் வந்தபோதும் தம்மைவிட்டுப் பிரியாதவரே உறவினராவர்.

(வி-ரை.) எழுவாய் - தீர்வார், உலர்வார்; பயனிலை - உறவல்லர், உறவு. குளத்தின் - ஐந்தனுருபு நீங்கற்பொருளது. உற்றுழி என்பதை ஒருமொழியாகக் கொண்டால் எதிர்கால வினையெச்சமெனவும், தொடர்மொழியாகக் கொண்டால் உற்ற என்பதில் பெயரெச்சவிகுதி ஈற்று அகரம் தொகுத்தலெனவும் கூறுக. உறவு - குணவாகுபெயர். ஏ-பிரிநிலை. 'உறுவார்' என்று பாடமாயின் விட்டுநீங்காதவர் எனப் பொருள் கொள்க. (கஎ)

18. சீரியர் கெட்டாலுஞ் சீரியர் சீரியரே
அல்லாதார் கெட்டா லு மல்லாதார் - அல்லாதார்
பொன்னின் குடமுடைந்தாற் பொன்னாகு மென்னாகும்
மண்ணின் குடமுடைந்தக் கால்.

(இ - ள்.) பொன்னின் குடம் உடைந்தால் - பொன்னலாகிய குடம் உடையுமானல், பொன் ஆகும் - (அப்பொன்பாத்திரம் முன்போலப்) பொன்னே ஆகும்; மண்ணின் குடம் உடைந்தக்கால்-மண்ணலாகிய குடமானது உடைந்தால், என் ஆகும்-(அக்கேட்டினல்) என்ன பயன் உண்டாகும்; (அதுபோல) சீரியர் கெட்டாலும் - சிறந்த குணமுடையோர் வறுமையடைந்த காலத்தும், சீரியர் சீரியரே - அம் மேலோர் சிறந்த குணமுடையராகவே மதிக்கப்படுவார்; அல்லாதார் - (சிறந்த குணம்) இல்லாதவர் (கீழோர்), கெட்டாலும் - வறுமையடைந்தாலும், அல்லாதார் அல்லாதார் - கீழ்மக்கள் கீழ்மக்களாகவே மதிக்கப்படுவர், எ-று.

(க-து.) செல்வம் இழந்தகாலத்தில் மேலோர் நன்கு மதிக்கப்படு வர், கீழோர் மதிக்கப்படார்.

(வி-ரை) எழுவாய் - சீரியர், அல்லாதார்; பயனிலை - சீரியரே, அல்லாதார். சீரியர் என்னும் மொழி மூன்றில் முன்னைய விரண்டும் பண்படியாகப் பிறந்தபெயர்; பின்னையது குறிப்பு வினைமுற்று. ஏ - தேற்றம். உம்மை - உயர்வுசிறப்பு. பொன்னின் மண்ணின் என்பவை களில் இன் சாரியை. உடைந்தால்: உடை-பகுதி, த்-சந்தி, து-சாரியை, ஆல்-வினையெச்சவிகுதி, த்-ந் ஆக மெலிந்தது. உடைந்தக்கால்-உடை+ த்+து+அ+க்+கால், உறுப்புக்கள்; த - ந் ஆக மெலிந்தது; இதில் அ-சாரியை, கால்-வினையெச்சவிகுதி, க்-தோன்றியது சந்தி. (கஅ)

19. ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடனீர்
நாழி முகவாது நானாழி - தோழி
நிதியுங் கணவனு நேர்படினுந் தந்தம்
விதியின் பயனே பயன்.

(இ-ள்.) ஆழ் கடல் நீர் - ஆழமாகிய சமுத்திர ஜலத்தை, ஆழ அமுக்கி - முழுக அழுத்தி, முகக்கினும் - மொண்டாலும், நாழி - ஒரு படியானது, நால் நாழி முகவாது - நாலுபடி (நீரை) மொள்ளாது; (அது போல) தோழி - தோழியே, நிதியும்-(பெண்களுக்குத்) திரவியமும், கணவனும் - நாயகனும், நேர்படினும் - நேர்பட்டிருந்தாலும், தம் தம் - அவரவருடைய, விதியின் பயனே பயன் - ஊழின் அளவாகிய பிர யோசனமே (அனுபவிக்கப்படும்) பிரயோசனமாகும், எ - று.

(க-து.) பெருஞ்செல்வ முடையாராயினும் ஊழின்ளவே அனு பவிப்பார்.

(வி-ரை.) எழுவாய் - பயன்; பயனிலை-பயன். முகக்கின் - செயி னென்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சம்; முக-பகுதி, க்-சந்தி,

கு - சாரியை, இன் - வினையெச்ச விகுதி. ஆழ்கடல் - வினைத்தொகை நிலைத்தொடர். நாழி - முகத்தலளவை ஆகுபெயர். முகவாது - எதிர் மறை வினைமுற்று; முக - பகுதி, வ் - சந்தி, ஆ - எதிர்மறை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, து - ஒன்றன்பால் விகுதி. முகக்கினும், நேர்படி னும் என்பவற்றி லும்மை இறந்ததுதழீஇய எச்சவும்மை. நிதியும், கணவனும் என்பவற்றி லும்மைகள் எண்ணுப்பொருள். ஏ - பிரி நிலை. (கக)

20. உடன்பிறந்தார் சுற்றத்தா ரென்றிருக்க வேண்டா
உடன்பிறந்தே கொல்லும் வியாதி - உடன்பிறவா
மாமலையி லுள்ள மருந்தே பிணிதீர்க்கும்
அம்மருந்து போல்வாரு முண்டு.

(இ - ள்.) வியாதி - நோயானது, உடன் பிறந்தே கொல்லும் - (தம் உடம்போடு) கூடப்பிறந்தே கொல்லாநிற்கும்; உடன் பிறவா - உடன் பிறவாத, மா மலையில் உள்ள மருந்தே - பெரியமலையில் பிறந்த மருந்தே, பிணி தீர்க்கும் - நோயை நீக்கும்; அம்மருந்து போல்வாரும் உண்டு - அம்மருந்தைப்போல உதவுகின்றவர்களும் இருக்கின்றனர்; (ஆதலால்) உடன் பிறந்தார் - உடன் பிறந்தவரே, சுற்றத்தார் என்று - உறவினர் என்று, இருக்க வேண்டா - இருத்தல் கூடாது, எ - று.

(க - து.) உடன்பிறந்தார் தீங்கு செய்தலும், அந்நியர் நன்மை செய்தலும் உண்டு. ஆதலால், உடன்பிறந்தாரையே உறவினரென் றிரு த்தலாகாது.

(வி - ரை.) எழுவாய் - (இருத்தல்) இருக்க, பயனிலை - வேண்டா. உடன்பிறந்தார் என்பதில் பிரிநிலை ஏகாரம் தொகுத்தல்; அடியி னின்ற இரண்டேகாரமும் அப்பொருளின. உம்-உயர்வுசிறப்பு. வேண் டா என்பதில் துவ் விகுதி விகாரத்தால் தொக்கது. ஈண்டு இருக்க என்னும் வினையெச்சம் தொழிற்பெயர்ப் பொருள்பட நின்றது. (உ0)

21. இல்லா ளகத்திருக்க வில்லாத தொன்றில்லை
இல்லாளு மில்லாளே யாமாயின் — இல்லாள்
வலிகிடந்த மாற்ற முரைக்குமே லவ்வில்
புலிகிடந்த தூறாய் விடும்.

(இ - ள்.) இல்லாள் - (நற்குண நற்செய்கைகளுடைய) மனையாள், அகத்து இருக்க - வீட்டில் இருந்தால், இல்லாதது - (அவ்வீட்டில்) இல்லாத பொருள், ஒன்று இல்லை - ஒன்று மில்லை; இல்லாளும்- மனையாளும், இல்லாளே ஆயின் - இல்லாமற்போவாளாயினும், இல்லாள் - மனையாள், வலிகிடந்த மாற்றம் உரைக்குமேல் கடுஞ்சொற்களைச் சொல்லுவாளாயினும், அ இல் - அவ்வீடு, புலி கிடந்த தூறு ஆய்விடும் - புலியிருந்த புதருக்கு ஒப்பாகும், எ - று.

(க - து.) நற்குண நற்செய்கையையுடைய மனையாளுள்ள வீடே எல்லாப் பொருளும் உள்ளதுபோலும். அப்படியல்லாத வீடு புலி தங்கிய புதருக் கொப்பாகும்.

(வி - ரை.) எழுவாய் - இல்லாதது, இல்; பயனிலை - இல்லை, ஆய்விடும். என்று - எண்ணுகுபெயர். இழிவுசிறப்பும்மை தொக்கது. இல்லாளும் என்பதின் உம்மை உயர்வுசிறப்பு. ஆயின் உரைக்குமேல் என்பவற்றின் எண்ணும்மை விகாரத்தால் தொக்கது. இல்லாதது - இல்+ஆ+த்+அ+து, உறுப்புக்கள். ஆய்: ஆ-பகுதி, ய்-இறந்தகாலங் குறிக்கும் விகுதி. உ௨ - வது பாட்டில் போய் என்பதும் இப்படியே. ஆம் அசை. (உக)

22. எழுதியவா றேமென் றிரமட நெஞ்சே
கருதியவா றேமோ கருமம் - கருதிப்போய்க்
கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்கா யீந்ததேல்
முற்பவத்திற் செய்த வினை.

(இ - ள்.) எழுதிய ஆறு ஆம் என்று இரா - (கடவுள்) கற்பித்த படியே நடக்கும் என்று இராத, மட நெஞ்சே - அஞ்ஞானம்பொருந்திய மனமே, கருதிய ஆறு - (நீ) நினைத்தபடிக்கெல்லாம், கருமம் ஆமோ - (செய்) தொழில்கள் பயனைத்தருமோ (தரா); கருதி போய்- (நல்ல பயனைப் பெறலாமென) நினைத்துச் சென்று, கற்பகத்தை சேர்ந்தோர்க்கு - கற்பக விருக்ஷத்தை அடைந்தவர்க்கு, காஞ்சிரங்காய் ஈந்ததேல்-(அது) எட்டிக்காயைக் கொடுத்ததேயானால்,(அதற்குக்காரணம்) முற்பவத்தில் செய்த - முற்பிறப்பில் பண்ணின, வினை - தீவினையாகும், எ - று.

(க - து.) எத்தொழிலும் விதிப்படியன்றி அவர் நினைத்தபடி முடியாது.

(வி - ரை.) "எழுதிய வாறேகா ணிரங்கு மடநெஞ்சே" எனப் பாடங்கொள்ளின், இரங்கு மடநெஞ்சே - வருந்துகின்ற அறியாமை பொருந்திய மனமே, எழுதியவாறே காண் - கடவுள் விதித்தபடியே ஆகும் என்று அறிவாயாக, எனப் பொருள்படும். எழுவாய் - கருமம்; தோ-எழுவாய் - காரணம்; பயனிலை - ஆமோ, வினை. இரா என்பதில் ஈறுதொகுத்தல். ஓ - எதிர்மறை. சேர்ந்தோர்-வினையாலணையும்பெயர்; ஈற்றபல் ஆ.ஓ ஆபிற்று. எழுதிய: எழுது - பகுதி, இன் - இடைநிலை ஈறுகெட்டது, அ-விகுதி, உகரக்கேடும் யகரத்தோற்றமும் சந்தி. ஆம்- கு என்னும் உயிர்மெய் கெட்டது. ஈந்ததேல் - வினையெச்சம்; வினைமுற்று ஏல் விகுதி பெறின் வினையெச்சமாம்; எனில் என்னும் வினையெச்சம் ஏல் என மருவியதெனினும் ஆம். (உஉ)

23. கற்பிளவோ டொப்பர் கயவர் கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும் போல்வாரே - விற்பிடித்து
நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம்.

(இ - ள்.) கடும் சினத்து - கடுமையாகிய கோபத்தால், கயவர் - கீழ்மக்கள், கற்பிளவோடு ஒப்பர் - கல்லினது பிளவுகளைப்போல்வர் (திரும்பிக்கூடாதவர் என்றபடி); பொன் பிளவோடு ஒப்பாரும்-பொன்னினது பிளப்போடு ஒப்பவர்களும், போல்வர் - ஒப்பானவரும் உளர் (ஒருவர் கூட்டக்கூடுவார்); சீர் ஒழுகு-சிறந்த வழியில் நடக்கின்ற, சான்றோர் சினம் - (அறிவால்) நிறைந்தோருடைய கோபமானது, வில் பிடித்து - வில்லைப்பிடித்து, நீர் கிழிய எய்த வடுபோல - நீர்பிளக்கும்படி (அம்பால்) எய்ததனு லுண்டாகும் வடுவைப்போல, மாறும் - (உடனே) நீங்கும், எ-று.

(க-து.) அதமர் கோபத்தால் வேறுபட்டால் எப்போதும் கூடார்; மத்திமர் ஒருவர் கூட்டக் கூடுவர்; உத்தமர் உடனே கூடுவர்.

(வி-ரை.) எழுவாய் - கயவர், ஒப்பார், சினம்; பயனிலை - ஒப்பார், போல்வார், மாறும். ஒப்பர் - வினைமுற்று; ஒ-பகுதி, ப்-சந்தி, ப்-இடைநிலை, அர் - விகுதி. ஒப்பார், போல்வார், சான்றோர்-வினையாலணையும் பெயர்கள். சான்றோர்: சால்+ற்+அர் - பகுதி, இடைநிலை, விகுதிகள். ல் - ற் ஆய்த் திரிந்து மெலிந்தது. அ - ஓ வானது செய்யுள் வழக்கு. ஓடு இரண்டும் ஒப்புப்பொருளில் வந்தன. கற்பிளவு, பொற்பிளவு இவ்விரண்டும் தொழிற்பண்புத்தற்கிழமைப்பொருளில் வந்த ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். ஏ இரண்டும் ஈற்றசை. (உங)

**24.** நற்றா மரைக்கயத்தி னல்லன்னஞ் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர் - கற்பில்லா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை யுகக்கும் பிணம்.

(இ-ள்.) நல் தாமரை கயத்தில்-சிறந்த தாமரைகளையுடைய குளத்தில், நல் அன்னம் சேர்ந்தால்போல்-அழகிய அன்னப்பறவைகள் சேர்ந்தாற்போல, கற்றாரை - கல்வியறிவுடையாரை, கற்றாரே காமுறுவர் -

கல்வி அறிவுடையவரே விரும்பிச் சேர்வர்; முதுகாட்டில் - மயானத்தில், காக்கை - காகங்கள், பிணம் உகக்கும் - பிணத்தை விரும்பும்; (அதுபோல) கற்பு இல்லா - கல்வி அறிவில்லாத, மூர்க்கரை - கீழ்மக்களை, மூர்க்கர் முகப்பர் - கீழ்மக்கள் விரும்பித் தழுவுவர், எ- று.

(க-து.) கற்றவர் கற்றவரோடும், மூடர் மூடரொடும் சிநேகஞ் செய்வர்.

(வி-ரை.) கயத்தின் - குளத்திலுள்ள, நல் தாமரை - நல்ல தாமரைப்பூவை, நல் அன்னம் சேர்ந்தாற்போல-நல்ல அன்னப்பறவை சேர்ந்தாற்போல, என்வும் பொருள்படும். எழுவாய் - கற்றூர், மூர்க்கர்; பயனிலை - காமுறுவர், முகப்பர். செயப்படுபொருள்-கற்றூரை, மூர்க்கரை. கயம்-குணவாகுபெயர். கற்பு-காரணவாகுபெயர். காமம் என்னும் பண்புட்பெயர், அம் கடைக்குறையாய் உறு என்றும் வினைப்பகுதியோடு சேர்ந்து காமுறு எனநின்று, வகர இடைநிலையும், அர் விகுதியும் பெற்று முடிந்தது. ஏ-பிரிநிலை. போல் என்பதில் அகரம் தொகுத்தல்.

௨0. நஞ்சுடைமை தானறிந்து நாகங் கரந்துறையும்
அஞ்சாப் புறங்கிடக்கு நீர்ப்பாம்பு - நெஞ்சில்
கரவுடையார் தம்மைக் கரப்பர் காவார்
காவிலா நெஞ்சத் தவர்.

(இ-ள்.) நாகம் - நல்ல பாம்பானது, தான் நஞ்சுடைமை - தான் விஷமுடைத்தாயிருத்தலை, அறிந்து - தெரிந்து, கரந்து உறையும் - ஒளித்துக்கொண்டிருக்கும்; நீர் பாம்பு-(தன்னிடத்தில் விஷமில்லாத) நீர்ப்பாம்பானது, அஞ்சா புறம் கிடக்கும் - பயப்படாமல் வெளியிடத்திருக்கும்; (அதுபோல) நெஞ்சில்-மனத்தினுள்ளே, கரவு உடையார் - வஞ்சனையை உடையவர், தம்மை கரப்பர் - தங்களை மறைப்பர்; கரவு இலா-வஞ்சனையில்லாத, நெஞ்சத்தவர் - மனமுடையார், கரவார் - (தம்மை) மறையார், எ - று.

(க-து.) வஞ்சகர் மறைந்தொழுகுவர்; வஞ்சனை இல்லார் வெளிப் பட்டொழுகுவர்.

(வி-ரை.) எழுவாய் - கரவுடையார், நெஞ்சத்தவர்; பயனிலை - கரப்பர், கரவார். உடைமை - உடன்பாட்டுக் குறிப்புத் தொழிற்பெயர். அஞ்சா என்பதில் மல் விகுதி தொகுத்தல் விகாரம். கரவு: கர - பகுதி, உ - தொழிற்பெயர் விகுதி, வ் - உடம்படுமெய். நெஞ்சத்தவர் - சினை யடியாகப்பிறந்த பெயர்ப்பகுபதம்; நெஞ்சம் - பகுதி, அத்து: அ - சாரி யைகள், அர் - விகுதி, பகுதி ஈற்று மகரக்கேடும் அத்துச்சாரியை முத கரக்கேடும், அச்சாரியை ஈற்று உகரக்கேடும், வகரத்தோற்றமும் சந்தி. (உரு)

26. மன்னனு மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன் - மன்னனுக்குத்
தன்றேச மல்லாற் சிறப்பில்லை கற்றோற்குச்
சென்றவிட மெல்லாஞ் சிறப்பு.

(இ-ள்.) மன்னனுக்கு - அரசனுக்கு, தன் தேசம் அல்லால்-தன் னாட்டில் அல்லாமல், சிறப்பு இல்லை - (பிறதேசங்களில்) நன்கு மதிப்பு (பெருமை) இல்லை; கற்றோற்கு - (நூல்களைக்) கற்ற புலவனுக்கு (வித்துவானுக்கு), சென்ற இடம் எல்லாம் - (அவன்) போனதேசங் களில் எல்லாம், சிறப்பு - பெருமையுண்டாகும்; (ஆதலால்) மன்ன னும் - அரசனையும், மாசு அற கற்றோனும் - குற்றமறக்கற்ற வித்து வானையும், சீர் தூக்கின்-ஆராயுமிடத்து, மன்னனில்-அரசனைக்காட்டி லும், கற்றோன் - கற்ற புலவனே, சிறப்பு உடையன் - சிறப்புடைய னவன், எ - று.

(க-து.) அரசரிலும் கற்றோரே சிறப்புடையராவர்.

(வி-ரை.) எழுவாய் - கற்றோன்; பயனிலை-உடையன்; செ-ள்-சிறப்பு. உம்மைக ளிரண்டும் எண்ணுப்பொருளில் வந்தன. கற்றோன் - வினையாலணையும் பெயர். சீர் தூக்கின்: சீர் தூக்கு - பகுதி, இன் - எதிர்கால வினையெச்ச விகுதி. மன்னனின் - நீக்கப்பொருளில் வந்த ஐந்தாம் வேற்றுமைத் தொகாநிலைத்தொடர், உடையன் என்னும் குறிப்பு வினைமுற்றைக் கொண்டது. (உசா)

27. கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார் சொற்கூற்றம்
அல்லாத மாந்தர்க் கறங்கூற்றம் - மெல்லிய
வாழைக்குத் தானீன்ற காய்கூற்றம் கூற்றமே
இல்லிற் கிசைந்தொழுகாப் பெண்.

(இ-ள்.) மெல்லிய வாழைக்கு - மிருதுவாகிய வாழைமரத்துக்கு, தான் ஈன்ற காய் - தான் பெற்ற காய், கூற்றம் - எமன்போலத் துன்பஞ்செய்யும்; (அதுபோலக்) கல்லாத மாந்தர்க்கு - நூல்களைக் கற்கா மனிதருக்கு, கற்று உணர்ந்தார் சொல்-நூல்களைப் படித்து (அவற்றின் பொருளை) அறிந்தவருடைய உறுதிச்சொல், கூற்றம் - எமன்போலத் துன்பஞ்செய்யும்; அல்லாத மாந்தர்க்கு-தருமத்தின் வழிச்செல்லாத மனிதர்களுக்கு, அறம் - தருமதேவதை, கூற்றம் - எமன்போலத் துன்பஞ் செய்யும்; இசைந்து ஒழுகா பெண் - (கணவன் கருத்துக்கு) ஒத்து நடவாதபெண்ணே, இல்லிற்கு - குடும்பத்திற்கு, கூற்றம் - எமன்போலத் துன்பஞ்செய்யும், எ - று.

(க - து.) மூடர்க்குக் கற்றவர் சொல்லாலும், பாவிகட்குத் தருமதேவதையாலும், கணவனுக்குக் கற்பில்லா மனைவியாலும் துன்பமாம்.

(வி - ரை.) எழுவாய் - சொல், அறம், பெண்; பயனிலை - கூற்றம். சொல் - சொல்லாதபெயர். இல் - இடவாகுபெயர். ஏ - பிரிநிலை.

அல்லாத - எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சம்; அல் - பகுதி, ஆ - சாரியை, ல்-சந்தி, த் - எழுத்துப்பேறு, அ - விகுதி. மாந்தர் - பன்மையிலேயே வரும்பெயர். ஈன்ற : ஈன் + ற் + அ-பகுதி, இடைநிலை, விகுதிகள். (உஎ)

28. சந்தன மென்குறடு தான்றேய்ந்த காலத்தும்
கந்தங் குறைபடா தாதலால் - தந்தம்
தனஞ்சிறிய ராயினுந் தார்வேந்தர் கேட்டால்
மனஞ்சிறிய ராவரோ மற்று.

(இ - ள்.) மெல் சந்தனம் குறடு-மிருதுவாகிய சந்தனக்கட்டையானது, தான் தேய்ந்த காலத்தும்-தான்தேய்ந்தபொழுதும், கந்தம் குறைபடாது - (தன்னுடைய) வாசனை குறையாது; ஆதலால் - ஆகையால், தார் வேந்தர் - சேனையையுடைய அரசர், கேட்டால் - கேட்டினுல், தம் தம் தனம் சிறியர் ஆயினும் - தங்கள் தங்களுடைய பொருள் குறைந்தவர் ஆனாலும், மனம் சிறியர் - மனவுறுதி குறைந்தவர், ஆவரோ - ஆவர்களோ (ஆகார்), எ - று.

(க - து.) அரசர் செல்வத்திற் குறைந்தாலும் மனவலி குறையார்.

(வி - ரை.) எழுவாய் - வேந்தர்; பயனிலை - ஆவரோ. மென்குறடு - பண்புத்தொகைநிலைத்தொடர். தம் தம் என்னும் அடுக்குத் தனிமைப்பொருட்டு. மற்று - அசை. ஓ - எதிர்மறை. (உஅ)

29. மருவினிய சுற்றமும் வான்பொருளு நல்ல
உருவு முயர்குலமு மெல்லாந் - திருமடந்தை
ஆம்போ தவளோடு மாகு மவள்பிரிந்து
போம்போ தவளோடும் போம்.

(இ - ள்.) மருவு - வந்துசேர்ந்த, இனிய சுற்றமும் - இனிமையாகிய உறவும், வான் பொருளும் - மிகுந்த பொருளும், நல்ல உருவும் - சிறந்த அழகும், உயர் குலமும் - உயர்வாகிய குலமும், எல்லாம் - ஆகிய இவையெல்லாம், திருமடந்தை - திருமகள் (ஸ்ரீதேவி), ஆம்போது - வந்து கூடும்போது, அவளோடும் ஆகும் - அச்ஸ்ரீதேவியுடனே வந்து கூடும்; அவள் - அச் ஸ்ரீதேவி, பிரிந்து போம்போது - நீங்கிப் போகும் போது, அவளோடும் போம் - அச் ஸ்ரீதேவியுடனே போய்விடும், எ-று.

(க - து.) சுற்றமும் பொருளும் அழகும் உயர்குலமும் நிலையையுடையன அல்லவாம்.

(வி - ரை.) எழுவாய் - எல்லாம்; பயனிலை - ஆகும், போம். இனிய - உடன்பாட்டுக் குறிப்புப்பெயரெச்சம். முதற்கணுள்ள உம்மைகள் ஐ-ம் எண்ணுப்பொருளில் வந்தன. பின்னுள்ள இரண்டில் முன்னது உயர்வுசிறப்பு; பின்னது இழிவுசிறப்பு. ஆம், போம் என்பவற்றில் உயிர்மெய் கெட்டது. (உக)

30. சாந்தனையுந் தீயனவே செய்திடினுந் தாமவரை
ஆந்தனையுங் காப்ப ரறிவுடையோர் - மாந்தர்
குறைக்குந் தனையுங் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாங் கண்டீர் மரம்.

(இ - ள்.) மரம் - மரமானது, மாந்தர் - மனிதர்கள், குறைக்குந் தனையும் - (தன்னை) வெட்டுமளவும், குளிர் நிழலை தந்து - குளிர்ந்த நிழலைக் கொடுத்து, மறைக்கும் - (வெயிலை) மறைக்கும்; (அதுபோல) அறிவுடையோர் - அறிவுடையவர்கள், சாந்தனையும் - சாகுமளவும், தீயனவே செய்திடினும் - (தமக்குப் பிறர்) தீமைகளையே செய்தாராயினும்,

தாம் அவரை - தாங்கள் அத்தீமை செய்தாரை, ஆம் தனையும் காப்பார்- (தம்மால்) ஆகுமளவும் பாதுகாப்பார், எ - று.

(க - து) அறிவுடையோர் தமக்குத் தீங்கு செய்தவர்களையும் நன்மை செய்து காப்பார்.

(வி - ரை.) எழுவாய் - அறிவுடையோர், பயனிலை - காப்பார்; செ - ள் : அவரை. செய்திடினும் - இதிலுள்ள உம்மை இறந்தது தழீஇயதனோடு இழிவுசிறப்புமாம். சாந்தனையும், ஆந்தனையும், குறைக்குந்தனையும் - இவற்றிலுள்ள உம்மை முற்றுப்பொருளோடு உயர்வு சிறப்புமாம். எ - பிரிநிலை. ஆம், கண்டீர் என்னும் இரண்டசைநிலைகளில் பின்னது முன்னிலைக்குரியது. தந்து: தா - பகுதி குறுகிற்று; த்- சந்தி, த்-இடைநிலை, உ - விகுதி, த் - ந் ஆக மெலிந்தது. (௩௧)

## வாக்குண்டாம் மூலமும் உரையும்

முற்றிற்று.



உ

சிவமயம்.

# வாக்குண்டாம்

# செய்யுள் முதற்குறிப்பகராதி.



செய்யுள் முதற்குறிப்பகராதி முற்றிற்று.

## காலப்பிரமாணம்.



நிமிஷம் பதினைந்து கொண்டது ஒருகாஷ்டை. காஷ்டை முப்பது கொண்டது ஒருகலை. கலை முப்பது கொண்டது ஒரு முகூர்த்தம். முகூர்த்தமென்பது இரண்டுநாழிகை. முகூர்த்தம் முப்பதுகொண்டது பகலும் இரவுங்கூடிய ஒருநாள். நாள் பதினைந்து கொண்டது ஒரு பக்ஷம். பக்ஷம் இரண்டு கொண்டது ஒரு மாசம். மாசம் ஆறுகொண்டது ஒரு அயனம். அயனம் இரண்டுகொண்டது ஒரு வருஷம். இம்மனுஷ வருஷம் ஒன்று தேவர்களுக்கு ஒரு நாளாம். தேவர்களுக்கு உத்தராயணம் பகலும், தக்ஷிணாயனம் இராத்திரியுமா யிருக்கும். மனுஷவருஷம் முந்நூற்றறுபது கொண்டது தேவர்களுக்கு ஒருவருஷமாம். தேவவருஷம் பன்னீராயிரங் கொண்டது ஒரு சதுர்யுகமாம்.

| யுகம். | தேவவருஷம். | மனுஷவருஷம். |
|---|---|---|
| கிருதயுகம் | ௪௮00 | ௧௭ லக்ஷத்து ௨௮000 |
| திரேதாயுகம் | ௩௬00 | ௧௨ லக்ஷத்து ௯௬000 |
| துவாபரயுகம் | ௨௪00 | ௮ லக்ஷத்து ௬௪000 |
| கலியுகம் | ௧௨00 | ௪ லக்ஷத்து ௩௨000 |
| சதுர்யுகம் | ௧௨000 | ௪௩ லக்ஷத்து ௨0000 |

இப்படிச் சதுர்யுகம் ஆயிரம் திரும்பினால், பிரமாவுக்கு ஒரு பகலாகும்; பின்னும் ஆயிரந் திரும்பினால் பிரமாவுக்கு ஓரிராத்திரியாகும். ஆகவே இரண்டாயிரஞ் சதுர்யுகங் கொண்டது பிரமாவுக்கு ஒருநாளெனப்படும். இந்த நாள் முப்பது கொண்டது ஒருமாசம். இந்த மாசம் பன்னிரண்டு கொண்டது ஒருவருஷம். இந்த வருஷம் நூறானால், பிரமாவுக்கு ஆயுசு

முடியும். இவ்வியல்புடைய பிரமாக்கள் எண்ணில்லாதவர்கள் பிறந்திறந்தார்கள். பிரமாவினுடைய ஆயுசு பரமெனப் பெயர் பெறும். அதிற் பாதியாகிய ஐம்பதுவருஷம் பரார்த்தமென்று சொல்லப்படும்.

பிரமாவினுடைய பகலாகிய ஆயிரஞ் சதுர்யுகத்திலே பதினான்கு மநுக்கள் அதிகாரம்பண்ணுவார்கள். அவர்கள்பெயர்:- சுவாயம்புவர், சுவாரோசிஷர், ஔத்தமர், தாமசர், ரைவதர், சாக்ஷுஷர், வைவஸ்வதர், சூரியசாவர்ணி, தக்ஷசாவர்ணி, பிரமசாவர்ணி, தருமசாவர்ணி, ருத்திரசாவர்ணி, ரோச்சியர், பாவியர் என்பவைகளாம். ஒவ்வொரு மநுவந்தரத்துக்கு எழுபத்தொரு சதுர்யுகமாகும். எழுபத்தொரு சதுர்யுகம், தேவமானத்தினாலே எட்டுலக்ஷத்தைம்பத்தீராயிரம் வருஷங்களாம். மனுஷ்யமானத்தினாலே முப்பதுகோடியே அறுபத்தேழு லக்ஷத்திருபதினாயிரம் வருஷங்களாம். ஒருமநுவந்தரத்துக்கு எழுபத்தொரு சதுர்யுகமாகப் பதினான்கு மநுவந்தரத்துக்கும் தொளாயிரத்துத் தொன்னூற்றுநான்கு சதுர்யுகமாகும். பிரமாவின் பகலிலே மிஞ்சிய சதுர்யுகம் ஆறு.

இப்படிப் பதினான்கு மநுவந்தரங்களானால், பிரமாவுக்கு ஒருபகலாம். இதன்முடிவிலே தினப்பிரளயம் உண்டாகும். அப்பொழுது பிரமா அப்பகலளவினதாகிய இராத்திரியிலே யோகநித்திரை செய்வர். இப்படி ஆயிரஞ் சதுர்யுகவளவையையுடைய இராத்திரி கடந்தபின்பு பிரமாத் திரும்பியும் படைத்தற்றொழில் செய்வர். பிரமாவுக்கு ஒருபகல் ஒருகற்பமெனப்படும். கற்பமாவது சிருட்டிமுதற் பிரளயமிறுதியாகிய காலம். ஒருகற்பத்துக்கு மனுஷவருஷம் நானூற்றுமுப்பத்திரண்டு கோடி.

பிரமாவினுடைய ஒருபகலிலே பதினான்கிந்திரர்கள் இறப்பார்கள். ஒருமாசத்திலே நானூற்றிருபதிந்திரர்கள் இறப்பார்கள்.

ஒருவருஷத்திலே ஐபாயிரத்து நாற்பதிந்திரர்கள் இறப்பர்கள். பிரமாவுடைய ஆயுசுள்ளே ஐந்துலக்ஷத்து நாற்பதினாயிரம் இந்திரர்கள் இறப்பர்கள்.

தற்காலத்தில் இருக்கின்ற பிரமாவுக்கு முதற்பரார்த்த மாகிய ஐம்பது வயசுஞ்சென்றன. இப்போது நடப்பது இரண்டாம் பரார்த்தத்தில் முதல்வருஷத்து முதன்மாசத்து முதற்றினம். இது சுவேதவராககற்பமெனப்படும். பிரளயசலத்தில் முழுகியிருந்த பூமியை விஷ்ணு வெள்ளைப்பன்றி யுருவங்கொண்டு மேலே எடுத்த கற்பமாதலிற் சுவேதவராககற்பமெனப்பட்டது. இத்தினத்திலே சுவாயம்புவமநு, சுவாரோசிஷமநு, ஔத்தமமநு, தாமசமநு, ரைவதமநு, சாக்ஷுஷமநு என்னும் ஆறு மநுக்கள் இறந்துபோனார்கள். இப்போது ஏழாமநுவாகிய வைவஸ்த மநுவினுடைய காலம் நடக்கின்றது. இவருடைய காலத்திலே இருபத்தேழு சதுர்யுகங்கள் சென்றன. இப்பொழுது இருபத்தெட்டாஞ் சதுர்யுகத்துக்கலியுகம் நடக்கின்றது.

மாசம் சௌரமாசமும், சாந்திரமாசமுமென இருவகைப்படும். சூரியன் ஒருராசியை அனுபவிக்குங் காலம் சௌரமாசம். ஒரு அமாவாசை கழித்த பிரதமைமுதல் மற்றொரு அமாவாசைவரையும் உள்ள முப்பது திதிகொண்ட காலம் சாந்திரமாசம். சூரியன் பன்னிரண் டிராசிகளையுஞ் சுற்றிவருங்காலம் சௌரமான வருஷம். அது ஏறக்குறைய முந்நூற்றறுபத்தைந்து தினங்கொண்டது. சந்திரனுடைய சஞ்சாரத்தினால் உண்டாகிய பன்னிரண்டு அமாவாசை கொண்டகாலம் சாந்திரமான வருஷம். நான்கு வருஷத்துக்கு ஒருதரம் சாந்திரவருஷத்திலே பதின்மூன்று அமாவாசைவரும். அதில் அதிகமாகிய ஒரு மாசத்தை அதிகமாசமென்று வழங்குவர். சூரியன் மேடராசியிற் பிரவேசிக்குந் தினமே சௌரவருஷப்பிறப்பு. சூரியன்

மீனராசியிற் பிரவேசித்த மாசமாகிய பங்குனிமாசத்துச் சுக்கிலபக்ஷத்துப் பிரதமையே சாந்திர வருஷப்பிறப்பு.

---

## காலம்.



காலம் என்பது உலகம் நடைபெறுதற்கு முக்கிய காரணமாயுள்ளது. காலத்தை நம்மவர்கள் மிகக்குறைந்த பிரமாணமுள்ள நிமிஷம் முதலாக மேன்மேற் கூடின பிரமாணம் உள்ளவைகளாகப் பகுத்து வரையறை செய்து, அவைகளுக்கு ஒவ்வொரு பெயர் கொடுத்திருக்கிறார்கள். அவைகளின் பெயர்கள் நிமிஷம், காஷ்டை, கலை, நாழிகை, முகூர்த்தம் என்னும் இவை முதலாயினவாம். அங்கிலேயர்கள், இந்தக் காலத்தை செக்கன், மினிட்டு, மணி என்பனவாக வெவ்வேறு வகைப்பட அளவு செய்து, பெயர் கொடுத்து வழங்குகின்றார்கள். நமக்கு இரண்டரை நாழிகை நேரம் அங்கிலேயர்களுக்கு ஒருமணி எனப்படும். இப்படிக் கணக்கிடும்பொழுது, அங்கிலேயர்களுடைய இருபத்துநான்கு மணிநேரம் நமக்கு அறுபது நாழிகை ஆகிறது. இந்த அறுபது நாழிகையில், சூரியோதயம் முதலாக முன் முப்பது நாழிகையும் பகல் என்றும், சூரியாஸ்தமயனம் முதலாகப் பின் முப்பது நாழிகையும் இரவு என்றும், இந்த இரண்டும் சேர்ந்து ஒருநாள் என்றும், வழங்கப்படும். நாள், வாரம், மாசம், வருஷம் என்னும் இவைகளைப் பெரும்பான்மையும் இந்தியர்களைப்போலவே அங்கிலேயரும் கொள்வர்.

இப்படிக் காலத்தைப் பகுத்துக்கொண்டது, நாம் செய்யுந் தொழில்களெல்லாம் அது அது முற்றுப்பெற வேண்டிய அளவில் முற்றுப்பெறுதற் பொருட்டாம். காலத்தைப்பற்றிச் சிந்தியாவிட்டால், ஒருவரும் ஒரு தொழின்முயற்சியும் செய்யாது

கெடுவர். காலம் அருவமாயிருப்பினும், அது நமக்கு மிகவும் உபயோகியாயிருக்கிறது. அதனுடைய கழிவையும், கழிந்த அது நமக்குப் பின்னே கிடைக்கப்பெருமையையும், நாம் எப்பொழுதும் நினைத்தல்வேண்டும். எப்படியெனில், ஒருவித்தியா சாலையிற் காலை எட்டுமணிக்கு வந்து கல்வி கற்கவேண்டிய ஒரு மாணுக்கன், ஒன்பது மணிக்கு வருவானேயானுல் முதல் மணியிற் கற்பித்த பாடங்களை இழந்து அந்த இழந்த காலத்துக்காகக் கவலைப்படுகின்ருன்; இந்த ஒரு மணிநேரமும் பின் அவனுக்குக் கிடைப்பதேயில்லை.

இப்படிக் காலத்தைக் குறித்து நாம் நினைக்கிறதினுலே, எங்களுடைய மனமொழிமெய்கள் தத்தம் தொழில்களைச் சோம்பலின்றிச் செய்து நல்வழிப்பட, அதனுல் இம்மை மறுமை இன்பங்களைத் தப்பாது அடையலாம். அளவிறந்த பரமாணுக்கள் ஒருங்கு திரண்டு மலைகளாதல்போல, அநேக நிமிஷங்கள் ஒருங்குசேர்ந்து வருஷங்களாகின்றன். அவைகள் கழியக் கழிய நம்முடைய ஆயுசும் கழிகின்றது.

காலத்தை வரையறைசெய்துகொள்வதற்காகக் கடவுளாற் கொடுக்கப்பட்ட கருவிகள் சூரியன் முதலாகிய கிரகங்கள். அவைகளை ஆதாரமாகக்கொண்டு மனிதர் காலவரையறை செய்துகொள்ளுங் கருவிகள் கடிகாரங்கள். கடிகாரம் வைத்திருப்பது தொழின் முயற்சிக்கு ஏதுவாயிருக்கும்.



உ

கடவுள் துணை.

ஔவையார் அருளிச்செய்த

# நல்வழி

## மூலமும் உரையும்.





சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

1914

விலை அணா $1\frac{1}{2}$.

உ

கணபதி துணை.

ஔவையார் அருளிச்செய்த

# நல்வழி

## மூலமும் உரையும்.

---

### காப்பு.

பாலுந் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலுங் கலந்துனக்கு நான்றருவேன் — கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச்
சங்கத் தமிழ்மூன்றுந் தா.

(இதன் பொருள்.) கோலம்-அழகு, செய்-செய்கின்ற, துங்கம்-உயர்வாகிய, கரி - யானை, முகத்து - முகத்தையுடைய, தூ - பரிசுத்தமாகிய, மணியே - இரத்தினம்போன்ற விநாயகக்கடவுளே! நான்-அடியேன், உனக்கு - தேவரீராகிய உமக்கு, பாலும்-பாலும், தெளி-தெளிந்த, தேனும் - தேனும், பாகும்-வெல்லப்பாகும், பருப்பும் - பருப்பும், இவை நாலும்-(ஆகிய) இந்நான்கையும், கலந்து-கூட்டி, தருவேன்-நிவேதிப்பேன்; நீ-தேவரீர், எனக்கு-அடியேனுக்கு, சங்கம்-சங்கத்தில் வளர்க்கப்பட்ட, தமிழ் மூன்றும் - (இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்னும்) தமிழ் மூன்றையும், தா - தந்தருளும், என்றவாறு.

(கருத்து.) விநாயகக்கடவுளுக்குப் பூசைசெய்யின் முத்தமிழ்ப் புலமையும் உண்டாகும்.

(விசேஷ உரை.) நான் - எழுவாய், தருவேன்-பயனிலை, நான்கும்-செயப்படுபொருள். நீ - எழுவாய், தா-பயனிலை, மூன்றும்-செயப்படுபொருள். உம்மைகள் ஐந்தில் முதலில் உள்ள நான்கும் எண்ணுப்பொருள்; மற்றையதொன்று முற்றப்பொருளது. மணி-உவமையாகுபெயர். குவ்வுருபு இரண்டும் கொடைப்பொருள்.

---

## நூல்.

1. புண்ணியமாம் பாவம்போம் போனநாட் செய்தவவை
மண்ணிற் பிறந்தார்க்கு வைத்தபொரு—ளெண்ணுங்கா
லீதொழிய வேறில்லை யெச்சமயத் தோர்சொல்லுந்
தீதொழிய நன்மை செயல்.

(இ - ள்.) புண்ணியம் - புண்ணியமே, ஆம் - செய்யத்தக்கது; பாவம் - பாவமே, போம் - ஒழியத்தக்கது; போனநாள் - முற்பிறப்பில், செய்த - செய்யப்பட்ட, அவை - அப்புண்ணிய பாவங்களே, மண்ணில் - இம் மண்ணுலகிலே, பிறந்தார்க்கு - பிறந்த மனிதர்களுக்கு, வைத்த - (இப்பிறப்பில் இன்பதுன்பங்களை அநுபவிப்பதற்குக் காரணமாக) வைத்த, பொருள் - பொருளாகும்; எண்ணுங்கால் - ஆராயுமிடத்து, எ - எந்த, சமயத்தோர் - சமயத்தவர்கள், சொல்லும் - சொல்வதும், ஈது ஒழிய-இந்தப்பொருளேயல்லாமல், வேறு-மற்றொன்றும், இல்லை-இல்லை; (ஆதலினாலே) தீது - பாவம், ஒழிய - நீங்க, நன்மை - புண்ணியத்தை, செயல் - செய்க, எ-று.

(க-து.) இன்பத்துக்குக் காரணம் புண்ணியமும் துன்பத்துக்குக் காரணம் பாவமுமாதலிற் பாவத்தை ஒழித்துப் புண்ணியத்தைச்செய்க.

(வி-ரை.) புண்ணியம்-எழுவாய், ஆம்-பயனிலை.பாவம்-எழுவாய், போம் - பயனிலை. சொல்லும் - எழுவாய், இல்லை - பயனிலை, நீ - தோன்றா எழுவாய், செயல்-பயனிலை,நன்மை - செயப்படுபொருள். (க)

2. சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கா
னீதி வழுவா நெறிமுறையின்—மேதினியி
லிட்டார் பெரியோ ரிடாதா ரிழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ள படி.

(இ - ள்.) சாற்றுங்கால் - சொல்லுமிடத்து, சாதி - சாதிகள், இரண்டு - (உயர்வாகிய சாதியென்றும், இழிவாகிய சாதியென்றும் சொல்லுகின்ற) இரண்டு சாதிகளே, ஒழிய - அல்லாமல், வேறு-வேறா கிய சாதிகள், மேதினியில் - பூமியில், இல்லை - இல்லை; (அவ்விரண்டு சாதியாரும் யாவரெனில்) நீதி - நியாயம், வழுவா - தவறாத, நெறி - வழியிலேநின்று, முறையின்-முறைமையோடு, இட்டார்-(சற்பாத்திரங் களாய் உள்ளவருக்குக்) கொடுத்தவரே, பெரியோர்-உயர்ந்த சாதியார்; இடாதார் - கொடாதவரே, இழி - தாழ்ந்த, குலத்தோர் - சாதியார்; பட் டாங்கில்-உண்மைநூலில், உள்ள-இருக்கின்ற, படி - கிரமம் (இதுவே யாம்), எ-று.

(க - து) சற்பாத்திரத்துக்குக் கொடுத்தவரே உயர்வாகிய சாதி யார்; கொடாதவரே இழிவாகிய சாதியார்.

(வி ரை.) வேறு-எழுவாய், இல்லை-பயனிலை. இட்டார்-எழுவாய், பெரியோர் - பயனிலை. இடாதார் - எழுவாய், இழிகுலத்தோர் - பய னிலை. இது-தோன்றா எ-ய், உள்ளபடி - பயனிலை. சாற்றுங்கால் என் பதை ஒருமொழியாகக்கொண்டால் செயினென்னும் வாய்பாட் டெதிர் கால வினையெச்சமாகவும், தொடர்மொழியாகக் கொள்ளின் பெயரெச் சத் தொகாநிலைத்தொடராகவுங் கொள்க; சாற்ற-பகுதி, உம்-சாரியை, கால் - எதிர்காலவினையெச்சவிகுதி, பகுதியீற் றகரக்கேடும், சாரியை யீற்று மகரத்திரிபும் சந்தி. (உ)

3. இடும்பைக் கிடும்பை யியலுடம்பி தன்றே
யிடும்பொய்யை மெய்யென் றிராதே—யிடுங்கடுக

வுண்டாயி னுண்டாகு மூழிற் பெருவலிநோய்
விண்டாரைக் கொண்டாடும் வீடு.

(இ - ள்.) இயல்-திரிகின்ற, உடம்பு இது - இந்த உடம்பானது, இடும்பைக்கு - பலதுன்பங்களை, இடும்-நிறைத்துவைத்த, பை அன்றே- பை அல்லவா; இடும்-(போசனத்தை) இடுகின்ற, பொய்யை - நிலையில்லாமல் அழிந்துபோகத்தக்க இத்தேகத்தை, மெய் என்று - எந்நாளும் நிலைபுடையதென்று, இராது-நம்பி இராமல், கடுக-சீக்கிரத்திலேதானே, இடும்-(சற்பாத்திரர்களா யுள்ளவர்களுக்குக்) கொடுங்கள்; உண்டாயின்- (இத்தருமம் உங்களிடத்து) உண்டானால், பெரு - பெரிய, வலி - வல்லமைமிக்க, நோய் - மலநோய், விண்டாரை - நீங்கிய பெரியோர்களை, கொண்டாடும் - மெச்சிக்கொள்கின்ற, வீடு-மோட்சமானது, ஊழின் - முறைமையாக, உண்டாகும்-(உங்களுக்கு) உண்டாகும், எ-று.

(க - து.) நிலையில்லாத உடம்பு உள்ளபொழுதே சற்பாத்திரத்திலே தானஞ் செய்தவருக்கு, அந்தத் தருமத்தினாலே சற்குருவினது திருவருளும், அந்தத் திருவருளினாலே ஞானமும், அந்த ஞானத்தினாலே முத்தியும் சித்திக்கும்.

(வி - ரை.) உடம்பு-எழுவாய், பை-பயனிலை நீங்கள்-தோ-எ-ய், இடும் - பயனிலை, பொருளை என்னும் செயப்படுபொருள் மறைந்து நின்றது. வீடு - எழுவாய், உண்டாகும் - பயனிலை. (௩)

4. எண்ணி யொருகருமம் யார்க்குஞ்செய் யொண்ணாது
புண்ணியம் வந்தெய்து போதல்லாற்—கண்ணில்லான்
மாங்காய் விழவெறிந்த மாத்திரைக்கோ லொக்குமே
ஆங்கால மாகு மவர்க்கு.

(இ - ள்.) யார்க்கும் - யாவருக்காயினும், புண்ணியம் - (முன் செய்த)புண்ணியம், வந்து-(தம்மிடம்)வந்து, எய்து-அடையும்,போது

பொழுது, அல்லால் - அல்லாமல், எண்ணி - (மற்றைக் காலத்திலே) நினைத்து, ஒரு கருமம்-ஒருதொழிலையும், செய்யொண்ணாது - செய்ய முடியாது; (அப்புண்ணியம் வந்துகூடாதகாலத்திற் செய்யுந் தொழிலானது) கண் இல்லான் - குருடன், மாங்காய் - மாமரத்திலுள்ள காயானது, விழ - விழுவதற்கு, எறிந்த - வீசிய, மாத்திரைக்கோல் - மாத்திரைக்கோலை, ஒக்கும்-போலும்; ஆம் காலம் (புண்ணியம் வந்து) கூடிய போது, அவர்க்கு - தொழிலெடுத்தவர்களுக்கு; ஆகும் - (அத்தொழில் தானே) முடிவுபெறும், எ - று.

(க - து.) புண்ணியமில்லாதவன் எண்ணியதொழிலும் முடியப் பெறாது கைப்பொருளும் இழப்பன்.

(வி-ரை.) தொழில், தொழில், அத்தொழில்-தோன்றா எழுவாய்; ஒண்ணாது, ஒக்கும், ஆகும் - பயனிலை; கோல் - செயப்படுபொருள். உம்மை உயர்வுசிறப்போடு முற்றுப்பொருளது. செய்-செய்ப என்னும் வினையெச்சத்தின் விகுதி அகரம் தொக்கது. எய்துபோது - வினைத்தொகைநிலைத்தொடர். ஆங்காலம் - ஆகும் என்னும் பெயரெச்சத்தின் உயிர்மெய் கெட்டது. ஏ-ஈற்றசை. (ச)

5. வருந்தி யழைத்தாலும் வாராத வாரா
பொருந்துவன போமினென்றாற் போகா—இருந்தேங்கி
நெஞ்சம் புண்ணாக நெடுந்தூரந் தாநினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில்.

(இ - ள்.) வருந்தி - வருத்தப்பட்டு, அழைத்தாலும் - அழைக்கினும், வாராத - (தமக்கு) வாராதவைகள், வாரா - (ஓர்பொழுதேனும்) வாராவாம்; பொருந்துவன-(தமக்கு) வருமவைகள், போமின் என்றால்-வேண்டாமென்று வெறுத்தாலும், போகா-போகாவாம்; (இவ்வுண்மையையறியாமல்) ஏங்கி இருந்து - ஏக்கமுற்று இருந்து, நெஞ்சம்-மனம், புண் ஆக-புண்ணாம்படி, தாம்-(அவைகளைத்) தாங்கள், நெடுந் தூரம்-அதிக

மும், நினைந்து எண்ணி எண்ணி, துஞ்சுவதே-இறந்துபோவதே, மாந்தர் - மனிதர்களுடைய, தொழில் - வேலையாகும், எ-று.

(க - து.) இருவினைகளைச் செய்தவர் அவற்றின் பயன்களாகிய இன்பதுன்பங்களை அநுபவிப்பது தப்பாதாதலின், அவற்றின்பொருட்டுக் கவலையுற்று வாழ்நாளை வீணுட்போக்குதல் அறியாமை.

(வி - ரை.) வாராத-எழுவாய், வாரா - பயனிலை. பொருந்துவன-எழுவாய், போகா - பயனிலை. துஞ்சுவது - எழுவாய், தொழில் - பயனிலை. உம்மை - உயர்வுசிறப்பு, வாரா - எதிர்மறை வினையாலணையும் பெயர். பொருந்துவன - உடன்பாட்டு வினையாலணையும் பெயர். ஏ - தேற்றம். மாந்தர் என்பது எப்போதும் பன்மையாதலால் ஒருமையில் வாராது. (ரு)

6. உள்ள தொழிய வொருவர்க் கொருவர்சுகங்
கொள்ளக் கிடையா குவலயத்தில்—வெள்ளக்
கடலோடி மீண்டு கரையேறி னாலென்
உடலோடு வாழு முயிர்க்கு.

(இ - ள்.) ஒருவர்க்கு - ஒருவருக்கு, உள்ளது-இருப்பது, ஒழிய - அல்லாமல், ஒருவர் - மற்றொருவருடைய, சுகம் - சுகங்களை, கொள்ள-அநுபவிக்க விரும்பினால், கிடையா - (அவை) கிடைக்காவாம்; (ஆதலினால்) குவலயத்தில் - இப்பூமியிலே, உடலோடு-உடம்புகளோடு கூடி, வாழும் - வாழுகின்ற, உயிர்க்கு - உயிர்களுக்கு, வெள்ளம் - மிகுந்த நீரையுடைய, கடல் - சமுத்திரத்திலே, ஓடி - (கப்பலேறிச்) சென்று, மீண்டு-(சம்பாதித்துக்கொண்டு) திரும்பிவந்து, கரை ஏறினால் - கரையேறினாலும், என் - அதனால் யாதுபயன், எ - று.

(க - து.) பெருமுயற்சிசெய்து பெரும்பொருள் சம்பாதித்தாலும் ஊழினளவன்றி அதிகமாக அநுபவித்தல் கூடாது.

(வி - ரை.) அவை - எழுவாய், கிடையா - பயனிலை. பயன் - தோன்றா எ - ய், என் - பயனிலை. உள்ளது - உடன்பாட்டுக் குறிப்பு வினையாலணையும்பெயர்; உள் - பகுதி, து - ஒன்றன்பாற்படர்க்கை விகுதி, அ-சாரியை, ள்-சந்தி. கிடையாக்குவலயம் - ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்சத் தொகாநிலைத்தொடர். என்-எவனென்னும் வினை வினைக் குறிப்பின் மரூஉ. (சு)

7. எல்லாப் படியாலு மெண்ணினா லிவ்வுடம்பு
பொல்லாப் புழுமலி நோய்ப் புன்குரம்பை—நல்லா
ரறிந்திருப்பா ராதலினா லாங்கமல நீர்போற்
பிறிந்திருப்பார் பேசார் பிறர்க்கு.

(இ-ள்.) எல்லாப்படியாலும் - சகலவிதங்களாலும், எண்ணினால்- ஆராயுமிடத்து, இவ்வுடம்பு - இந்தச்சரீரம், பொல்லா - கொடிதாகிய, புழு - புழுக்களுக்கும், மலி - மிகுந்த, நோய் - வியாதிகளுக்கும் (இருப் பிடமாகிய), புல்-சிறிய, குரம்பை - வீடுபோன்றதாகும்; நல்லார் - அறி வுடையோர்கள். அறிந்து இருப்பார் (இவ்வுடம்பினிழிவை) அறிந்திருப் பார்கள், ஆதலினால் - ஆகையால், கமலம்-தாமரையிலையில், நீர்போல் - நீரைப்போல், பிறிந்து இருப்பார்-(இவ்வுடம்பிற் கூடியிருந்தும்) கூடா திருப்பார்கள்; (பயன்படாமையால்) பிறர்க்கு-மற்றவர்களுக்கு, பேசார்- (தங்கள் நிலையைச்) சொல்லார்கள், எ - று.

(க-து) உடம்பு வேறு தாம் வேறு என்று அறிந்த ஞானிகள் உடம்போடு கூடியிருப்பினும் பற்றற்றிருப்பார்கள்; ஆதலால் அவர்க ளுக்குத் துன்பமே இல்லை.

(வி - ரை.) உடம்பு - எழுவாய், குரம்பை - பயனிலை. நல்லார்- எழுவாய்; பிறிந்திருப்பார், பேசார் - பயனிலை, நிலையை என்னுஞ் செயப்படுபொருள் மறைந்து நின்றது. உம்மை - முற்று. ஆம் - அசை. கமலம் - முதலாகுபெயர். (எ)

8. ஈட்டும் பொருண்முயற்சி யெண்ணிறந்த வாயினுமூழ்
கூட்டும் படியன்றிக் கூடாவாம்—தேட்ட
மரியாதை காணு மகிதலத்தீர் கேண்மின்
தரியாது காணுந் தனம்.

(இ - ள்.) மகிதலத்தீர் - பூமியிலுள்ள மனிதரே! கேண்மின் - கேளுங்கள்; ஈட்டும் - தேடுதற்குரிய, பொருள் - பொருள்களானவை, முயற்சி - முயற்சிகள், எண் - அளவு, இறந்த - இல்லாதன, ஆயினும் - ஆனாலும், ஊழ் - விதி, கூட்டும் - சேர்க்கும், படி - முறை, அன்றி - அல்லாமல், கூடா - சேராவாம்; (ஊழினாலே சேரினும்) தனம் - அப்பொருள், தரியாது-நிலைபெறாது; (ஆதலினால்) தேட்டம் - நீங்கள் தேடத்தருவது, மரியாதை - மரியாதையேயாம், எ - று.

(க - து.) பொருள் ஊழினளவன்றி வாராமையானும், வந்த பொருளும் நிலைபெறாமையானும், நிலைபெறுவதாகிய நல்லொழுக்கத்தையே தேடல்வேண்டும்.

(வி - ரை.) பொருள் - எழுவாய், கூடாவாம் - பயனிலை. தனம் - எழுவாய், தரியாது - பயனிலை. தேட்டம் - எழுவாய், மரியாதை - பயனிலை. உம்மை - உயர்வுசிறப்பு. கூட்டும்படி - பெயரெச்சத் தொகாநிலைத்தொடர். படி என்னும் இடைச்சொல் ஈண்டுப் பெயர்த்தன்மைப் பட்டு நின்றது. ஆம்-அசைச்சொல். காணும் இரண்டும் முன்னிலை அசைச்சொற்கள். மரியாதை - நன்னெறியில் நிற்றல். (அ)

9. ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா
றூற்றுப் பெருக்கா லுலகூட்டு—மேற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ரானாலு
மில்லையென மாட்டா ரிசைந்து.

(இ - ள்.) ஆற்றுப்பெருக்கு - ஆற்றுவெள்ளம், அற்று - வற்றிப் போய், (மணலானது வெய்யிலினால் காய்ந்து நடப்பவருடைய) அடி -

காலை, சுடும் - சுடுகின்ற, அந்நாளும் - அக்காலத்திலும், அ - அந்த, ஆறு - நதியானது, ஊற்றுப்பெருக்கால் - (தன்னிடமுள்ள) ஊற்று நீர்ப்பெருக்கினால், உலகு - உலகத்தாரை, ஊட்டும் - உண்பிக்கும்; (அதுபோல) நல்ல - சிறந்த, குடி - குடியிலே, பிறந்தார் பிறந்தவர்கள், நல்கூர்ந்தார் ஆனாலும் - வறுமையை யடைந்தார்களாயினும் (தம்மிடம் உள்ளதை), ஏற்றவற்கு - இரந்தவர்க்கு, இசைந்து - (கருத்து) இசைந்து, இல்லை என - இல்லையென்று, மாட்டார் - சொல்லமாட்டாது கொடுப்பர், எ - று.

(க - து) உயர்ந்த குடியிற் பிறந்தவர் வறுமைக்காலத்திலும் இரந்தவருக்குக் கொடாது விடார்.

(வி - ரை.) ஆறு-எழுவாய், ஊட்டும்-பயனிலை, உலகு - செயப்படுபொருள். பிறந்தார் - எழுவாய், மாட்டார் - பயனிலை. ஆற்றுப்பெருக்கு - ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர், தொழிற்பண்புத் தற்கிழமைப்பொருள். நல்லகுடி - குறிப்புப் பெயரெச்சத் தொகாநிலைத்தொடர். ஏற்றவர் - இறந்தகால வினையாலணையும் பெயர். ஏல் - பகுதி, அர் - விகுதி, ற் - இடைநிலை, அகரம் - சாரியை; லகரத்திரிபும் வகரத்தோற்றமும் சந்தி. பெருக்கு - முதனிலைதிரிந்த தொழிலாகு பெயர். உலகு - இடவாகுபெயர். உம் இரண்டும் உயர்வுசிறப்பு. (கூ)

10. ஆண்டாண்டு தோறு மழுது புரண்டாலு
மாண்டார் வருவரோ மாநிலத்தீர்—வேண்டா
நமக்கு மதுவழியே நாம்போ மளவும்
எமக்கென்னென் றிட்டுண் டிரும்.

(இ-ள்.) மா-பெரிய, நிலத்தீர்-பூமியிலுள்ளமனிதர்களே! ஆண்டு-(இறந்த) அவ்விடத்தில், ஆண்டுதோறும் வருடந்தோறும், அழுது-அழுது, புரண்டாலும்-புரண்டாலும், மாண்டார்-இறந்தவர், வருவரோ-திரும்பிவருவாரோ, (வரமாட்டார் ஆதலினால்) வேண்டா-(-அழ) வேண்டுவ

தில்லை; நமக்கும் - நமக்கும், அது - அம்மரணமே, வழியே - வழியாகும்; நாம் - நாம், போம் அளவும் - இறந்துபோமளவும், எமக்கு - நமக்கு, என் - யாதுசம்பந்தம், என்று - என்று (கருதி), இட்டு - பிச்சையிட்டு, உண்டு-(நீங்களும்)உண்டு, இரும்-(கவலையற்று) இருங்கள்,எ-று.

(க - து.) இறந்தவர்பொருட்டு அழுகையினால் உடம்பிற்குத் தளர்ச்சியும் உயிருக்கு வருத்தமும் உண்டாமே யன்றிச் சிறிதும் பயனில்லாமையால், கவலையையொழித்துச் சற்பாத்திரத்துக்குக் கொடுத்து வாழ்க.

(வி - ரை.) நீங்கள் - தோன்று எழுவாய், வேண்டா - பயனிலை. மாண்டார் - எழுவாய், வருவரோ - பயனிலை. அது-எழுவாய், வழியே-பயனிலை. நீங்கள் - தோன்று எழுவாய், இரும் - பயனிலை. (௧0)

11. ஒருநா ளுணவை யொழியென்றா லொழியா
யிருநாளுக் கேலென்றா லேலா—யொருநாளு
மென்னோ வறியா யிடும்பைகூ ரென்வயிறே
யுன்னோடு வாழ்த லரிது.

(இ - ள்.) இடும்பை - துன்பம், கூர் - மிகுந்த, என் - எனது, வயிறே - வயிறே, ஒருநாள் - (அகப்படாதபோது) ஒரு தினத்துக்கு, உணவை-போசனத்தை, ஒழி - விட்டிரு, என்றால் என்றுசொன்னால், ஒழியாய் - விட்டிராய்; (அகப்பட்டபோது), இரு நாளுக்கு - இரண்டு நாளுக்கு, ஏல் என்றால் - ஏற்றுக்கொள்ளென்றால், ஏலாய் - ஏற்றுக் கொள்ளாய்; ஒருநாளும் - ஒருநாளிலாயினும், என் - எனது, நோ - வருத்தத்தை, அறியாய் - தெரிந்துகொள்ளமாட்டாய்; (ஆதலினால்) உன்னோடு-(ஓ வயிறே) உன்னுடன், வாழ்தல் - கூடிவாழ்தல், அரிது- (எனக்கு) அருமையாக இருக்கின்றது, எ-று.

(க - து ) வருத்தந்தெரியாத வயிற்றுக்குத் திருப்திசெய்தலினும் அரியது பிறிதில்லை.

(வி - ரை.) நீ - தோன்றா எழுவாய், ஒழியாய் - பயனிலை, உண வை - செயப்படுபொருள். நீ - தோன்றா எழுவாய், ஏலாய் - பயனிலை, உணவை - செயப்படுபொருள். நீ-தோன்றா எழுவாய், அறியாய் - பயனிலை, நோ-செயப்படுபொருள். வாழ்தல் - எழுவாய், அரிது-பயனிலை. கூர் என் வயிறு - வினைத்தொகை நிலைத்தொடர், வயிறு என்னும் பெயர் கொண்டது. என்னோ - தொழிற்பண்புத் தற்கிழமைப் பொருளில் வந்த ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். உணவு-தொழிலாகுபெயர். நாளும் என்பதில் உம்மை முற்றுப்பொருளில் வந்தது. நோ - முதனிலைத் தொழிற்பெயர். (கக)

12. ஆற்றங் கரையின் மரமு மரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—யேற்ற
முழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு.

(இ - ள்.) ஆறு - ஆற்றினது, கரையில் - கரையில் இருக்கின்ற, மரமும் - விருட்சமும், அரசு - அரசன், அறிய - தெரிய, வீற்று - (அதிகாரஞ்செய்து) சம்பாதித்துப் பெருமையாக, இருந்த - இருக்கின்ற, வாழ்வும் - வாழ்க்கையும், விழும் - அழிந்துபோம், அன்றே - அல்லவா; (ஆதலினால்) உழுது - உழுதுபயிர்செய்து, உண்டு-உண்டு, வாழ்வு - வாழ்வதே, ஏற்றம் - உயர்வாகும்; அதற்கு - அவ்வாழ்வுக்கு, ஒப்பு - சமானம். இல்லை - எதுவுமில்லை; வேறு - இதற்குவேறாய், ஓர் - அறிகின்ற, பணிக்கு - (ஒவ்வொரு) வாழ்வுகளுக்கெல்லாம், பழுது - அழிவு, உண்டு - உளது, எ - று.

(க - து.) ஆற்றங்கரையி லிருக்கின்ற பெரிய விருட்சம் வெள்ளத்தாலும் அரசர்கள் வாழ்வு பகைகொண்ட பேரரசர்களாலும் நிலை நில்லா தழியுமல்லவா? ஆதலால் அழியாத வாழ்வு யாதெனில், அந்நியர் வசமாகாது சொந்தமாகப் பயிரிட்டு உண்டு வாழ்தலே சிறந்தது.

(வி-ரை.) மரமும், வாழ்வும் எழுவாய், விழும்-பயனிலை. வாழ்வு-எழுவாய், ஏற்றம்-பயனிலை. ஒப்பு-எழுவாய், இல்லை-பயனிலை. பழுது

எழுவாய், உண்டு - பயனிலை. கண்டீர் - முன்னிலைப்பன்மை அசைச்சொல். அம்-சாரியை. (கஉ)

13. ஆவாரை யாரே யழிப்பா ரதுவன்றிச்
சாவாரை யாரே தவிர்ப்பவ—ரோவாம
லையம் புகுவாரை யாரே விலக்குவார்
மெய்யம் புவியதன் மேல்.

(இ - ள்.) அம் - அழகிய, புவியதன்-பூமியின், மேல் - மேலே, ஆவாரை - (நல்வினையினாலே நெடுங்காலம்) உயிர்வாழ்வதற்கு உரியவரை (இடையிலே), அழிப்பார் - அழிக்கவல்லவர், யார்-யாவர்? அது அன்றி - அது அல்லாமலும் (தீவினையினால்), சாவாரை - இறத்தற்கு உரியவரை, தவிர்ப்பவர் - நிறுத்தற்குவல்லவர், யார் - யாவர்? (செல்வம் இழந்து) ஓவாமல் - ஒழியாமல், ஐயம் - பிச்சைக்கு, புகுவாரை-செல்வோரை, விலக்குவார் - தடுக்கவல்லவர், யார் - யாவர்? மெய் - (இது) சத்தியமே, எ-று.

(க - து.) ஊழினால் அடைதற்பாலனவாகிய ஆக்கங் கேடுகளைத் தவிர்க்கவல்லவர் ஒருவரும் இல்லை.

(வி-ரை.) ஏ-மூன்றும் அசைகள். யார் - எழுவாய், அழிப்பார் - பயனிலை, ஆவாரை - செயப்படுபொருள். யார்-எழுவாய், தவிர்ப்பவர் - பயனிலை, சாவாரை - செயப்படுபொருள். யார் எழுவாய், விலக்குவர் - பயனிலை, புகுவாரை - செயப்படுபொருள். ஆவார், அழிப்பார், சாவார், தவிர்ப்பவர், புகுவார், விலக்குவார் இவை வினையாலணையும் பெயர்கள். அன்றி - எதிர்மறைக்குறிப்பு வினையெச்சம்; அல் - பகுதி, றி - விகுதி, லகரத்திரிபு சந்தி. ஓவாமல் - எதிர்மறைத் தெரிநிலை வினையெச்சம்; ஓ - பகுதி, ஆ-எதிர்மறை விகுதி, வகரம்-சந்தி, எல்லாம் ஓர் பகுதி, மல்-விகுதி. (கங)

14. பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கா
லிச்சைபல சொல்லி யிடித்துண்கை—சிச்சீ
வயிறு வளர்க்கைக்கு மான மழியா
துயிர்விடுகை சால வுறும்.

(இ-ள்.) பேசுங்கால் - (ஆராய்ந்து) சொல்லுமிடத்து, பிச்சைக்கு-பிச்சை எடுத்து உண்டலினும், மூத்த - (இழிவிற்) பெரிய, குடிவாழ்க்கை-குடிவாழ்க்கையானது, பல இச்சை-பலவாகிய இச்சைகளை, சொல்லி - பேசி, இடித்து - (ஒருவரை) நெருக்கி, உண்கை - வாங்கி உண்ணுதலாம்; சிச்சீ-சீசீ (இது என்ன செய்கை); வயிறு - வயிற்றை, வளர்க்கைக்கு - வளர்த்தற்பொருட்டு, மானம் - மானம், அழியாது - கெடாமல், உயிர் - உயிரை, விடுகை - விடுதலே, சால - மிக, உறும் - (உயர்ச்சியைப்) பொருந்தும், எ-று.

(க-து.) பிச்சையெடுத் துண்பதே மிக இழிவு; இதைவிட இழிவு பிறரிடத்தே இச்சைபேசி வாங்கி உண்ணுதல்; இப்படி மானம் இழந்து உயிர்வாழ்தலினும் உயிரைவிட்டு மானத்தை நிறுத்துதலே உயர்வுடைத்து.

(வி-ரை.) வாழ்க்கை-எழுவாய் உண்கை-பயனிலை, உணவு என்னுஞ் செயப்படுபொருள் மறைந்து நின்றது. விடுகை-எழுவாய், உறும்-பயனிலை. பிச்சைக்கு - உருபுமயக்கம். பேசுங்கால் - செயினென்னும் வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம்; பேசு-பகுதி, கால் - விகுதி, உம் - சாரியை, பகுதியீற்று உகரக்கேடும், சாரியையீற்று மகரத்திரிபும் சந்தி. இடித்து என்னும் செய்வினையெச்சம் செயப்பாட்டு வினைப் பொருளில் வந்தது. சிச்சி - இகழ்ச்சிக் குறிப்புப் பொருளைத்தரும் இடைச்சொல். சால - உரிச்சொலடியாகப் பிறந்த செயவெனெச்சம்.

15. சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்
கபாய மொருநாளு மில்லை—யுபாய

பிறவியை மதியாகு மல்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும்.

(இ - ள்.) சிவாயநம என்று - சிவாயநமவென்று, சிந்தித்து - தியானித்துக்கொண்டு, இருப்போர்க்கு - இருப்பவருக்கு, ஒருநாளும் - ஒருநாளாயினும், அபாயம் - துன்பம், இல்லை - உண்டாகாது; இதுவே - (விதியை வெல்வதற்கு) இதுவே, உபாயம் - உபாயமாகும்; மதி ஆகும் - (ஆதலின் இதுவே உண்மையாகிய) அறிவு ஆகும்; அல்லாத - (இச் சிவத்தியானம்) அல்லாத, எல்லாம் - மற்றவைகளிலெல்லாம், விதியே - ஊழ்வினையே, மதியாய் விடும் - அறிவாகநின்று துன்பஞ் செய்யும், எ - று.

(க - நு.) விதியை வெல்வதற்குச் சிவத்தியானமே உபாயகருவியாம்; இஃதன்றி அறிவினால் வெல்வோமெனில் ஊழ்வினையாகிய விதியே அறிவாகநின்று துன்பஞ்செய்யும்.

(வி - ரை.) அபாயம் - எழுவாய், இல்லை - பயனிலை. இது - எழுவாய், உபாயம் பயனிலை. விதியே - எழுவாய், மதியாய்விடும் - பயனிலை. உம்மை - முற்று. ஏ - இரண்டும் தேற்றம். (கரு)

16. தண்ணீர் நிலநலத்தாற் றக்கோர் குணங்கொடையாற்
கண்ணீர்மை மாறாக் கருணையாற் — பெண்ணீர்மை
கற்பழியா வாற்றாற் கடல்சூழ்ந்த வையகத்து
ளற்புதமா மென்றே யறி.

(இ - ள்.) தண்ணீர் - தண்ணீரானது, நிலம் - நிலத்தினது, நலத்தால் - நன்மையினாலும், தக்கோர் - மேலோருடைய, குணம் - குணமானது, கொடையால் - கொடுத்தலினாலும், கண் - கண்களுடைய, நீர்மை - குணமானது, மாறா - நீங்காத, கருணையால் - அருளினாலும், பெண் - பெண்களுடைய, நீர்மை - குணமானது, கற்பு - கற்புநிலை,

அழியா - கெடாத, ஆற்றால் - வழியினாலும், கடல் - சமுத்திரம், சூழ்ந்த - சூழ்ந்த, வையகத்துள்-பூமியினிடத்து, அற்புதம் ஆம் - (எல்லாரும்) ஆச்சரியப்படத்தக்கவைகளாகும், என்றே அறி-என்று (நீ) அறிவாயாக, எ-று.

(க-து) நிலநன்மையினாலே தண்ணீருக்கும் கொடையினாலே நல்லோருக்கும், அருளினாலே கண்களுக்கும், கற்பினாலே பெண்களுக்கும் பெருமை உண்டாகும்.

(வி-ரை.) நீ - தோன்றா எழுவாய், அறி - பயனிலை, இவைகளை என்னும்செயப்படுபொருள் மறைந்துநின்றது. தக்கோர்-வினையாலணையும் பெயர்; தக - பகுதி, ஆர் - விகுதி; பகுதி விகாரப்பட்டு இறந்தகாலங் காட்டுகின்றது, உகரக்கேடு சந்தி, ஈற்றயல் ஆ - ஒ ஆனது செய்யுள் வழக்கு. கடல்சூழ்ந்த என்பது எழுவாய்த்தொகாநிலைத்தொடருமாம். ஏ-அசை. (கசு)

17. செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கா
லெய்த வருமோ விருநிதியம்—வையத்
தறம்பாவ மென்னவறிந் தன்றிடார்க் கின்று
வெறும்பானை பொங்குமோ மேல்.

(இ-ள்.) வையத்து - பூமியில், (சற்பாத்திரத்திற் செய்யப்படுந் தானத்தினாலே) பாவம் - பாவமானது, அறம் - நீந்தும், என்ன - என்று, அறிந்து - உணர்ந்து, அன்று - அக்காலத்திலே, இடார்க்கு - தானஞ்செய்யாதவருக்கு, செய் - செய்த, தீவினை - அப்பாவம் இருக்க - வறுமைக்கு வித்தாயிருக்க, இன்று-இப்பொழுது, தெய்வத்தை - கடவுளை, நொந்தக்கால் - வெறுத்தால், இரு - பெரிய, நிதியம் - திரவியம், எய்த - பொருந்த, வருமோ - வருமோ (வராது); வெறும் - ஒன்றுமில்லாத, பானை - பானை, மேல் பொங்குமோ - (அடுப்பிலே வைத்து எரித்தால் அது) மேலே பொங்குமோ (பொங்காது), எ-று.

(க - து) முற்பிறப்பில் நல்லோர்களுக்குத் தானஞ்செய்யாத பாவமே இப்பிறப்பில் வறுமைக்கு வித்தாயிருக்க அதை யோசியாது தெய்வத்தை நிந்திப்பதால் யாதுபயன்.

(வி - ரை.) நிதியம் - எழுவாய், வருமோ - பயனில்லை. பானை - எழுவாய், பொங்குமோ - பயனில்லை. செய்தீவினை- இறந்தகால வினைத் தொகைநிலைத்தொடர். நோந்தக்கால் - செயின் என்னும் வாய்ப்பாட்டு எதிர்காலவினையெச்சம்; நொ-பகுதி, கால்-காலங்காட்டும் வினையெச்ச விகுதி; து, அ-சாரியை; ந், க்-சந்தி, அறம்-எவற்பன்மைவினைமுற்று. ஒ-இரண்டும் எதிர்மறை. (கஎ)

18. பெற்றார் பிறந்தார் பெருநாட்டார் பேருலகி
லுற்றா ருகந்தா ரெனவேண்டார்—மற்றோ
ரிரணங் கொடுத்தா லிடுவ ரிடாரே
சரணங் கொடுத்தாலுந் தாம்.

(இ - ள்.) பேர் - பெரிய, உலகில் - பூமியிலே, பெற்றார் (என)- (இவர் எம்மைப்) பெற்றவர் என்றும், பிறந்தார் (என) - (இவர் எமக்குப்) பிறந்தவர் என்றும், பெருநாட்டார் (என) - (இவர் எம்முடைய) பெரியதேசத்தார் என்றும், உற்றார் (என) - (இவர் எம்முடைய) சுற்றத்தார் என்றும், உகந்தார் என - (இவர் எம்மைச்) சிநேகித்தவரென்றும், சரணம் - அடைக்கலம், கொடுத்தாலும்-புகுந்தாராயினும், வேண்டார் - அவரை விரும்பாதவராகிய உலோபிகள், இடார்-அவருக்கு ஒன்றுங்கொடார்; மற்றோர் - அன்னியர், இரணம் - (தம்முடம்பிலே) காயத்தை, கொடுத்தால் - செய்தாராயினும், இடுவர் - (அவருக்கு எல்லாங்) கொடுப்பார், எ-று.

(க - து.) உலோபிகள் தமக்குத் தீமையைச் செய்யுங் கள்வர் முதலாயினோருக்கன்றி நன்மையைச் செய்யும் தாய் தந்தை முதலாயினோருக்குக் கொடார்.

(வி-ரை.) வேண்டார்-எழுவாய், இடுவர்-பயனிலை; வேண்டார்-எழுவாய், இடார்-பயனிலை; இவ்விரண்டிற்கும் உள்ளதை என்னுஞ் செயப்படுபொருள் ஒன்றே; அது மறைந்து நின்றது. (கஅ)

19. சேவித்துஞ் சென்றிரந்துந் தெண்ணீர்க் கடல்கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்—போவிப்பம்
பாழி னுடம்பை வயிற்றின் கொடுமையால்
நாழி யரிசிக்கே நாம்.

(இ-ள்.) வயிற்றின்-வயிற்றினுடைய, கொடுமையால்-(பசிக்) கொடுமையால், சேவித்தும்-(பிறரைச்) சேவித்தும், சென்று-(பலரிடத்தே) போய், இரந்தும்-யாசித்தும், தெள்-தெளிவாகிய, நீர்-நீரை யுடைய, கடல்-சமுத்திரத்தை, கடந்தும் - (கப்பலேறிக்) கடந்தும், பாவித்தும் -(ஒருவரைப் பெரியவராக) நினைத்தும், பார் - பூமியை, ஆண்டும் - ஆளுகை செய்தும், பாட்டு இசைத்தும் - (செல்வரைப் புகழ்ந்து) பாட்டுப்பாடியும், நாம் - யாம், உடம்பை-இந்தச்சரீரத்தை, நாழி அரிசிக்கே - நாழியரிசிக்காகவே, பாழின் - பாழிலே, போவிப்பம் - செலுத்துகின்றோம், எ-று.

(க-து.) முத்திக்குரிய சாதனத்தைத் தேடும்பொருட்டு அரிதாகக் கிடைத்த சரீரத்தை, அதற்குக் கொடுக்கப்படுங் கூலியாகிய போசனத்தைத் தேடும்பொருட்டே முழுமையும் செலுத்துதலின் மிக்க பேதைமை பிறிதில்லை.

(வி-ரை.) நாம் - தோன்றா எழுவாய், போவிப்பம் - பயனிலை, உடம்பை-செயப்படுபொருள். உம்மைகள் ஆறும் எண்ணுப்பொருள. போவிப்பம் - தன்மைப்பன்மை எதிர்காலப் பிறவினைமுற்று; போ-பகுதி, வி - பிறவினை விகுதி, இரண்டுமோர் பகுதி, அம்-தன்மைப் பன்மைவிகுதி, ப்-எதிர்கால இடைநிலை, ப்-சந்தி. குவ்வுருபு பொருட்டுப் பொருளது. ஏ - தேற்றம். (கசு)

20. அம்மி துணையாக வாறிழிந்த வாறொக்குங்
கொம்மை முலைபகர்வார் கொண்டாட்டம்—இம்மை
மறுமைக்கு நன்றன்று மாநிதியம் போக்கி
வெறுமைக்கு வித்தாய் விடும்.

(இ-ள்.) கொம்மை - குவிவாகிய, முலை - தனங்களை, பகர்வார்-விற்கின்ற பரத்தையரை, கொண்டாட்டம்-கொண்டாடுதல், அம்மி-அம்மிக்கல்லை, துணை ஆக - துணையாகக்கொண்டு, ஆறு-ஆற்றுவெள்ளத்தில், இழிந்த - இறங்கிய, வாறு-தன்மையை, ஒக்கும் - போலும்; (அன்றியும் அது) மா - பெரிய, நிதியம் - செல்வத்தை, போக்கி - அழித்து, வெறுமைக்கு - தரித்திரத்துக்கு, வித்தாய்விடும் - காரணமாய்விடும்; (ஆதலினால் அது) இம்மை-இப்பிறப்பிற்கும், மறுமைக்கும் - வருபிறப்பிற்கும், நன்று - நல்லது, அன்று - ஆகாது, எ-று.

(க-து) வேசையைப் புணர்ந்தவன் கைப்பொருளை இழந்து மேகநோயால் வருத்தமுற்றுப் பழிபாவங்களை அடைவான்.

(வி-ரை.) கொண்டாட்டம் - எழுவாய், ஒக்கும் - பயனிலை, வாறு-செயப்படுபொருள்; கொண்டாட்டம்-எழுவாய், நன்றன்று-பயனிலை; கொண்டாட்டம்-எழுவாய்; ஆய்விடும் - பயனிலை. (உ0)

21. நீரு நிழலு நிலம்பொதியு நெற்கட்டும்
பேரும் புகழும் பெருவாழ்வும்—ஊரும்
வருந்திருவும் வாழ்நாளும் வஞ்சமிலார்க் கென்றுந்
தருஞ்சிவந்த தாமரையா டான்.

(இ-ள்.) சிவந்த - செந்நிறமாகிய, தாமரையாள் - தாமரை மலரில் இருக்கிற சிறீதேவியானவள், வஞ்சம் - வஞ்சனை, இலார்க்கு - இல்லாத நல்லோர்க்கு, நீரும் - நீர்வளத்தையும், நிழலும் - நிழல்வளத்தையும், நிலம் - நிலத்திலே, பொதியும் - நிறையும், நெல் கட்டும் -

நெற்போரையும், பேரும் - பேரையும், புகழும்-புகழையும், பெரும்-பெரிய, வாழ்வும் - வாழ்வையும், ஊரும் - கிராமத்தையும், வரும் - வளர்கின்ற, திருவும்-செல்வத்தையும், வாழ்நாளும்-நிறைந்த ஆயுளையும், என்றும் - எந்நாளும், தரும் - கொடுத்தருளுவள், எ-று.

(க - து) வஞ்சனையில்லாத மனமுடையவருக்குச் சீதேவியினது திருவருளினாலே எல்லா நலமும் உண்டாகும்.

(வி-ரை) தாமரையாள் - எழுவாய், தரும்-பயனிலை. நீர்முதலியன செயப்படுபொருள். உம்மைகள் பத்தில் முன்னைய தொன்பதும் எண்ணுப்பொருள; பின்னையதொன்றும் முற்று. வாழ்நாள்-வினைத்தொகைநிலைத்தொடர். குவ்வுருபு கொடைப்பொருளது. தான் - அசைச்சொல். (உக)

உஉ. பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டிங்
காவிதான் போயினபின் பாரே யநுபவிப்பார்
பாவிகா ளந்தப் பணம்.

(இ - ள்.) இங்கு - இவ்வுலகில், பணத்தை - திரவியத்தை, பாடுபட்டு - பிரயாசைப்பட்டு, தேடி-சம்பாதித்து, புதைத்துவைத்து-(நீங்களும் உண்ணாமல் பிறருக்குங் கொடாமல் பூமியிலேயே) புதைத்துவைத்து, கேடு - அப்பொருட் கேட்டினால், கெட்ட - (சரீரசுகத்தையும் ஆன்ம சுகத்தையும் ஒருங்கு) இழந்த, மானிடரே - மனிதர்களே, கேளுங்கள் - நான் சொல்வதைக் கேளுங்கள், ஆவி - ஆன்மா, கூடு - சரீரத்தை, விட்டு - விட்டு, போயினபின்பு - நீங்கியபின்பு, பாவிகாள் - பாவிகளே, அந்தப்பணம் - அந்தப்பணத்தை, ஆர்-எவர், அநுபவிப்பார்-அநுபவிப்பார்கள், எ-று.

(க - து) பாவிகள் மெய்வருந்தச் சம்பாதித்துத் தருமஞ்செய்யாமல் தாமும் அநுபவியாமல் பூமியிலே புதைத்து வைக்கப்பட்ட

பணம் அப்பாவிகள் இறந்தபின் அவர்களுக்கு உதவாமற் போவது மன்றிப் புதைத்தவிடந் தெரிந்து எடுக்கக் கூடாமையினாலே பிறருக்கும் உதவாமற்போம்.

(வி-ரை.) நீங்கள் - தோன்றா எழுவாய், கேளுங்கள்-பயனிலை, சொல்வதை என்னுஞ் செயப்படுபொருள் மறைந்து நின்றது. ஆர் - எழுவாய், அநுபவிப்பார்-பயனிலை. செயப்படுபொருள்-பணம். பாடு, கேடு இவ்விரண்டும் முதனிலைதிரிந்த தொழிற்பெயர். ஆர் என்பது யாவரென்பதின் மரூஉ. அந்த என்பது அ என்பதின் மரூஉ. ஏ - இரக்கப்பொருளில் வந்தது. தான்-அசை. போயின்-செய்த என்னும் வாய்பாட்டு இறந்தகாலப் பெயரெச்சம்; போ - பகுதி, ப் - எழுத்துப் பேறு, இன்-இறந்தகால இடைநிலை, அ-பெயரெச்சவிகுதி. (உஉ)

23. வேதாளஞ் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே
பாதாள மூலி படருமே—மூதேவி
சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்றோரஞ் சொன்னார் மனை.

(இ-ள்.) மன்று - தருமசபையிலே, ஓரம்-பட்சபாதம், சொன்னார் - சொன்னவருடைய, மனை - வீட்டில், வேதாளம் - பேய்கள், சேரும்-வந்துசேரும்; வெள்ளெருக்கு - வெள்ளெருக்கு முளைத்து, பூக்கும் - மலரும்; பாதாளமூலி-பாதாளமூலி யென்னுங் கொடி, படரும் - படர்ந்துவளரும்; மூதேவி - மூதேவியானவள், சென்று - போய், இருந்து-நிலைபெற்று, வாழ்வள் - வாழ்வாள்; சேடன்-பாம்புகள், குடி - குடியாக, புகும் - இருக்கும், எ-று.

(க - து) வழக்கோரஞ் சொன்னவர் குடும்பத்தோடு அழிவது மன்றி, அவர் குடியிருந்த வீடும் பாழாம்.

(வி-ரை.) வேதாளம், வெள்ளெருக்கு, பாதாளமூலி, மூதேவி சேடன் - எழுவாய்; சேரும், பூக்கும், படரும், வாழ்வள், குடிபுகும்-

பயனிலை. சென்று, இருந்து என்னும் வினையெச்ச அடுக்கு வாழ்வள் என்னும் எதிர்கால வினைமுற்றுக் கொண்டது. ஏகாரம் ஐந்தும் அசை. (உங)

24. நீறில்லா நெற்றிபாழ் நெய்யில்லா வுண்டிபாழ்
ஆறில்லா வூருக் கழகுபாழ்—மாறில்
உடற்பிறப் பில்லா வுடம்புபாழ் பாழே
மடக்கொடி யில்லா மனை.

(இ-ள்.) நீறு - விபூதி, இல்லா - இல்லாத, நெற்றி - நெற்றி, பாழ் - பாழாகும்; நெய் - நெய், இல்லா-இல்லாத, உண்டி-போசனம், பாழ் - பாழாகும்; ஆறு - நதி, இல்லா - இல்லாத, ஊருக்கு - கிராமத்துக்கு. அழகு - அழகு, பாழ் - பாழாகும்; மாறு இல் - மாறுபடாத, உடற்பிறப்பு - சகோதரர், இல்லா - இல்லாத, உடம்பு-சரீரம், பாழ் - பாழாகும்; மடக்கொடி - (இல்லறத்துக்குத் தக்க) மனைவி, இல்லா - இல்லாத, மனை - வீடு, பாழே - பாழேயாகும், எ-று.

(க - து.) விபூதியில்லாத நெற்றியும், நெய்யில்லாத போசனமும், நதியில்லாத ஊரும், சகோதரரில்லாத உடம்பும், மனைவியில்லாத வீடும் சிறப்படையாது.

(வி-ரை.) நெற்றி, உண்டி, அழகு, உடம்பு, மனை - எழுவாய்; பாழ் - பயனிலை. பாழ் என்னும் உடன்பாட்டுப் பண்படி முற்றுப் பொருள்பட நின்றது. மடக்கொடி - பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை நிலைத்தொடர். ஏ-தேற்றம். (உச)

25. ஆன முதலி லதிகஞ் செலவானான்
மான மழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்குங் கள்ளனா யேழ்பிறப்புந் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனா நாடு.

(இ-ள்.) ஆன - தனக்குக் கிடைத்த, முதலில் - முதற்பொருளுக்குமேலும், அதிகம் - அதிகமாக, செலவு - செலவு, ஆனான் - செய்தவன், மானம் அழிந்து-மானங்கெட்டு, மதி - அறிவு, கெட்டு - இழந்து, போன - தான் ஓடிப்போன, திசை - திசையிலும், எல்லார்க்கும் - எல்லாருக்கும், கள்ளனாய் - கள்ளனாகி, எழ்பிறப்பும் - ஏழுவகைப் பிறப்புக்களினும், தீயனாய்-பாவம் உடையவனாகி, நல்லார்க்கும் - (தன்னிடத்து அன்புவைத்த பெண்டிர்களுக்கும், பொல்லனும் - பொல்லாதவனாவான், நாடு-(இதனை) ஆராய்ந்து அறிவாயாக, எ-று.

(க - து.) வரவுக்கு அதிகமாகச் செலவு செய்பவன் மானங்கெட்டு அறிவிழந்து எவ்விடங்களிலுந் தன்னைத் திருடனென்று சொல்லும் பழியை யுடையவனாகிப் பாவங்களையும் அடையப்படுபவனாய் மனையவளுக்கும் பொல்லாதவனாவான் ஆதலின், வரவுக்குத் தக்க செலவு செய்யவேண்டும்.

(வி-ரை.) ஆனான் - எழுவாய், பொல்லனும் - பயனிலை; நீ - தோன்றா எழுவாய், நாடு - பயனிலை. ஆன - இறந்தகாலப் பெயரெச்சம்; ஆ-பகுதி, இன்-இறந்தகால இடைநிலை முதல் குறைந்தது, அ - பெயரெச்ச விகுதி. போன என்பதும் இப்படியே. உம்மை மூன்றில் முன்னைய விரண்டும் முற்று, பின்னையது ஒன்றும் இழிவு சிறப்பு. (உரு)

26. மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை
தானந் தவமுயர்ச்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப்பறந்து போம்.

(இ - ள்.) மானம் - மானமும், குலம் - குலமும், கல்வி - வித்தையும், வண்மை - உண்மையும், அறிவுடைமை-புத்தியுடைமையும்,

தானம் - கொடையும், தவம் - தவமும், உயர்ச்சி-உயர்ச்சியும், தாளாண்மை - தொழில்முயற்சியும், தேனின் - தேனினது, கசிவந்த - பெருக்குப்போலத் தோன்றுகின்ற, சொல்லியர்மேல் - சொல்லையுடைய மங்கையர்மேல், காமுறுதல்-ஆசைவைத்தலுமாகிய, பத்தும்-இப்பத்தும், பசி-பசிநோய் ஒன்றுமாத்திரம், வந்திட-வந்தால், பறந்துபோம் - விட்டோடிப்போம், எ-று.

(க - து.) யாவரு மதிக்கும்படியாகிய மானமுதலிய எல்லா நலங்களும் பசிநோய் வந்தால் விட்டோடிப்போம்; ஆதலினால், அப்பசிநோயினுங் கொடியது பிறிதில்லை.

(வி-ரை.) பத்தும் - எழுவாய், பறந்துபோம்-பயனிலை. (உசு)

27. ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினு நிற்கும்
எனையாளு மீசன் செயல்.

(இ-ள்.) ஒன்றை-ஒரு பொருளைப்பெற, நினைக்கின் - நினைத்தால், அது - அப்பொருள், ஒழிந்திட்டு - கிடையாமல், ஒன்று - வேறொருபொருள், ஆகும் - கிடைத்தாலுங் கிடைக்கும்; அன்றி - அப்படியல்லாமல், அது - அப்பொருளே, வரினும் - வந்துகிடைத்தாலும், வந்து எய்தும் - கிடைக்கும்; ஒன்றை - (இன்னும்) ஒரு பொருளை, நினையாதமுன் - நினையாதிருக்குமுன்னே, வந்து - அது தானே வந்து, நிற்பினும் - நின்றாலும், நிற்கும் - நிற்கும்; (இவைகளெல்லாம்) எனை - என்னை, ஆளும் - ஆண்டருளும், ஈசன் - கடவுளுடைய, செயல் - செய்கைகளாகும், எ-று.

(க - து) நாம் ஒரு பொருளைப் பெறும்படி நினைக்க அப்பொருள் கிடையாமல் வேறொருபொருள் கிடைப்பதும், அப்பொருளே

கிடைப்பதும், நினையாத பொருள் கிடைப்பதும் இருவினைகளுக் கிடாக இன்பதுன்பங்களை ஊட்டும் கடவுளுடைய கருத்தின்படியே யன்றி ஆன்மாக்களுடைய கருத்தின்படி ஒன்றும் நடவாது.

(வி-ரை.) ஒன்று - எழுவாய், ஆகும் - பயனிலை; அது - எழுவாய், வந்தெய்தும் - பயனிலை; அது - எழுவாய், நிற்கும்-பயனிலை. ஒன்று - எண்ணுருபெயர். உம்மைகளிரண்டும் இறந்தது தழுவிய எச்சவும்மை. ஒழிந்திட்டு - செய்தென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம்; ஒழி - பகுதி, இடு - பகுதிப்பொருள் விகுதி, து - சாரியை, த்-சந்தி, சந்தியால் வந்த தகரம் நகரமாதல் விகாரம், அனைத்தும் ஓர் பகுதி, உகரம் வினையெச்சவிகுதி, பகுதி டகரமிரட்டித்து இறந்தகாலங் காட்டி நின்றது. (உஎ)

28. உண்பது நாழி யுடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன—கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்துணையுஞ் சஞ்சலமே தான்.

(இ - ள்.) கண் - அகக்கண், புதைந்த - குருடாக இருக்கின்ற, மாந்தர் - மனிதர்கள், உண்பது - உண்ணுவது, நாழி-ஒரு நாழியரிசியன்னமேயாம்; உடுப்பது-(அவர்) உடுத்திக்கொள்வது, நான்குமுழம்- நான்குமுழ வஸ்திரமேயாம்; நினைந்து - (அவர்) நினைத்து, எண்ணுவன - எண்ணுங் காரியங்களோ, எண்பதுகோடி - எண்பது கோடியாகும்; (ஆதலினால்) மண்ணின் - மண்ணாற் செய்த, கலம்போல - பாத்திரம் அழியுந் தன்மைபோல, (அவர் சரீரம்) சாம்துணையும்-அழியும்வரையினும், குடிவாழ்க்கை - அவருடைய குடிவாழ்க்கையினாலே, சஞ்சலமே - துன்பமே விளையும் எ-று.

(க - து.) உண்பது நாழியரிசி அன்னமென்றும், உடுப்பது நான்குமுழ வஸ்திரமென்றும், தேகமானது மட்பாத்திரம்போல

அழியுமென்றும் யோசியாத அறிவிலா மாந்தர்கள் அளவில்லாத எண்ணங்களை எண்ணியெண்ணி இறக்குமளவும் துன்பங்களையே அநுபவிப்பார்கள்.

(வி-ரை.) உண்பது-எழுவாய், நாழி-பயனிலை; உடுப்பது - எழுவாய், நான்குமுழம்-பயனிலை; எண்ணுவன-எழுவாய், எண்பதுகோடி-பயனிலை; குடிவாழ்க்கை - எழுவாய், சஞ்சலம்-பயனிலை உண்பது, உடுப்பது இவ்விரண்டும் தொழிலாகுபெயர். எண்ணுவன - எதிர்கால வினைபாலணையும்பெயர். மண்ணின் என்பதில் இன் சாரியை. ஏ - தேற்றம், உம்மை - முற்றும்மை. தான் - அசை. (உஅ)

29. மரம்பழுத்தால் வெளவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவருமங் கில்லை—சுரந்தமுதங்
கற்றா தரல்போற் கரவா தளிப்பரேல்
உற்றா ருலகத் தவர்.

(இ - ள்.) மரம் - மரங்கள், பழுத்தால் - பழுத்திருந்தால், வா என்று - (பழங்களைத் தின்னுதற்கு) வா என்று, வெளவாலை - வெளவாலென்னும் பறவையை, கூவி - கூச்சலிட்டு, இரந்து - வேண்டி, அழைப்பார் - அழைப்பவர், அங்கு - அம்மரத்தருகில், யாவரும் - ஒருவரும், இல்லை - இல்லை; கன்று - கன்றையுடைய, ஆ - பசுவானது, அமுதம் - பாலை, சுரந்து - சுரந்து, தரல்போல் - கொடுத்தல் போல, கரவாது - ஒளிக்காமல், அளிப்பரேல் - கொடுப்பாராயின், உலகத்தவர் - உலகத்தார், உற்றார் - (அவ்வெளவால்போலத் தாமே வந்து) உறவினராவார், எ - று.

(க - து) மரங்கள் பழுத்தால் வெளவால் முதலிய பறவைகள் தாமே வந்து அம்மரங்களிற் சேருதல்போல், கொடுக்குங் குண

முடைய மேலோர்களுக்கு உலகிலுள்ளார் யாவரும் தாமே வந்து உற வினராவார்.

(வி-ரை.) அழைப்பார்-எழுவாய், இல்லை-பயனிலை; உலகத்த வர்-எழுவாய், உற்றார் பயனிலை. அங்கு-இடப்பொருள்தந்து எழாம் வேற்றுமைப் பொருளில்வரும் இடைச்சொல். இல்லை - எதிர்மறைக் குறிப்புப் பொதுவினைமுற்று. யாவரும் என்பதில் உம்மை முற்றுப் பொருளில் வந்தது. (உக)

30. தாந்தாமுன் செய்தவினை தாமே யநுபவிப்பார்
பூந்தா மரையோன் பொறிவழியே—வேந்தே
ஒறுத்தாரை யென்செயலா மூரெல்லா மொன்று
வெறுத்தாலும் போமோ விதி.

(இ-ள்.) வேந்தே - அரசனே! முன் - முற்பிறப்பில், தாம் தாம்-தாங்கள் தாங்கள், செய்த - இயற்றிய, வினை - நல்வினை தீவினைகளை, பூந்தாமரையோன்-தாமரைமலரில் இருக்கின்ற பிரமதேவன், பொறி வழியே - விதித்தபடியே, தாமே - தாங்களே, அநுபவிப்பார் - அநு பவிப்பார்கள்; ஒறுத்தாரை-(தீவினையாலே தூண்டப்பட்டுத்) தீங்கு செய்தவரை, என் செயலாம் - நாம் யாது செய்யலாம்; ஊர் எல்லாம்-ஊரிலுள்ளார் எல்லாரும், ஒன்று - (துணையாகத்) திரண்டு, வெறுத் தாலும் - வெறுத்தாலும், விதி - ஊழ்வினை, போமோ - போகுமோ (போகாது), எ-று.

(க-து) தமக்கு ஒருவன் துன்பஞ் செய்யின், அது தாம் முன் செய்த தீவினைக்கீடாகக் கடவுளாலே தமக்குக் கிடைத்ததென்று அறியாது ஊராரெல்லாரையும் துணையாகக் கூட்டிக்கொண்டு வெறுத்தாலும் ஊழ்வினை போகுமோ போகாது.

(வி-ரை.) தாமே - எழுவாய், அநுபவிப்பார் - பயனிலை; விதி-எழுவாய், போமோ - பயனிலை. தாம் தாம் என்னும் அடுக்குத் தனி

மைப்பொருட்டு. ஏ இரண்டில் முன்னது பிரிநிலை, பின்னது தேற்றம். பொறி - முதனிலைத் தொழிலாகுபெயர். ஊர்-இடவாகுபெயர். எல்லாம் என்பதின் ஈற்றில் முற்றும்மை விகாரத்தால் தொக்கது. ஓ - எதிர்மறை. (௩0)

31. இழுக்குடைய பாட்டிற் கிசைநன்று சாலும்
ஒழுக்க முயர்குலத்தி னன்று—வழுக்குடைய
வீரத்தி னன்று விடாநோய் பழிக்கஞ்சாத்
தாரத்தி னன்று தனி.

(இ - ள்.) இழுக்கு - இலக்கண வழுக்களை, உடைய - உடையனவாயிருக்கின்ற, பாட்டிற்கு - செய்யுளினும், இசை நன்று-இசை நல்லது; உயர் - உயர்வாகிய, குலத்தின் - குலத்தினும், சாலும்-மாட்சிமைப்பட்ட, ஒழுக்கம் - நன்னடை, நன்று - நல்லது; வழுக்கு-தவறுதலை, உடைய - உடையதாகிய, வீரத்தின் - வீரத்தினும், விடா - தீராத, நோய் - வியாதி, நன்று-நல்லது; பழிக்கு-பழிச்சொல்லுக்கு, அஞ்சா - பயப்படாத, தாரத்தின் - மனைவியோடுகூடி வாழ்தலினும், தனி - தனியாயிருத்தல், நன்று - நல்லது, எ-று.

(க-து.) இலக்கணப் பிழையுடைய பாட்டும், நல்லொழுக்கமில்லாத உயர்குலமும், தவறுதலடையும் வீரமும், கற்பில்லாத மனைவியோடுகூடியஇல்வாழ்க்கையுந் தீராவசையை விளைவிக்கும்; ஆதலால், இவைகளை யில்லாதிருத்தலே நலமாகும்.

(வி-ரை.) இசை, ஒழுக்கம், நோய், தனி - எழுவாய்; நன்று - பயனிலை. குலத்தின், வீரத்தின், தாரத்தின் என்பவற்றின் இன்னுருபுகள்போலப் பாட்டிற்கு என்பதில் குவ்வுருபு எல்லைப் பொருளில் வந்தது. இசை என்னுஞ் சொல்லின் பெயர் அதனாலாகிய தொடருக்காதலால் கருவியாகுபெயர். பழி - தொழிலாகு பெயர். பாட்டு-முத.

னிலை திரிந்த தொழிலாகுபெயர். நன்று - குறிப்புவினைமுற்று; நல்- பகுதி, று - விகுதி, லகரத்திரிபு சந்தி. (௩க)

32. ஆறிடு மேடு மடுவும்போ லாஞ்செல்வ
மாறிடு மேறிடு மாநிலத்தீர்—சோறிடும்
தண்ணீரும் வாருந் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறு முயர்ந்து.

(இ-ள்.) மா - பெரிய, நிலத்தீர் - பூமியிலுள்ளவர்களே! ஆறு - ஆற்றுவெள்ளத்தினல், இடும் - உண்டாக்கப்படும், மேடும் - மேடும், மடுவும்போல் - பள்ளமும்போல், செல்வம்-செல்வமானது, ஏறிடும்- வளர்வதும், மாறிடும் - தேய்வதுமாயிருக்கும்; (ஆதலினுல்) சோறு- (இரப்பவர்க்கு உண்ண) அன்னத்தை, இடும்-இடுங்கள்; தண்ணீரும்- (குடிக்கச்) சலத்தையும், வாரும் - வாருங்கள்; (இப்படிச் செய்துவருவீர்களானுல்) தருமமே - இந்தத்தருமமே, சார்பு ஆக - துணையாக, உள் - உள்ளத்திலே, நீர்மை - (சுத்தமாகிய) குணம், உயர்ந்து-ஓங்கி; வீறும் - விளங்கும், எ - று.

(க-து.) செல்வம் நிலையில்லாததென்று அது உள்ளபொழுதே இரப்பவர்களுக்கு அன்ன பானியங்களைக் கொடுக்கிற் சித்த சுத்தி உண்டாகும்.

(வி - ரை.) நீங்கள் - தோன்ருு எழுவாய், இடும் - பயனிலை, சோறு-செயப்படுபொருள்; நீங்கள்-தோன்ருு எழுவாய், வாரும்-பயனிலை, தண்ணீர் செயப்படுபொருள்; நீர்மை - எழுவாய்; வீறும்-பயனிலை. மா - உரிச்சொல். ஆம் செல்வம்-பெயரெச்சத் தொகாநிலைத் தொடர். மேடும் மடுவும் என்பவற்றில் உம்மை எண்ணும்மை. நீரும் என்பதி லும்மை இறந்ததுதழீஇய எச்சவும்மை. ஏ-தேற்றம். (௩உ)

33. வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம் வேழத்
பட்டுருவுங் கோல்பஞ்சிற் பாயாது—நெட்டிருப்புப் [தில்

பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும்.

(இ - ள்.) வேழத்தில் - (வலிய) யானையின்மேல், பட்டு - தாங்கி, உருவும் - ஊடுருவுகின்ற, கோல் - அம்பானது, பஞ்சில் - (மெல்லிய) பஞ்சின்மேல், பாயாது - பாயாது; (அதுபோல) வெட்டெனவை - வலிய சொற்கள், மெத்தெனவை - மெல்லிய சொற்களை, வெல்லா - வெல்லமாட்டா; நெடு - நெடுமையாகிய, இருப்பு - இரும்பினாற் செய்த, பாரைக்கு - கடப்பாரைக்கு, நெக்குவிடா - பிளவாத, பாறை - கருங்கற்பாறையானது, பசுமரத்தின் - பச்சைமரத்தின், வேருக்கு - வேருக்கு, நெக்குவிடும் - பிளந்துபோம், எ - று.

(க - து.) வன்மையான சொல் மென்மையான சொல்லுக்குத் தோற்றுப்போம்; ஆதலால், யாரும் யாவரிடத்திலும் மெதுவாக வசனித்தால் எக்காரியமும் கைகூடிவரும்.

(வி - ரை.) வெட்டெனவை - எழுவாய்; வெல்லா - பயனிலை, மெத்தெனவை - செயப்படுபொருள்; கோல் - எழுவாய், பாயாது - பயனிலை; பாறை - எழுவாய், நெக்குவிடும் - பயனிலை. வெட்டெனவை மெத்தெனவை - வினையாலணையும் பெயர்கள். வெல்லா - அஃறிணைப் பலவின்பாற்படர்க்கைப் பன்மை எதிர்மறை வினைமுற்று. இருப்புப்பாரை - முதற்கருவிப்பொருளில் வந்த மூன்றும் வேற்றுமைத் தொகைநிலைத் தொடர்மொழி. குவ்வுருபு இரண்டும் பகைப் பொருள். (௩௩)

34. கல்லானே யானாலுங் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வ—ரில்லானை
யில்லாளும் வேண்டாண்மற் றீன்றெடுத்த தாய்வேண்
செல்லா தவன்வாயிற் சொல். [டாள்

(இ-ள்.) கல்லானே - (ஒருவன்) படியாதவனே, ஆயினும் - ஆனாலும், கை - (அவன்) கையிலே, பொருள் ஒன்று - பொருள் மாத்திரம், உண்டாயின் - இருந்தால், எல்லாரும் - யாவரும், சென்று - போய், எதிர்கொள்வர் - (அவனை) எதிர்கொண்டு உபசரிப்பர்; இல்லானை - (படித்தவனே ஆயினும்) பொருள் இல்லாதவனை, இல்லாளும் - (அவன்) மனைவியும், வேண்டாள் - விரும்பாள்; ஈன்று - (அவனைப்) பெற்று, எடுத்த - வளர்த்த, தாய் - மாதாவும், வேண்டாள் - விரும்பாள்; அவன் - அவனது, வாயில் - வாயிற்பிறக்கும், சொல் - சொல்லானது, செல்லாது - பயன்படாது, எ-று.

(க-து.) கல்லாதவனேயாயினும் பொருளுடையவனை எல்லாரும் மதிப்பர்; கற்றவனேயாயினும் பொருளில்லாதவனை மனைவியும் விரும்பாள், தாயும் விரும்பாள், அவன் வாயிற் பிறக்கும் சொற்களும் பயன்படாது, இஃதன்றி ஒருவரும் மதிக்கமாட்டார்.

(வி-ரை.) எல்லாரும் - எழுவாய், எதிர்கொள்வர் - பயனிலை. பொருளுடையோனை என்னுஞ் செயப்படுபொருள் மறைந்துநின்றது; இல்லாளும் - எழுவாய், வேண்டாள் - பயனிலை, இல்லானை - செயப்படுபொருள். தாய் - எழுவாய், வேண்டாள் - பயனிலை, இல்லானை - செயப்படுபொருள். சொல் - எழுவாய், செல்லாது - பயனிலை. ஏ - தேற்றம். உம்மை மூன்றில் முன்னது உயர்வுசிறப்பு, நடுநின்றது முற்று, பின்னது இழிவுசிறப்பு. தாய் என்பதின் ஈற்றில் இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. ஒன்று என்பது சிறுமைப் பொருட்டு. அங்கு, மற்று - அசை. (கச)

35. பூவாதே காய்க்கு மரமுமுள மக்களுளும்
ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே—தூவா
விரைத்தாலு நன்றாகா வித்தெனவே பேதைக்
குரைத்தாலுந் தோன்றா துணர்வு.

(இ-ள்.) பூவாதே - பூவாமலே, காய்க்கும் - காய்க்கின்ற, மரமும் - மரங்களும், உள - உண்டு; (அதுபோல) மக்களுளும் - மனிதர்களுள்ளும், ஏவாதே - ஏவாமலும், நின்று - இருந்து, தாம்-தாமே, உணர்வார் - அறிந்துசெய்ய வல்லவரும், உளர்-உண்டு; தூவா-தூவி, விரைத்தாலும் - விதைத்தாலும், நன்று ஆகா - முளைத்துப் பயன்படாத, வித்து என - விதைபோல, பேதைக்கு - மூடனுக்கு, உரைத்தாலும்-(எதனை எடுத்து விளக்கச்) சொன்னாலும், உணர்வு-(அதனை அறியும்) அறிவு, தோன்றாது - (அவனிடத்து) உண்டாகாது, எ-று.

(க-து) குறிப்பறிந்து செய்வோரே அறிவுடையோர்; அறிவிக்கவும் அறிந்து செய்யாதவர் மூடர்.

(வி-ரை) மரமும் - எழுவாய், உள-பயனிலை. உணர்வார் - எழுவாய், உளர் - பயனிலை; உணர்வு - எழுவாய், தோன்றாது-பயனிலை. பூவாதே, ஏவாதே - இவ் வேகாரம் பிரிநிலை. உளரே என்பதில் ஏ-அசை, எனவே என்பதில் ஏ தேற்றம். மரமும் என்பதில் உம்மை இறந்தது தழீஇயதனோடு உயர்வுசிறப்பு. மக்களுளும் - இவ்வும்மை உயர்வுசிறப்பு. விரைத்தாலும், உரைத்தாலும் என்பவற்றில் உம்மை இழிவுசிறப்பு. உணர்வார் என்பதில் இறந்தது தழீஇயதனோடு உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. பேதை-குணவாகுபெயர். (௩௫)

36. நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்தில்
கொண்ட கருவளிக்குங் கொள்கைபோல்—ஒண்டொ
போதந் தனங்கல்வி பொன்றவருங் காலமயல் [டீஇ
மாதர்மேல் வைப்பார் மனம்.

(இ-ள்.) ஒள் - விளக்கமாகிய, தொடீஇ - வளையலை யணிந்த மாதே! நண்டு-நண்டும், சிப்பி - சிப்பியும், வேய் - மூங்கிலும், கதலி-வாழையும், நாசம்-அழிவை, உறும் - அடையும், காலத்தில்-நாளிலே, கொண்ட - (முறையே தாம்) கொண்ட குஞ்சும் முத்தும் அரிசியும்

காய்க்குலையும் ஆகிய, கரு - கருக்களை, அளிக்கும் - ஈனுகின்ற, கொள்கைபோல் - தன்மைபோல், (மனிதர்கள்) போதம்-ஞானமும், தனம்-செல்வமும், கல்வி - வித்தையும், பொன்ற - அழிய, வரும் - வருகின்ற, காலம் - காலத்திலே, அயல் - பிறருடைய, மாதர்மேல் - மனைவியர்மேல், மனம்-மனதை, வைப்பார்-வைப்பார்கள், எ-று.

(க - து.) ஒருவன் பிறன் மனையாளை இச்சிக்கின், அது அவனிடத்துள்ள ஞானம் செல்வம் கல்வி என்னும் மூன்றுங் கெடுதற்கு அறிகுறியாகும்.

(வி-ரை.) மனிதர்கள் - தோன்றா எழுவாய்; வைப்பர் - பயனிலை, மனம்-செயப்படுபொருள். நண்டு சிப்பி வேய் கதலி, போதந் தனங் கல்வி என்பன உம்மைத் தொகைநிலைத்தொடர்கள். போல் என்பதின் வினையெச்சவிகுதி அகரம் தொகுத்தல். கரு என்பதின் ஈற்றில் தேற்ற ஏகாரம் விகாரத்தால் தொக்கது. (உசு)

37. வினைப்பயனை வெல்வதற்கு வேத முதலாம்
அனைத்தாய நூலகத்து மில்லை—நினைப்பதெனக்
கண்ணுறுவ தல்லாற் கவலைபடே னெஞ்சேமெய்
விண்ணுறுவார்க் கில்லை விதி.

(இ - ள்.) வேதம் - நான்கு வேதங்கள், முதலாம் - முதலிய, அனைத்து ஆய-எல்லாமாகிய, நூலகத்தும்-நூல்களினுள்ளும், (ஆராய்ந்தால்) வினைப்பயனை - இருவினைப்பயனை, வெல்வதற்கு-செயிப்பதற்கு (உபாயம்), அது-அவ்வினைப்பயன், நினைப்பது-(நம்முடைய) நினைவாலாவது, என - என்று, கண்ணுறுவது - எண்ணுவது, அல்லால் - அல்லாமல், இல்லை-வேறு இல்லை; நெஞ்சமே - மனமே! கவலை - கவலையை, படேல்-அடையாதே, மெய் - நித்தியமாயுள்ள, விண் - ஞானகாசமாகிய பதியோடு, உறுவார்க்கு - கலந்து நிற்பவர்க்கு, விதி - ஊழ், இல்லை - உண்டாவது இல்லை, எ-று.

(க - து.) ஊழ்வினையை வெல்லுவதற்கு உபாயம் வேதமுதலிய எந்த நூல்களினுமில்லை; நம்முடைய எண்ணப்படி முடிகிறதென்று சொல்லுவதே தவிர அப்படி ஒருபோது முடியா: பரஞானத்திலே பதியைத் தெளிந்து நோக்கும் பத்திமான்களுக்கு அந்த ஊழ் வினை இல்லையாம்.

(வி-ரை.) உபாயம்-தோன்று எழுவாய்; இல்லை - பயனிலை; நீ-தோன்று எழுவாய், படேல்-பயனிலை, கவலை - செயப்படுபொருள்; விதி-எழுவாய், இல்லை-பயனிலை. வினைப்பயன்-பண்புத்தற்கிழமைப் பொருளில் வந்த ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். வெல்வது-தொழிற்பெயர்; வெல் - பகுதி, வ் - எதிர்கால இடைநிலை, அ-சாரியை, து - புடைபெயர்ச்சியை உணர்த்தும் விகுதி. குவ்வுருபு இரண்டும் தகுதிப்பொருள். கவலைபடேல்-ஏவலொருமை எதிர்மறை வினைமுற்று. உறுவார் - எதிர்கால வினையாலணையும்பெயர். இல்லை இரண்டும் எதிர்மறைக் குறிப்புப் பொதுவினைமுற்று. (௩எ)

38. நன்றென்றுந் தீதென்று நானென்றுந் தானென்றும்
அன்றென்று மாமென்று மாகாதே—நின்றநிலை
தானதாந் தத்துவமாஞ் சம்பறுத்தார் யாக்கைக்குப்
போனவா தேடும் பொருள்.

(இ - ள்.) நன்று என்றும் - (இது) நல்லது என்றும், தீது என்றும் - (இது) தீயது என்றும், நான் என்றும் - (இது செய்தவன்) நான் என்றும், தான் என்றும் - (இது செய்தவன்) அவன் என்றும், அன்று என்றும் - (இது) அன்று என்றும், ஆம் என்றும் - (இது) ஆகும் என்றும், ஆகாதே - பேதஞ் செய்யாமலே, நின்று -

‡

(பதியினுள் அடங்கி இரண்டறக் கலந்து) நின்ற, நிலையே - நிலையே, தான் - (ஆன்மாவாகிய) தான், அது ஆம் - (பதியாகிய) அதுவாகுகின்ற, தத்துவம் - உண்மை, ஆம் - நிலையாகும்; சம்பு - சம்பை, அறுத்தார் - அறுத்தவர், யாக்கைக்கு - அதனைக் கட்டுதற்கு, தேடும் பொருள் - தேடும் பொருள் அதுவன்றி, போனவா - வேறில்லாமற் போனவாறுபோலப் பாசத்தின் வேருகக் காணப்பட்ட தன்னைப் பதியினுள்ளே அடக்குதற்குத் தேடும்பொருள் தானன்றி வேறில்லை, எ - று.

(க-து.) பாசத்தால் ஆன்மா பதியின் வேருகத் தோன்றினும், தற்போத ஒழிவில் அப்பதியாய் நிற்கு நிலையே தானதுவாகும் உண்மைநிலை.

(வி - ரை.) தான் - எழுவாய், ஆகும் - பயனிலை. உம்மைகள் எண்ணுப்பொருள. ஆகாது-எதிர்மறை வினையெச்சம். நிலை, யாக்கை இரண்டும் தொழிற்பெயர். கு-தகுதிப்பொருட்டு. போலும் என்னும் பயனிலை எஞ்சிநின்றது. (௩அ)

39. முப்பதா மாண்டளவின் மூன்றற் றொருபொருளைத்
தப்பாமற் றன்னுட் பெறுனுயின்—செப்புங்
கலையளவே யாகுமாங் காரிகையார் தங்கள்
முலையளவே யாகுமா மூப்பு.

(இ - ள்.) முப்பதாம் ஆண்டு-முப்பது வயதின், அளவின்-அளவிலே, மூன்று அற்று - (மலம் மாயை கன்மம் என்னும் பந்தம்) மூன்றும் நீங்கி, ஒரு - ஒப்பில்லாத, பொருளை - முதற்பொருளாகிய பதியை, தப்பாமல் - தவருமல், தன்னுள் - தன்னுள்ளே, பெறுன்-

(அநுபூதிஞானத்தினல் ஒருவன்) அடையான், ஆயின்-ஆனல், (அம்முதற்பொருள் அவனுக்கு) செப்பும் - (அவன்) கற்ற, கலை அளவே ஆகும்-சாஸ்திரஞானத்தினளவே ஆகும்; மூப்பு-(அவன் பின்வரும்) முதுமைப்பருவத்திலே, காரிகையார் தங்கள்-(தான் கண்ட) பெண்களினுடைய, முலை அளவே-தனத்தின் அளவாகவே, ஆகும்-(தளர்ச்சியுடையவன்) ஆவன், எ - று.

(க-து.) அநுபூதிஞானம் நிட்டையினலல்லது பெறப்படாமையாலும், நிட்டை உடம்பும் அறிவும் தளர்ச்சியடையும் முதுமைப்பருவத்திற் சித்திக்கமாட்டாமையாலும், ஞானசாரியரை யடைந்து ஞானசாஸ்திரங்களைக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டைகூடல் என்னும் நான்கையும் இளமைப்பருவத்திற்றனே செய்தல்வேண்டும்.

(வி-ரை.) அது-எழுவாய், ஆகும்-பயனிலை; அவன் - எழுவாய், ஆடும்-பயனிலை. ஆம்-செய்யும் என்னும் வாய்பாட்டு எதிர்காலப்பெயரெச்சம் ஈற்றுயிர்மெய் கெட்டது. மூன்று - எண்ணுநுபெயர். ஏ - இரண்டும் தேற்றம். ஆம் இரண்டும் அசைகள். (௩௯)

**40.** தேவர் குறளுந் திருநான் மறைமுடிவு
மூவர் தமிழு முனிமொழியுங்—கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்.

(இ-ள்.) தேவர் - திருவள்ளுவநாயனு ரருளிய, குறளும்-திருக்குறளும், திரு - சிறப்புப்பொருந்திய, நான்மறை - நான்கு வேதங்களின், முடிவும் - முடிவாகிய உபநிடதங்களும், மூவர் - (திருஞான

சம்பந்தமூர்த்திநாயனார் திருநாவுக்கரசுநாயனார் சுந்தரமூர்த்திநாயனார் என்னும் சமயகுரவர்) மூவர்கள் அருளிய, தமிழும் - தேவாரமாகிய தமிழ்வேதமும், முனி-வியாசமுனிவர் அருளிய, மொழியும்-வேதாந்த சூத்திரமும், கோவை-(திருவாதவூரடிக ளருளிய) திருக்கோவையாரும், திருவாசகமும் - திருவாசகமும், திருமூலர்-திருமூலநாயனார் அருளிய, சொல்லும் - திருமந்திரமும், ஒரு வாசகம் என்று - ஒரு பொருளையே குறித்த வாக்கியங்களென்று, உணர் - அறிவாயாக, எ - று.

(க-து.) திருக்குறள் முதலிய நூல்களெல்லாம் வேறு வேறு வாக்கியங்களாகத் தோன்றினும், பதியிலக்கணமும் பசுவிலக்கணமும் பந்தவிலக்கணமும் முத்தியிலக்கணமும் ஆகிய இவைகளை ஒரு தன்மையாகவே அறிவிக்கும் நூல்கள்.

(வி - ரை.) நீ-தோன்றா எழுவாய், உணர்-பயனிலை; குறளும், மறைமுடிவும், தமிழும், மொழியும், கோவையும், திருவாசகமும், சொல்லும் செயப்படுபொருள்கள். (சO)

நல்வழி மூலமும் உரையும்

முற்றுப்பெற்றது.

---

உ

கடவுள் துணை.

துறைமங்கலம்

சிவப்பிரகாச சுவாமிகள் அருளிச்செய்த

# நன்னெறி

## மூலமும் உரையும்.



சென்னை :

மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

1914

விலை அணா-1½.

உ

கடவுள் துணை.

துறைமங்கலம்

# சிவப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்த

# நன்னெறி

## மூலமும் உரையும்.

காப்பு.

மின்னெறி சடாமுடி விநாயக னடிதொழ
நன்னெறி வெண்பா நாற்பதும் வருமே.

(இதன்பொருள்.) மின் - மின்னலைப்போலும், எறி-ஒளியை வீசுகின்ற, சடாமுடி - சடாமுடியையுடைய, விநாயகன் - விநாயகக் கடவுளின், அடி - திருவடிகளை, தொழ - வணங்க, நன்னெறி - நன்னெறியென்னும் நூலில் உள்ள, வெண்பா நாற்பதும் - நாற்பது வெண்பாக்களும், வரும்-இடையூறின்றி முடியும், என்றவாறு.

(கருத்துரை.) விநாயகக்கடவுளின் திருவடிகளை வணங்கினால் நன்னெறியென்னும் பெயரையுடைய நூல் இடையூறின்றி இனிது முடியும்.

(விரிவுரை.) வெண்பா நாற்பதும்-எழுவாய், முடியும்-பயனிலை.

## நூல்.

1. என்று முகமனியம்பா தவர்கண்ணும்
சென்று பொருள்கொடுப்பர் தீதற்றோர்—துன்றுசுவை
பூவிற் பொலிகுழலாய் பூங்கை புகழ்வோ
நாவிற் குதவு நயந்து.

(இ-ள்.) பூவின் - பூவினால், பொலி - விளங்குகின்ற, குழலாய் - கூந்தலையுடைய மாதே! தீது - குற்றம், அற்றோர் - நீங்கின பெரியோர்கள், என்றும் - எந்நாளிலும், முகமன்-(தமக்கு) உபசார வார்த்தைகளை, இயம்பாதவர் கண்ணும் - சொல்லாதவர்களிடத்தும், பொருள் - (தமது) பொருளை, சென்று - (தாமே) கொண்டுபோய், கொடுப்பர் - கொடுப்பார்கள்; பூ - அழகிய, கை - கையானது, புகழவோ - (தன்னைப்) புகழ்தற்காகத்தானோ, துன்று - தனக்குக் கிடைத்த, சுவை - மதுரமாகிய உணவை, நாவிற்கு - நாவினுக்கு, நயந்து - விரும்பி, உதவும்-(கொண்டுபோய்க்) கொடுக்கும், (புகழ்தற்கன்று), எ-று.

(க - து.) கையானது மதுரமாகிய உணவை நாவினுக்குக் கொடுக்குந் தன்மைபோல அறிவுடையோர்கள் உபசாரவார்த்தை பேசாத அறிவிலிகட்கும் தாமே தேடிப்போய்த் தமது பொருளைக் கொடுப்பார்கள். இது மற்றவர் புகழ்தற்கன்று ஜீவகாருணியத் தன்மையாம்.

(வி-ரை.) தீதற்றோர் - எழுவாய், கொடுப்பர்-பயனிலை, பொருள்-செயப்படுபொருள்; கை-எழுவாய், உதவும் - பயனிலை, சுவை-செயப்படுபொருள். (க)

2. மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர்
பேசுற்ற வின்சொற் பிறிதென்க—ஈசற்கு

நல்லிலா னெறிசிலையோ நன்னுதா லொண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு.

(இ-ள்.) நல் - நல்ல, நுதால் - நெற்றியையுடைய மாதே! மாசு-குற்றம், அற்ற - நீங்கிய, நெஞ்சு - மனத்தை, உடையார் - உடையவரது, வன்சொல் - கடுஞ்சொல்லும், இனிது - இனியதாகும், ஏனையவர்-(குற்றம்பொருந்திய மனத்தை யுடையவராகிய) பிறர், பேசுற்ற-சொல்லிய, இன் சொல்-இனிய சொல்லும், பிறிது - கொடியதாகும், என்க - என்று அறிவாயாக; ஈசற்கு-சிவபெருமானுக்கு, நல்லோன் - நற்குண முடையவராகிய சாக்கியநாயனர், எறி-அன்புடன் எறிந்த, சிலையோ - கல்லோ, ஒள் - ஒள்ளிய, கருப்புவில்லோன் - கரும்பு வில்லையுடைய மன்மதன், மலரோ-அன்பின்றி எறிந்த பூவோ, விருப்பு-(இவ்விரண்டில் எது) விருப்பமுடையது சொல்வாய், எ-று.

(க - து) சிவபெருமான்மீது சாக்கியநாயனர் எறிந்தது கல்லாயினும் அது அன்புடைமையானதால் விருப்புடைமையும், மன்மதன் எறிந்தது பூவாயினும் அது அன்பின்மையானதால் விருப்பின்மையு மானவாறுபோல, மனநன்மையுடைய அறிவுடையோர் சொல்லுங் கடுஞ்சொல் இனியதாகவும் மனநன்மை யில்லாத அறிவிலார் சொல்லும் இனியசொல் கடுமையாகவும் ஆகும்.

(வி - ரை.) வன்சொல் - எழுவாய், இனிது - பயனிலை; இன்சொல் - எழுவாய், பிறிது - பயனிலை. (௨)

3. தங்கட் குதவிலர்கைத் தாமொன்று கொள்ளினவர்
தங்கட் குரியவராற் றுங்கொள்க—தங்கநெடுங்
குன்றினாற் செய்தனைய கொங்கையா யாவின்பால்
கன்றினாற் கொள்ப கறந்து.

(இ - ள்.) நெடு - நெடிய, தங்கக் குன்றினால் - பொன்மலையினால், செய்து அனைய - செய்தாற்போன்ற, கொங்கையாய் - தனத்தையுடைய மாதே! தங்கட்கு - தங்களுக்கு, உதவிலர் - உதவாதவர்களுடைய, கை - கையினின்றும், தாம் - தாங்கள், ஒன்று - ஒருபொருளை, கொள்ளின் - கொள்ளவேண்டினால், அவர் தங்கட்கு - அவர்களுக்கு, உரியவரால் - உரியவராலே, தாம் - அவர்கள், கொள்க - அப்பொருளைக் கொள்ளக்கடவர்கள்; ஆவின் - (தங்களுக்குக் கொடாத) பசுவின், பால் - பாலை, கன்றினால் - (அப்பசுவுக்குரிய) கன்றைக்கொண்டு, கறந்துகொள்ப - கறந்துகொள்வார்கள், எ - று.

(க - து.) தானாகக் கொடாத பசுவினிடத்துள்ள பாலை அதன் கன்றைக்கொண்டு கறந்துகொள்ளுந் தன்மைபோல, தங்களுக்குக் கொடாதவர்களுடைய பொருளைப் பெறவேண்டினால் அவர்களுக்கு உரியவர்களைக் கொண்டு பெறக்கடவர்.

(வி - ரை.) தாம் - எழுவாய், கொள்க - பயனிலை, பொருளை - செயப்படுபொருள்; யாரும் - எழுவாய், கொள்ப - பயனிலை, பால் - செயப்படுபொருள். (ங)

4. பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவர் பேறும் — பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடனீர் சென்று புயன்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு.

(இ-ள்.) பிறர்க்கு - அந்நியர்க்கு, உதவி - உபகாரம், செய்யார் - செய்யாதவருடைய, பெரு - பெரிய, செல்வம் - செல்வமானது; வேறு - பிறிதேயாயினும், பிறர்க்கு - அந்நியர்க்கு, உதவி - உபகாரம், ஆக்குபவர் - செய்பவருடைய, பேறு ஆம் - செல்வமாகும்; பிறர்க்கு - அந்நியர்க்கு, உதவி - உபகாரம், செய்யா - செய்யாத, கரும் - கரிய, கடல் - சமுத்திரத்திலுள்ள, நீர் - நீரை, புயல் - மேகமானது, சென்று -

போய், முகந்து - மொண்டுவந்து, பிறர்க்கு - அந்நியர்க்கு, பெய்யா - பெய்து, கொடுக்கும் - தரும், எ - று.

(க - து.) சமுத்திரத்திலுள்ள நீர் தானாகப் பிறருக்கு உபகாரமாகாவிடினும் மேகமானது மொண்டுவந்து உபகாரமாக்குவிக்கும்; அதுபோல, பிறருக்கு உபகரிக்க மனமில்லாதவருடைய செல்வமானது வேறொருவனுக்கு அது பிறிதேயாயினும் அதை மற்றவருக்குப் பயன்பட உபகரிப்பானேயாயின் யாவரும் உபகரிப்பான் செல்வமாகவே எண்ணப்படவேண்டும்.

(வி-ரை.) செல்வம்-எழுவாய், பேறு ஆம்-பயனிலை; புயல்-எழுவாய், தரும்-பயனிலை, நீர்-செயப்படுபொருள். (ச)

5. நீக்க மறுமிருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கி னவர்பெருமை நொய்தாகும்—பூக்குழலாய்
நெல்வி னுமிசிறிது நீங்கிப் பழமைபோற்
புல்லினுந் திண்மைநிலை போம்.

(இ - ள்.) பூ - பூவைமுடித்த, குழலாய் - கூந்தலையுடைய மாதே! நீக்கம் - பிரிவு, அறு - இல்லாத, இருவர் - சிநேகர் இருவர், நீங்கி - (பகைத்துச் சிறிதுகாலம்) பிரிந்து, புணர்ந்தாலும் - முன்போலவே கூடினாலும், நோக்கின் - பார்க்குமிடத்து, அவர் - அவர்களுடைய, பெருமை - பெருமை, நொய்து ஆகும் - அற்பாகும்; நெல்லின் - நெல்லினின்றும், உமி - உமியானது, சிறிது - சிறிதுபாகம், நீங்கி - நீங்கி, பழமைபோல் - முன்புபோல், புல்லினும் - கூடினும், திண்மை - (அதற்கு முன்னே முளைத்தற்குக் காரணமாக அந்நெல்லினிடத்து இருந்த) வன்மையின், நிலை - நிலையானது, போம் - கெட்டுப்போம், எ - று.

(க - து) நெல்லைவிட்டு உமியானது சிறிது நீங்கிப் பழையபடி கூடினும் முளைத்தற்குரிய வலிமை கெட்டுவிடுவதுபோல, பிரி

யாது மனமொத்திருந்த சிநேகர் இருவர் தமக்குள் யாதாமொரு பகை யினல் சிறிதுகாலம் பிரிந்து மறுபடி கூடினலும் அது முன்னிருந்த மனதொருமையும் பெருமையும் குறைந்து உறுதியுண்டாக்கத்தக்க தன்ருக முடியும்.

(வி - ரை.) பெருமை-எழுவாய், னொப்தாகும்-பயனிலை; நிலை-எழுவாய், போம்-பயனிலை. (ரு)

6. காதன் மனையாளுங் காதலனு மாறின்றித்
தீதி லொருகருமஞ் செய்பவே—யோதுகலை [ருன்
யெண்ணிரண்டு மொன்றுமதி யென்முகத்தாய் நோக்க
கண்ணிரண்டு மொன்றையே காண்.

(இ - ள்.) ஓது - புகழப்பட்ட, எண்ணிரண்டு - பதினறு, கலையும் - கலைகளும், ஒன்றும் - கூடிய, மதி என்-சந்திரன் என்று சொல்லப்படும், முகத்தாய் - முகவிலாசத்தையுடைய மாதே! காதல் - அன்பையுடைய, மனையாளும் - மனைவியும், காதலனும் - கணவனும், மாறு - (தம்முள்ளே) மாறுபாடு, இன்றி - இல்லாமல் (ஒத்து), தீது - குற்றம், இல் - இல்லாத, ஒரு கருமம் - ஒரு தொழிலை, செய்ப - செய்வார்; கண் இரண்டும்-(நம்முடைய) இரண்டு கண்களும், ஒன்றையே - (தம்முள் மாறுபாடு இல்லாமல் ஒத்து) ஒருபொருளையே, நோக்கல் - பார்த்தலை, காண் - பார், எ-று.

(க - து.) இரண்டு கண்களும் தம்முள்ளே ஒத்து மாறுபாடு இல்லாமல் ஒரு பொருளையே நோக்குந்தன்மைபோல் அன்புடைய மனைவியும் கணவனும் மனஞ் சம்மதித்துச் செய்யும்படியாகிய தருமமே மேன்மையுடைத்து.

(வி - ரை.) மனையாளும் காதலனும் - எழுவாய், செய்ப - பயனிலை, கருமம் - செயப்படுபொருள்; நீ - தோன்ருஎழுவாய், காண்-பயனிலை, நோக்கல்-செயப்படுபொருள். தான்-அசை. (சு)

7. கடலே யனையம்யாங் கல்வியா லென்னு
மடலே றனையசெருக் காழ்த்தி—விடலே
முனிக்கரசு கையான் முகந்து முழங்கும்
பனிக்கடலு முண்ணப் படும்.

(இ-ள்.) யாம் - நாம், கல்வியால் - கல்வியறிவினால், கடலே - சமுத்திரத்தை, அனையம் - ஒப்போம், என்னும் - என்று கொள்ளுகின்ற, அடல் - வல்லமை பொருந்திய, ஏறு - ஆண்சிங்கத்தை, அனைய - ஒத்த, செருக்கு - செருக்கிலே, ஆழ்த்திவிடல் - (உங்களை) அழுத்திவிடாதிருங்கள்; முழங்கும் - ஒலிக்கின்ற, பனி - குளிர்ச்சி பொருந்திய, கடலும் - சமுத்திரமும், முனிக்கு - முனிவர்களுக்கு, அரசு - தலைவராகிய அகத்தியமுனிவருடைய, கையால் - கையினால், முகந்து - மொண்டு, உண்ணப்படும் - பருகப்படும், எ-று.

(க-து.) பெரிய சமுத்திரமும் அகத்தியமுனிவரால் உண்ணப் பட்டிருப்பதால் கல்வியில் சமுத்திரத்தை ஒப்போம் என்று யாவரும் செருக்கடையாதீர்கள்; எத்துணைப் பெருங்கல்வியுடையவரும் செருக்கடைவாராயின் வல்லவரொருவராலே தப்பாது வெல்லப்படுவார்கள்.

(வி-ரை.) நீங்கள் - எழுவாய், ஆழ்த்திவிடல் - பயனிலை, உங்களை - செயப்படுபொருள்; கடலும் - எழுவாய், உண்ணப்படும் - பயனிலை. (எ)

8. உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க—வெள்ளந்
தடுத்த லரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு.

(இ-ள்.) உள்ளம் - மனத்தை, கவர்ந்து - தன்வசமாக்கிக் கொண்டு, எழுந்து - மேலெழுந்து, ஓங்கு - வளர்கின்ற, சினம் -

கோபத்தை, காத்துக்கொள்ளும் - அடக்கிக்கொள்ளுகின்ற, குணமே-குணத்தையே, குணம் - அருமையாகிய குணம், என்க - என்று அறியக்கடவாய்; வெள்ளம் - (பெருகிவரும்) வெள்ளத்தை, தடுத்தல் - (கரைகட்டித்) தடுத்தல், அரிதோ - அரியதோ, (முன்கட்டப்பட்டிருந்த), தடம் - பெரிய, கரை - கரையை, பேர்த்து - உடைத்து, விடுத்தல் - (அதனுள் அடங்கியிருந்த வெள்ளத்தைப் புறத்திலே செல்ல) விடுத்தல், அரிதோ - அரியதோ, விளம்பு - நீ சொல்வாய், எ - று.

(க - ரை.) பெருகிவரும் வெள்ளத்தைக் கரைகட்டித் தடுத்தல் அரியது, கரைக்குள் அடங்கியிருந்த வெள்ளத்தைக் கரையை யுடைத்துப் புறத்திலே செல்ல விடுத்தல் எளியது; அதுபோல், யாவருக்கும் கோபத்தை அடக்குதல் அரிது, கோபத்தைச் செய்தல் எளிது, ஆதலின், அரியதைச் செய்தலே பெருமையுடைத்து.

(வி-ரை.) நீ-எழுவாய், குணம்-பயனிலை; நீ-எழுவாய், விளம்பு-பயனிலை, இவற்றை என்னுஞ் செயப்படுபொருள் மறைந்துநின்றது.

9. மெலியோர் வலிய விரவலரை யஞ்சார்
வலியோர் தமைத்தா மருவிற்—பலிகொல்
கடவு ளவிர்சடைமேற் கட்செவியஞ் சாதே
படர்சிறையப் புள்ளரசைப் பார்த்து.

(இ - ள்.) மெலியோர்-வலியில்லாதவர், வலியோர் தமை-தமது பகைவரினும் வலிமையுடையோரை, மருவில் - சேர்ந்தால், வலிய-வலியையுடைய, விரவலரை - பகைவருக்கு, தாம் - அவ்வலியில்லாதவர்கள், அஞ்சார் - பயப்படார்; பலி - அன்பருடைய பூசையை, எல்-ஏற்றுக்கொள்கின்ற, கடவுள் - சிவபெருமானுடைய, அவிர்-பிரகாசிக்கின்ற, சடைமேல் - சடையின்மேல் இருக்கின்ற, கட்செவி-பாம்பானது, படர் - (தம்முன் வந்த) பரந்த, சிறை - சிறைகளையுடைய, அப்

புள்ளரசை - அக்கருடனை, பார்த்து-கண்டு, அஞ்சாது-பயப்படாது, எ - று.

(க - து.) சிவபெருமான் சடையின்மீது உள்ள பாம்பானது தனக்குப் பகையாயுள்ள கருடன் வரக்கண்டால் அஞ்சாததுபோல, எளியோர் வன்மைமிகுந்த தங்களுடைய பகைவரினும் அதிக வன்மையை யுடையோரிடத்துச் சேரின் பயப்படார்.

(வி - ரை.) மெலியோர் - எழுவாய், அஞ்சார் - பயனிலை; கட்செவி-எழுவாய், அஞ்சாது - பயனிலை. (௯)

10. தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகின்
நிறையிருளை நீக்குமே னின்று.

(இ-ள்.) விழுமியோர் - மேலோர், தம் - தமது, குறை-குறைவு, தீர்வு - நீக்குதலை, உள்ளார் - நினையாதவராய், பிறர்க்கு - பிறருக்கு, உறும் - வந்த, வெம் - வெவ்விய, குறை - குறையை, தளர்ந்து-மனந் தளர்ந்து, தீர்க்கிற்பார் - நீக்குவார்; திங்கள்-சந்திரனானவன், கறை - தனது களங்கமாகிய, இருளை - இருளை, நீக்க-நீக்குதற்கு, கருதாது-நினையாமல், மேல் நின்று-ஆகாயத்திலே நின்று, உலகின்-உலகத்தில், நிறை - நிறைந்த, இருள் - இருளை, நீக்கும் - நீக்குவான், எ - று.

(க-ரை.) சந்திரன் தனது மேனியினுள்ள இருளை நீக்கிக்கொள்ள நினையாமல் உலகவிருளை நீக்குதல்போல், மேலோர்கள் தமது மனத்துயரத்தையும் உடம்பின் தளர்ச்சியையும் நீக்குவதற்கு முயலாமல் பிறர் மனத்துயரத்தையும் உடம்பின் தளர்ச்சியையும் நீக்குவர்.

(வி - ரை.) விழுமியோர் - எழுவாய், தீர்க்கிற்பார் - பயனிலை, குறை - செயப்படுபொருள்; திங்கள் - எழுவாய், நீக்கும் - பயனிலை, இருள் - செயப்படுபொருள். (௧௦)

11. பொய்ப்புலன்க ளைந்துநோய் புல்லியர்பா லன்றியே
மெய்ப்புலவர் தம்பால் விளையாவாந்—துப்பிற்
சுழற்றுங்கொல் கற்றூணைச் சூறா வளிபோய்ச்
சுழற்றுஞ் சிறுபுன் றுரும்பு.

(இ - ள்.) பொய் - பொய்பாகிய, புலன்கள் ஐந்தும் - ஐந்து புலன்களும், புல்லியர்பால்-மூடரிடத்து, அன்றி-அல்லாமல், மெய் - மெய்யாகிய, புலவர்தம்பால் - அறிவுடையவரிடத்து, நோய்-துன்பத்தை, விளையா - செய்யாவாம்; சூறாவளி - சுழல்காற்றானது, போய் - சென்று, துப்பின்-(தன்) வலிமையினாலே, சிறு-சிறிய, புல் - இலகுவாகிய, துரும்பு - துரும்பை, சுழற்றும் - எடுத்துச் சுழற்றும், கல் தூணை - கல்லுக் கம்பத்தை, சுழற்றுங்கொல் - சுழற்றுமா (சுழற்றமாட்டாது), எ - று.

(க - து.) சுழல்காற்றானது சிறு துரும்பை எடுத்துச் சுழற்றுமேயன்றி, கல்லுக்கம்பத்தைச் சுழற்றாததுபோல, ஐம்புலன்களும் மூடர்களை மாத்திரம் மாயாவசத்தி லழுத்தித் துன்பப்படுத்துமேயன்றி அறிவுடையோரை யாதொரு துன்பமுஞ் செய்யா.

(வி - ரை) புலன்கள்-எழுவாய், விளையா - பயனிலை, நோய்-செயப்படுபொருள்; சூறாவளி-எழுவாய், சுழற்றும்-பயனிலை, துரும்பு-செயப்படுபொருள்; சூறாவளி - எழுவாய், சுழற்றுங்கொல்-பயனிலை, கல்தூண் - செயப்படுபொருள். ஏ, ஆம் - அசை. (கக)

12. வருந்து முயிரொன்பான் வாயி லுடம்பிற்
பொருந்துத லென்னை புதுமை—திருந்திழாய்.
சீதநீர் பொள்ளற் சிறுகுடத்து நில்லாது
வீதலோ நிற்றல் வியப்பு.

(இ - ள்.) திருந்து - திருந்திய, இழாய் - ஆபரணங்களையணிந்த மாதே! வருந்தும் - வருந்துகின்ற, உயிர் - உயிரானது, ஒன்பான் - ஒன்பது, வாயில் - துவாரங்களுடைய, உடம்பில் - உடம்பிலே, பொருந்துதலே - தங்குதலே, புதுமை - ஆச்சரியம், (நீங்குதல் ஆச்சரியமன்று); சீதம் - குளிர்ச்சியாகிய, நீர் - நீரானது, பொள்ளல் - சில்லியையுடைய, சிறு - சிறிய, குடத்து - குடத்திலே, நில்லாது - நில்லாமல், வீதலோ - ஒழுகிப்போதலோ (ஆச்சரியம்), நிற்றல் - நிற்றலே, வியப்பு - ஆச்சரியமாகும், எ - று.

(க - து) பொள்ளற்குடத்தில் நீர் ஒழுகாது நிற்பது ஆச்சரியமாவதுபோல ஒன்பது துவாரங்களுடைய தேகத்தில் எந்தத் துவாரத்தின் வழியானும் உயிர் போகாது நிற்றல் ஆச்சரியமாகும்.

(வி-ரை.) பொருந்துதல்-எழுவாய், புதுமை-பயனிலை; நிற்றல்-எழுவாய், வியப்பு-பயனிலை. தான்-அசை. (கஉ)

13. பெருக்க மொடுசுருக்கம் பெற்றபொருட் கேற்ப
விருப்ப மொடுகொடுப்பர் மேலோர்—சுரக்கு
மலையளவு நின்றமுலை மாதே மதியின்
கலையளவு நின்ற கதிர்.

(இ-ள்.) மலை அளவு - மலைபளவாக, நின்ற - உயர்ந்துநின்ற, சுரக்கும் - (பால்) சுரக்கின்ற, முலை - தனங்களையுடைய, மாதே - பெண்ணே! மேலோர் - பெரியோர், பெருக்கமொடு - வளர்தலையும், சுருக்கம் - குறைதலையும், பெற்ற-பொருந்திய, பொருட்கு-செல்வத்திற்கு, ஏற்ப - இசைய, விருப்பமொடு - ஆசையோடு, கொடுப்பர் - கொடுப்பார்; மதியின் - சந்திரனுடைய, கதிர் - கிரணங்கள், கலை - (வளர்தலையுந் தேய்தலையும் பொருந்திய) கலைகளின், அளவு-அளவாக, நின்ற - நின்றன, எ - று.

(க - து.) சந்திரனுடைய கிரணங்கள் கலைகளின் அளவாக நின்றனபோல், மேலோர்கள் தமது செல்வத்தின் உயர்வு தாழ்விற்குத் தகுந்த தன்மையாக வறியவர்களுக்கீவார்.

(வி-ரை.) மேலோர் - எழுவாய், கொடுப்பர் - பயனிலை; பொருள்-செயப்படுபொருள்; கதிர்-எழுவாய், நின்ற-பயனிலை. (கங)

14. தொலையாப் பெருஞ்செல்வத் தோற்றத்தோ மென்று
தலையா யவர்செருக்குச் சார்த—லிலையா
லிரைக்கும்வண் டூதுமல ரீர்ங்கோதாய் மேரு
வரைக்கும்வந் தன்று வளைவு.

(இ - ள்.) இரைக்கும் - ஒலிக்கின்ற, வண்டு - வண்டுகள், ஊதும் - ஊதுகின்ற, மலர் - பூக்களாலாகிய, ஈர்ம்-குளிர்ச்சிபொருந்திய, கோதாய் - மாலையையணிந்த மாதே! தலையாயவர் - தலைமையாகிய அறிவையுடையவர், தொலையா - எக்காலத்தினு மழியாத, பெரு - பெரிய, செல்வம்-செல்வத்திலே, தோற்றத்தோம் என்று - பிறந்திருக்கின்றோமென்று, செருக்கு - செருக்கை, சார்தல் - அடைதல், இலை - இல்லை; மேருவரைக்கும் - (எக்காலத்தினும் அசைவற்றிருந்த) மகா மேருமலைக்கும், வளைவு - (ஒருகாலத்தில்) வளைவு, வந்தன்று - வந்தது, எ-று.

(க - து.) மகாமேருமலைக்கும் ஒருகாலத்தில் வளைவு வந்ததென்று கருதி, அறிவுடையோர்கள் தாம் செல்வத்தில் எந்நாளும் மிகுந்திருப்போமென்று செருக்கடையமாட்டார்கள்.

(வி-ரை.) தலையாயவர் - எழுவாய், சார்தலிலை-பயனிலை, செருக்கு - செயப்படுபொருள்; வளைவு - எழுவாய், வந்தன்று - பயனிலை. ஆல் - அசை. (கச)

15. இல்லானுக் கன்பிங் கிடம்பொரு ளேவன்மற்
றெல்லா மிருந்துமவற் கென்செய்யு—நல்லாய்

மொழியிலார்க் கேது முதுநூ றெரியும்
விழியிலார்க் கேது விளக்கு.

(இ-ள்.) நல்லாய் - நற்குண முடையவளே! இங்கு - இவ்வுலகத்தில், அன்பு இல்லானுக்கு - அன்பு இல்லாதவனுக்கு, இடம் - இடமும், பொருள் - பொருளும், ஏவல் - ஏவலுமாகிய, எல்லாம் - இவையெல்லாம், இருந்தும் - உண்டாயிருந்தும், அவற்கு - அவனுக்கு, என் செய்யும் - யாது பயனைச் செய்யும்; மொழி - பேச்சு, இலார்க்கு - இல்லாதவராகிய ஊமைகளுக்கு, முது - பழமையாகிய, நூல் - நூலானது; ஏது - யாது பயனைச் செய்யும்; தெரியும் - பார்க்கின்ற, விழி இலார்க்கு - கண்ணில்லாதவராகிய குருடருக்கு, விளக்கு - தீபம், ஏது - யாது பயனைச் செய்யும், எ-று.

(க - து.) ஊமைகளுக்கு நூலும் குருடருக்குத் தீபமும் யாது பயனுஞ் செய்யாமைபோல, அன்பில்லாதவனுக்கு இடம் பொருள் ஏவலிருந்தும் அவன் அதனுல் யாதொரு பயனையும் அடையான்.

(வி-ரை.) எல்லாம் - எழுவாய், என்செய்யும் - பயனில்லை; நூல் - எழுவாய், ஏது - பயனில்லை; விளக்கு - எழுவாய், ஏது - பயனில்லை. (கரு)

16. தம்மையுந் தங்க டலைமையும் பார்த்துயர்ந்தோர்
தம்மை மதியார் தமையடைந்தோர்—தம்மி
னிழியினுஞ் செல்வ ரிடர்தீர்ப்ப ரல்கு
கழியினுஞ் செல்லாதோ கடல்.

(இ-ள்.) உயர்ந்தோர் - (அறிவொழுக்கங்களினல்) உயர்ந்தவர்கள், தமை - தங்களை, அடைந்தோர் - அடைந்தவர்கள், தம்மின் - தங்களைப் பார்க்கினும், இழியினும் - தாழ்ந்தவர்களாயினும், தம்மையும் - தங்களையும், தங்கள் - தங்களுடைய, தலைமையும் - தலைமையையும், பார்த்து - பார்த்து, தம்மை - தங்களை, மதியார் - மதியாதவர்களாகி,

செல்வர்-அவர்களிருக்குமிடத்துக்குப் போய், இடர் அவர்களுடைய துன்பங்களை, தீர்ப்பர் - நீக்குவர்கள்; கடல் - பெரிய சமுத்திரம், அல்கு - சிறிய, கழியினும் - உப்பங்கழியினும், செல்லாதோ-போய்ப் பாயாதோ (பாயும்), எ - று.

(க-து) பெரிய சமுத்திரம் சிறிய உப்பங்கழியினும் பாயுந்தன்மைபோல, மேலோர் தம்மிற் றாழ்ந்தவரிடத்திலுஞ் செருக்கின்றித் தேடிச்சென்று அவரைப் பாதுகாப்பர்.

(வி-ரை.) உயர்ந்தோர் - எழுவாய், தீர்ப்பர் - பயனிலை, இடர்- செயப்படுபொருள்; கடல்-எழுவாய், செல்லாதோ-பயனிலை. (கசு)

17. எந்தைநல் கூர்ந்தா னிரப்பார்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் மீகை மறுப்பரோ—பைந்தொடீஇ
நின்று பயனுதவி நில்லா வரம்பையின்கீழ்க்
கன்று முதவுங் கனி.

(இ - ள்.) பைந்தொடீ - பசும்பொன்னாலாகிய வளையலையணிந்தமாதே! எந்தை - எங்கள் பிதா, இரப்பார்க்கு-இரப்பவர்க்கு, ஈந்து- கொடுத்து, நல்கூர்ந்தான் - தரித்திரனானன், என்று - என்று, அவன் - அவனுடைய, மைந்தர் - புத்திரர், தம் - தமது, ஈகை-கொடையை, மறுப்பரோ - விடுவாரோ (விடார்); நின்று-(முதலில் அழிவில்லாமல்) நின்று, பயன்-(பழமாகிய) பயனை, உதவி - கொடுத்து, நில்லா - அதனால் அழிவையடைந்த, அரம்பையின்-வாழைமரத்தின், கீழ்க்கன்றும் - கீழ்நின்ற அதன் கன்றும், கனி - பழத்தை, உதவும்- கொடுக்கும், எ - று.

(க - து) பழமாகிய பயனைப் பிறருக்குத் தந்து அழிவடைந்த வாழைமரத்தின் கீழ்க்கன்றும் பயனளித்தல்போல, தம் தந்தை வறியவர்க்குக் கொடுத்த கொடையினாலேயே தரித்திரனானனென்று அவன் புத்திரர் கொடாம லிருக்கமாட்டார்கள்.

(வி-ரை.) மைந்தர் - எழுவாய், மறுப்பரோ - பயனிலை, ஈகை-செயப்படுபொருள்; கீழ்க்கன்றும்-எழுவாய், உதவும்-பயனிலை, கனி-செயப்படுபொருள். (கஎ)

18. இன்சொலா லன்றி யிருநீர் வியனுலகம்
வன்சொலா லென்று மகிழாதே—பொன்செ
யதிர்வளையாய் பொங்கா தழற்கதிராற் றண்ணென்
கதிர்வரவாற் பொங்குங் கடல்.

(இ-ள்.) பொன்-பொன்னாலே, செய்-செய்யப்பட்ட, அதிர்-ஒலிக்கின்ற, வளையாய் - வளையலையணிந்த மாதே! இரு - பெரிய, நீர் - கடல் சூழ்ந்த, வியன்-பரந்த, உலகம் - உலகத்திலுள்ளவர், இன்சொலால் - இன்சொல்லினால், அன்றி - அல்லாமல், வன் சொலால்-கடுஞ்சொல்லினால், என்றும் - எந்நாளும், மகிழாது - மகிழ்ச்சியடையார்கள்; கடல்-கடலானது, தண்என் - குளிர்ச்சிபொருந்திய, கதிர் - கிரணங்களையுடைய சந்திரனது, வரவால் - வருகையினாலே, பொங்கும்-பொங்கும் அன்றி, அழல் - சூடுபொருந்திய, கதிரால் - கிரணங்களையுடைய சூரியனது வருகையினாலே, பொங்காது - பொங்காது, எ-று.

(க-து.) சமுத்திரம் குளிர்ந்த சந்திரனாலன்றி அழன்ற சூரியனால் பொங்காது; அதுபோல, உலகிலுள்ளார் இன்சொல்லினாலல்லாமல் வன்சொல்லினால் மகிழார்கள்.

(வி-ரை.) உலகம்-எழுவாய், மகிழாது - பயனிலை; கடல் - எழுவாய், பொங்காது-பயனிலை; கடல்-எழுவாய், பொங்கும்-பயனிலை.()

19. நல்லோர் வரவா னகைமுகங்கொண் டின்புறீஇ
யல்லோர் வரவா னழுங்குவார்—வல்லோர்
திருந்துந் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்துஞ் சுழல்கால் வர.

(இ-ள்.) வல்லோர் - கல்வியறிவில் வல்லவர், நல்லோர்-நல்லவ ருடைய, வரவால் - வருகையினாலே, முகம் நகை கொண்டு-முகமலர்ச்சிகொண்டு, இன்பு - இன்பத்தை, உறீஇ - அடைந்து, அல்லோர் - தீயவருடைய, வரவால் - வருகையினாலே, அழுங்குவார்-துன்பத்தை யடைந்து வருந்துவார்; தேமா - தேமாமரமானது, தென்றல்-தென்றற்காற்று, வர - வர, தளிர் - தளிரை, காட்டி-தோற்றி, திருந்தும்-சிறப்புற்றிருக்கும், சுழல் கால் - சுழல் காற்று, வர - வர, வருந்தும்-வருத்தமடையும், எ-று.

(க - து) தேமாமரமானது தென்றற்காற்றினால் தளிர்த்துச் சிறக்கும், சுழல்காற்றினால் கிளைகள் முறிந்து வருந்தும்; அதுபோல், கல்வியறிவுடையவருக்கு நல்லோர் வரவினால் இன்பமும், தீயோர் வரவினால் துன்பமும் விளையும்.

(வி-ரை.) வல்லோர்-எழுவாய், அழுங்குவார்-பயனிலை; தேமா-எழுவாய், திருந்தும் - பயனிலை; தேமா - எழுவாய், வருந்தும் - பயனிலை. (கக)

20. பெரியவர்தந் நோய்போற் பிறர்நோய்கண் டுள்ள
மெரியி னிழுதாவ ரென்க—தெரியிழாய்
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்.

(இ - ள்.) தெரி - ஆராய்ந்த, இழாய் - இரத்தினாபரணங்களை அணிந்த மாதே! பெரியவர்-அறிவொழுக்கங்களிற் பெரியவர், பிறர்-பிறருக்கு வந்த, நோய் - வியாதியை, கண்டு - பார்த்து, தம் - தமக்கு வந்த, நோய்போல் - வியாதியைப்போல நினைத்து, உள்ளம் - மனம், எரியின் - அக்கினியிலே பட்ட, இழுது - நெய்போல, ஆவர்-உருகுவார், என்க-என்று அறியக்கடவாய்; கண்-கண்களானவை, மண்டு - நெருங்கிய, பிணியால் - வியாதியால், வருந்து - வருந்துகிற, பிற -

மற்றை, உறுப்பை - அவயவங்களை, கண்டு - பார்த்து, கலுழும்-அழா நிற்கும், எ-று.

(க-து.) அறிவுடைய சான்றோர் பிறருக்கு வந்த நோயைத் தமக்கு வந்ததுபோல் நினைத்து மனம் உருகுவார்கள்; அந்நோயினால் வருந்துகிற அவயவங்களைக் கண்ட அவர் கண்கள் அழும்.

(வி-ரை.) பெரியவர்-எழுவாய், ஆவர்-பயனிலை; கண்-எழுவாய், கலுழும்-பயனிலை. எ-அசை. (உ0)

21. எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்தும்
எழுத்தறிவார்க் காணி னிலையா—மெழுத்தறிவா
ராயுங் கடவு ளவிர்சடைமுன் கண்டளவில்
வீயுஞ் சுரநீர் மிகை.

(இ-ள்.) எழுத்து - இலக்கணநூலை, அறியார் - அறியாதவருடைய, கல்வி - மற்றைக்கல்வியினது, பெருக்கம் - மிகுதி, அனைத்தும் - முழுதும், எழுத்து - இலக்கணநூலை, அறிவார்-அறிந்தவரை, காணின் - கண்டால், இலை - இல்லாமற்போகும்; சுர நீர்-ஆகாயகங்கையினுடைய, மிகை-பெருக்கமானது, எழுத்து-எழுத்துக்களினியல்பை, அறிவார் - அறியும் பெரியோர், ஆயும் - ஆராய்கின்ற, கடவுள் - சிவபெருமானது, அவிர் - விளங்குகின்ற, சடை - சடையை, முன் - தன்முன், கண்ட அளவில் - கண்டவளவிலே, வீயும் - நீங்கிவிடும், எ-று.

(க-து.) ஆகாயகங்கையின் பெருக்கமானது சிவபிரான் சடையைக்கண்டவளவில் அடங்கிய தன்மைபோல், இலக்கணநூலுணர்ச்சியில்லாதவருடைய கல்வி இலக்கணநூலுணர்ச்சியுடையாரெதிரே பயன்படாது.

(வி-ரை.) பெருக்கம் - எழுவாய், இலை-பயனிலை, மிகை-எழுவாய், வீயும்-பயனிலை. ஆம் - அசை. (உக)

22. ஆக்கு மறிவா னலது பிறப்பினுன்
மீக்கொ ளுயர்விழிவு வேண்டற்க—நீக்கு
பவரா ரரவின் பருமணிகண் டென்றுங்
கவரார் கடலின் கடு.

(இ-ள்.) மீ - மேலாக, கொள் - கொள்கின்ற, உயர்வு - உயர்வையும், இழிவு - (கீழாகக்கொள்கின்ற) இழிவையும், ஆக்கும் - (நற்குணங்களை) உண்டாக்குகின்ற, அறிவால்-கல்வியறிவினுல், அல்லது-அல்லாமல், பிறப்பினுல் - சாதியினுல், வேண்டற்க - விரும்பாதிருக்கக்கடவீர்; அரவின் - (நஞ்சையுடைய) பாம்பினிடத்து உண்டாகிய, பரு - பருத்த, மணி - மாணிக்கத்தை, கண்டு - கண்டு, நீக்குபவர் - நீக்குவோர், ஆர்-எவர் (ஒருவருமில்லை); கடலின் - பாற்கடலினிடத்துண்டாகிய, கடு - நஞ்சை, என்றும் - ஒருநாளும், கவரார் - கொள்ளார், எ-று.

(க - து.) நஞ்சையுடைய பாம்பினது மாணிக்கத்தை நீக்குபவரும் பாற்கடலிலுண்டாகிய விஷத்தைக் கொள்பவரும் இல்லை; அதுபோல, உயர்குலத்தானுயினும் அறிவில்லாதவனை இழிந்தவனுகவும், இழிகுலத்தானுயினும் அறிவுள்ளவனை உயர்ந்தவனுகவும் கொள்ளல்வேண்டும்.

(வி-ரை.) நீர் - தோன்ரு எழுவாய், வேண்டற்க - பயனிலை, உயர்வு இழிவு - செயப்படுபொருள்; நீக்குவோர் - எழுவாய், இல்லை-பயனிலை; யாவரும் - தோன்ரு எழுவாய், கவரார் - பயனிலை, கடு - செயப்படுபொருள். (உஉ)

23. பகர்ச்சி மடவார் பயில நோன்பாற்ற
றிகழ்ச்சி தருநெஞ்சத் திட்ப—நெகிழ்ச்சி
பெறும்பூரிக் கின்றமுலைப் பேதாய் பலகா
லெறும்பூரக் கற்குழியு மே.

(இ - ள்.) பூரிக்கின்ற - விம்முகின்ற, முலை - தனங்களை யுடைய, பேதாய்-மாதே! மடவார் - பெண்களினது, பகர்ச்சி - வாய்ச் சொல்லோடு, பயில - (ஒருவன்) பழகிவரினும், நோன்பு - தவத்தை, ஆற்றல் - செய்தலில், திகழ்ச்சிதரும் - விளங்குகின்ற, நெஞ்சம் - (அவனுடைய) மனத்தினது, திட்பம் - உறுதியானது, நெகிழ்ச்சி - (நாளுக்குநாள்) தளர்தலை, பெறும் - அடையும்; பலகால் - பலதரம், எறும்பு - சிற்றெறும்புகள், ஊர - ஊர்ந்து செல்ல, கல் - கருங்கல் லும், குழியும் - குழிந்துபோகும், எ-று.

(க - து.) எறும்பு ஊரக் கற்குழியுந் தன்மைபோல மனவுறுதி யோடு தவஞ்செய்யும் ஒருவன் மாதர்களின் வாய்ச்சொல்லோடு பழகி வந்தாலும் அவன் மனவுறுதி தளர்ந்துபோகும்.

(வி-ரை.) நெஞ்சம்-எழுவாய், பெறும்-பயனிலை, நெகிழ்ச்சி- செயப்படுபொருள்; கல் - எழுவாய், குழியும்-பயனிலை. (உங)

24. உண்டு குணமிங் கொருவர்க் கெனினுங்கீழ்
கொண்டு புகல்வதவர் குற்றமே—வண்டுமலர்ச்
சேக்கை விரும்புஞ் செழும்பொழில்வாய் வேம்பன்றோ
காக்கை விரும்பும் கனி.

(இ - ள்.) இங்கு - இவ்வுலகத்திலே, ஒருவர்க்கு - ஒருவருக்கு, குணம் - நற்குணம், உண்டு எனினும் - உள்ளதாயினும், கீழ் - கீழோர், கொண்டு - எடுத்து, புகல்வது - பேசுவது, அவர் - அவ ருடைய, குற்றமே - குற்றமேயாகும்; செழும் - செழுமையாகிய, பொழில்வாய் - சோலையினிடத்தே, மலர் - பூவாகிய, சேக்கை - மெத்தையை, வண்டு - வண்டுகள், விரும்பும் - இச்சிக்கும்; வேம்பு - வேப்பம்பழம், அன்றோ - அல்லவோ, காக்கை - காக்கைகள், விரும் பும் - இச்சிக்கும், கனி - பழம், எ - று.

(க - து.) வண்டுகள் சோலையிலுள்ள மலர்களாகிய சயனத்தை விரும்பும்; காக்கைகள் மதுரமாகிய பழங்களைவிட்டு வேப்பம்பழத்தையே விரும்பும்; இவைபோல், மேலோர் ஒருவனிடத்துள்ள நற்குணத்தையே எடுத்துப்பேசுவர், கீழோர் தீக்குணத்தையே எடுத்துப் பேசுவர்.

(வி-ரை.) புகல்வது - எழுவாய், குற்றமே-பயனிலை; வண்டு - எழுவாய், விரும்பும்-பயனிலை, சேக்கை - செயப்படுபொருள்; கனி- எழுவாய், வேம்பு-பயனிலை. (உச)

25. கல்லா வறிவிற் கயவர்பாற் கற்றுணர்ந்த
நல்லார் தமது கன நண்ணாரே—வில்லார்
கணையிற் பொலியுங் கருங்கண்ணாய் நொய்தாம்
புணையிற் புகுமொண் பொருள்.

(இ - ள்.) வில் - வில்லோடு, ஆர் - கூடிய, கணையின் - அம்பைப்போல, பொலியும் - (புருவத்தோடு கூடி) விளங்கும், கரு - கருமையாகிய, கண்ணாய் - கண்களையுடைய மாதே! கல்லா - வாசியாத, அறிவின் - அறிவையுடைய, கயவர்பால் - மூடரிடத்திலே (சேர்ந்தால்), கற்று - வாசித்து, உணர்ந்த - அறிந்த, நல்லார் - நல்லோர், தமது - தம்முடைய, கனம்-பெருமையை, நண்ணார் - இழப்பர்; புணையில்-(கனமில்லாத) தெப்பத்திலே, புகும் - சேர்ந்த, ஒள் - கனமுடைய, பொருள் - பொருள், நொய்து - இலகு, ஆம் - ஆகும், எ - று.

(க - து.) கனமுடைய பொருள் கனமில்லாத தெப்பத்திலே சேர்ந்தால் மிதப்பதுபோல, கற்றறிந்தவர் மூடரிடத்தே சேர்ந்தால் தமது பெருமை குறைந்து சிறுமையடைவர்.

(வி-ரை.) நல்லார்-எழுவாய், நண்ணார்-பயனிலை; கனம்-செயப்படுபொருள்; பொருள்-எழுவாய், நொய்தாம்-பயனிலை. (உரு)

26. உடலின் சிறுமைகண் டொண்புலவர் கல்விக்
கடலின் பெருமை கடவார்—மடவரால்
கண்ணளவாய் நின்றதோ காணுங் கதிரொளிதான்
விண்ணளவா யிற்றோ விளம்பு.

(இ-ள்.) மடவரால் - இளமைப்பருவம் வாய்ந்த மாதே! ஒள் - ஒள்ளிய, புலவர் - புலவருடைய, உடலின் - சரீரத்தின், சிறுமை - சிறுமையை, கண்டு - பார்த்து, கல்வி - அவரது கல்வியாகிய, கடலின் - சமுத்திரத்தினது, பெருமை - பெருமையை, கடவார்-(ஒருவரும்) கடக்கமாட்டார்; கதிர் - சூரியனொளியோடு கூடி, காணும்-காண்கின்ற, ஒளி-கருமணியொளியானது, கண் அளவாய் - (தனக்கிடமாகிய சிறிய) கண்ணின் அளவாக, நின்றதோ - அடங்கி நின்றதோ, விண் - (தான் காண்கின்ற பெரிய) ஆகாயத்தின், அளவு - அளவாக, ஆயிற்றோ - வியாபித்து நின்றதோ, விளம்பு - நீ சொல்வாயாக, எ-று.

(க - து.) சூரியனொளியோடுகூடிக் காண்கின்ற கருமணியொளியானது தனக்கிடமாகிய சிறிய கண்ணளவன்றி ஆகாயமுழுதும் வியாபித்து நிற்பதுபோல் வித்துவான்கள் உடலிற் சிறியவராயினும் அறிவிற் பெரியவராவார்.

(வி-ரை.) யாவரும் - தோன்றா எழுவாய், கடவார் - பயனிலை, பெருமை செயப்படுபொருள்; நீ-தோன்றா எழுவாய், விளம்பு - பயனிலை, இதனை-செயப்படுபொருள். தான்-அசை. (உசு)

27. கைம்மா றுகவாமற் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மா லியலுதவி தாஞ்செய்வ—ரம்மா
முலைக்கு மெயிறு முதிர்சுவைநா விற்கு
விளைக்கும் வலியனதா மென்று.

(இ - ள்.) கற்று - வாசித்து, அறிந்தோர் - தருநீதியை அறிந்தவர்கள், கைம்மாறு - பிரதியுபகாரத்தை, உகவாமல் - விரும்பாமல், மெய் - சரீரம், வருந்தி - வருத்தமுற்று, தம்மால் - தங்களால், இயல் - கூடிய, உதவி - உதவிகளை, தாம் - தாங்களே, செய்வர் - செய்வார்கள்; முளைக்கும் - முளைக்கின்ற, எயிறு - பற்களானவை, நாவிற்கு - (தமக்கு யாதோருபகாரமுஞ் செய்ய வியலாத) நாக்குக்கு, வலியன - கடினமாகிய தின்பண்டங்களை, தாம் - தாமே, மென்று - மென்று கொடுத்து, முதிர் - நிறைந்த, சுவை - உருசியை, விளைக்கும் - உண்டாக்கும், எ-று.

(க - து.) பற்களானவை தமக்கு யாதாமோருபகாரமுஞ் செய்ய இயலாத நாவுக்குக் கடினமாகிய தின்பண்டங்களை மென்று கொடுத்து உருசியை உண்டாக்குவதுபோல, மேலோர்கள் பிறரிடத்துப் பிரதியுபகாரத்தை விரும்பாது தங்கள் சரீரம் வருத்தமுறத் தாங்களே உதவி செய்வார்கள்.

(வி - ரை.) கற்றறிந்தோர் - எழுவாய், செய்வர் - பயனிலை, உதவி - செயப்படுபொருள்; எயிறு - எழுவாய், விளைக்கும் - பயனிலை, சுவை - செயப்படுபொருள். அம்மா - வியப்பிடைச்சொல். (உசு)

௨௩. முனிவினு நல்குவர் மூதறிஞ ருள்ளக்
கனிவினு நல்கார் கயவர் — நனிவிளைவில்
காயினு மாகுங் கதலிதா னெட்டிபழுத்
தாயினு மாமோ வறை.

(இ-ள்.) மூதறிஞர் - பேரறிவுடையவர், முனிவினும் - கோபமுள்ள காலத்தினும், நல்குவர் - கொடுப்பர்; கயவர் - மூடர், உள்ளக் கனிவினும் - மனமகிழ்ச்சி உள்ளகாலத்தினும், நல்கார் - கொடார்; கதலி - வாழையானது, நனி - மிக, விளைவு இல் - முற்றுதலில்லாத, காயினும் - காயினுலும், ஆகும் - பயன்படும்; எட்டி - எட்டியானது,

பழுத்த ஆயினும்-பழுத்தாலும், ஆமோ - பயன்படுமோ, அறை - நீ சொல்வாயாக, எ-று.

(க-து.) வாழையானது பழத்தால் பயன்படுதலன்றிக் காயினாலும் பயன்படுவதுபோல், பேரறிவுடையர் சந்தோஷகாலத்தில் கொடுப்பதன்றிக் கோபமுள்ள காலத்தினுங் கொடுப்பர்; எட்டியானது பழுத்தாலும் பிறருக்குப் பயன்படாததுபோல, மூடர்கள் சந்தோஷகாலத்தினும் யாருக்குங் கொடார்கள்.

(வி-ரை.) மூதறிஞர், - எழுவாய், கொடுப்பர் - பயனிலை, பொருளை என்னுஞ் செயப்படுபொருள் மறைந்து நின்றது; கதலி - எழுவாய், ஆகும் - பயனிலை; எட்டி-எழுவாய், ஆமோ-பயனிலை. தான் - அசை.

(உஅ)

29. உடற்கு வருமிடர்நெஞ் சோங்குபரத் துற்றோ
ரடுக்கு மொருகோடி யாக—நடுக்கமுறார்
பண்ணிற் புகலும் பனிமொழியா யஞ்சுமோ
மண்ணிற் புலியைமதி மான்.

(இ - ள்.) பண்ணின் - பண்ணைப்போல, புகலும் - பேசுகின்ற, பனி - குளிர்ச்சிபொருந்திய, மொழியாய் - சொல்லையுடைய மாதே! நெஞ்சு - (தம்முடைய) மனம், ஓங்கு - உயர்ந்த, பரத்து-பரத்தினிடத்தே, உற்றோர் - அழுந்தப்பெற்ற ஞானிகள், உடற்கு தம்முடைய சரீரத்துக்கு, வரும் - வரும், இடர் - துன்பங்கள், அடுக்கும்-அடுக்கிச் சொல்லப்படும், ஒரு கோடி ஆக - ஒருகோடி யளவினவாக இருந்தாலும், நடுக்கம் - அச்சத்தை, உறார் - அடையார்கள்; மதி - சந்திரனிடத்தி லிருக்கின்ற, மான் - மானானது, மண்ணில் - பூமியிலிருக்கின்ற, புலியை - புலிக்கு, அஞ்சுமோ-பயப்படுமோ (பயப்படாது) எ - று.

(க - து.) சந்திரனிடத்துள்ள களங்கமாகிய மானனது பூமியி லுள்ள புலிக்குப் பயப்படாததுபோல, கடவுளிடத்து மனமழுந்தப் பெற்றவர் எத்துணைப் பெருந் துன்பங்களுக்கும் அஞ்சார்.

(வி - ரை.) உற்றோர் - எழுவாய், உறார் - பயனிலை, நடுக்கம் - செயப்படுபொருள்; மான்-எழுவாய், அஞ்சுமோ-பயனிலை. (உக)

30. கொள்ளுங் கொடுங்கூற்றங் கொல்வான் குறுகுதன்மு
ளுள்ளங் கனிந்தறஞ்செய் துய்கவே—வெள்ளம்
வருவதற்கு முன்ன ரணைகோலி வையார்
பெருகுதற்க ணென்செய்வார் பேசு.

(இ-ள்.) கொள்ளும் - (உயிரைக்) கொண்டு செல்கின்ற, கொடும் - கொடுமையாகிய, கூற்றம் - யமனனவன், கொல்வான்-கொல் லும்படி, குறுகுதன்முன் - அணுகுதற்கு முன்னே, உள்ளம்-மனம், கனிந்து - கரைந்து, அறம் - தருமங்களை, செய்து - செய்து, உய்க- பிழைக்கக்கடவாய்; வெள்ளம்-வெள்ளம், வருவதற்கு-பெருகி வருவ தற்கு, முன்னர் - முன்னே, அணை - கரையை, கோலி - கட்டி, வையார்-வையாதவர், பெருகுதற்கண்-(அது)பெருகிவரும்பொழுது, என் செய்வார் - யாது செய்வார், பேசு - நீ சொல்வாய், எ-று.

(க - து.) வெள்ளம் பெருகிவரு முன்னமே அணைகட்டி வை யாதவர் அது பெருகி வரும்பொழுது யாது செய்வார்; அதுபோல, மாணம் வருமுன்னமே தருமஞ் செய்யாதவர் மாணம் வரும்பொழுது யாது செய்வார்.

(வி-ரை.) நீ-தோன்றா எழுவாய்; உய்க - பயனிலை, வையார்- எழுவாய், என்செய்வார்-பயனிலை. ஏ-அசை. (௩௰)

31. பேரறிஞர் தாக்கும் பிறர்துயரந் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவார்—நேரிழாய்

மெய்சென்று தாக்கும் வியன்கோ லடிதன்மேற்
கைசென்று தாங்குங் கடிது.

(இ - ள்.) நேர் - தகுதியாகிய, இழாய் - ஆபரணத்தையுடையவளே! பேர் - பெரிய, அறிஞர் - அறிவையுடையவர், தாக்கும் - வருத்துகின்ற, பிறர் - பிறருடைய, துயரம் - துன்பத்தை, வீரமொடு - வீரத்தோடு, தாங்கி - தாம் ஏற்றுக்கொண்டு, காக்க (அவரைப்) பாதுகாத்தற்கு, விரைகுவார் - விரைந்துபோவார்; மெய் - உடம்பிலே, சென்று - போய், தாக்கும் - தாக்குகின்ற, வியன் - பெரிய, கோல் - கோலினுடைய, அடி - அடியை, கை - கையானது, கடிது - சீக்கிரம், சென்று - போய், தன்மேல் - தன்மேல் (படும்படி), தாங்கும் - ஏற்றுக்கொள்ளும், எ - று.

(க - ரு) பிறரால் தாக்குகின்ற கோலினது அடியைத் தேகத்தின்மீது படவொட்டாமல் தன்மேல் படும்படி கை ஏற்றுக்கொள்ளுந் தன்மைபோல், அறிவுடையோர்கள் பிறருடைய துன்பங்களைத் தாம் ஏற்றுக்கொண்டு அவரைப் பாதுகாப்பர்.

(வி-ரை.) அறிஞர்-எழுவாய், விரைகுவார்-பயனிலை; கை-எழுவாய், தாங்கும்-பயனிலை, அடி - செயப்படுபொருள். ஏ-அசை. (நுக)

32. பன்னும் பனுவற் பயன்றே ரறிவிலார்
மன்னு மறங்கள் வலியிலவே—நன்னுதால்
காழொன் றுயர்திண் கதவு வலியுடைத்தோ
தாழொன் றிலதாயிற் றான்.

(இ-ள்.) நல்-நல்ல, நுதால்-நெற்றியையுடைய மாதே! பன்னும்-சொல்லப்படுகின்ற, பனுவல்-நூல்களினது, பயன்-பொருளை, தேர்-அறியும், அறிவு - விவேகம், இலார் - இல்லாதவருடைய, மன்னும்-மிகுந்த, அறங்கள் - தருமங்கள், வலி - உறுதி, இலவே-இல்லாதன

வேயாம்; காழ் - வயிரம், ஒன்று - பொருந்திய, உயர்-உயர்ந்த, திண் வலிய, கதவு - கதவானது, தாழ் ஒன்று - ஒருதாழக்கோல், இலது ஆயின் - இல்லாததாயின், வலி - உறுதியை, உடைத்தோ - உடைத்தாகுமோ? (உடைத்தாகாது) எ - று.

(க - து.) கதவானது வலியுடைத்தாயினும் தாழக்கோல் இலதாயின் உறுதியுடைத் தாகாததுபோல, விதிவிலக்குகளைப் பகுத்துக் கூறும் நூற்பொருளை அறியாதாருடைய தருமங்கள் உறுதியுடைத் தாகாது.

(வி-ரை.) வலி-எழுவாய், இலவே - பயனிலை; கதவு-எழுவாய், உடைத்தோ-பயனிலை, வலி-செயப்படுபொருள். தான்-அசை. (௩௨)

33. எள்ளா திருப்ப விழிஞர்போற் றற்குரியர்
விள்ளா வறிஞரது வேண்டாரே—தள்ளாக்
கரைகாப் புளதுநீர் கட்டுகுள மன்றிக்
கரைகாப் புளதோ கடல்.

(இ - ள்.) இழிஞர் - அறிவில்லாத சிறியர், எள்ளாது - (பிறர் தம்மை) இகழாது, இருப்ப - இருக்கும்படி, போற்றற்கு - காக்கப் படுதற்கு, உரியர்-உரியவராவர்; விள்ளா-நீங்காத, அறிஞர்-அறிவையுடைய பெரியோர், அது - அங்ஙனங் காக்கப்படுதலை, வேண்டார் - விரும்பார்கள்; நீர் - நீரை, கட்டு - கட்டிவைக்கின்ற, குளம் - சிறிய குளமே, தள்ளா - தள்ளப்படாத, கரை - கரையை, காப்பு-காவலாக, உளது - உடையதாயிருக்கிறது; அன்றி - அல்லாமல், கடல்-பெரிய கடலானது, கரை - கரையை, காப்பு - காவலாக, உளதோ - உடையதோ (உடையதன்று), எ - று.

(க - து.) சிறிய குளம் கரையைக் காவலாயும், பெரிய கடல் கரையைக் காவல் இலதாயும் இருப்பதுபோல், சிறியோர்கள் தம்மைப் பிறர் இகழாவண்ணம் காத்தற்குரியவராவர்; பெரியோர்கள் அங்ஙனங் காக்கப்படுதலை ஒரு பொருட்டாய் விரும்பார்கள்.

(வி-ரை.) இழிஞர்-எழுவாய், உரியர் - பயனிலை; அறிஞர்-எழுவாய், வேண்டார்-பயனிலை, அது - செயப்படுபொருள்; குளம்-எழுவாய், உளது-பயனிலை, கரை - செயப்படுபொருள்; கடல்-எழுவாய், உளதோ-பயனிலை; அது-செயப்படுபொருள். (௩௩)

34. அறிவுடையா ரன்றி யதுபெறுர் தம்பாற்
செறிபழியை யஞ்சார் சிறிதும்—பிறைநுதால்
வண்ணஞ்செய் வாள்விழியே யன்றி மறைகுருட்டுக்
கண்ணஞ்சு மோவிருளைக் கண்டு.

(இ-ள்.) பிறை - பிறைபோலும், நுதால் - நெற்றியையுடைய மாதே! அறிவு உடையோர் - அறிவுடையவரே, அன்றி-அல்லாமல், அது-அவ்வறிவை, பெறுர் - பெறுத மூடர், தம்பால்-தம்மிடத்தில், செறி - நெருங்கிவரும், பழியை - பழிக்கு, சிறிதும் - கொஞ்சமும், அஞ்சார் - பயப்படார்கள்; வண்ணம் - அழகு, செய் - செய்கின்ற, வாள் - ஒளியையுடைய, விழியே - கண்களே, அன்றி - அல்லாமல், மறை - (ஒளி) மறைந்த, குருட்டுக்கண் - குருட்டுக்கண்களானவை, இருளை - இருளை, கண்டு - பார்த்து, அஞ்சுமோ-பயப்படுமோ (பயப்படாது), எ - று.

(க-து.) ஒளியையுடைய கண்களன்றிக் குருட்டுக்கண்கள் இருளுக்குப் பயப்படாததுபோல, அறிவுடையோர் தம்மிடத்து வரும் பழிக்குப் பயப்படுவார்களன்றி அறிவிலாதார் பயப்படார்கள்.

(வி - ரை.) பெறுர்-எழுவாய், அஞ்சார்-பயனிலை; குருட்டுக்கண்-எழுவாய், அஞ்சுமோ-பயனிலை. (௩௪)

35. கற்ற வறிவினரைக் காமுறுவர் மேன்மக்கண்
மற்றையர்தா மென்று மதியாரே—வெற்றிநெடும்
வேல்வேண்டும் வாள்விழியாய் வேண்டா புளிங்காடி
பால்வேண்டும் வாழைப் பழம்.

(இ - ள்.) வெற்றி - வெற்றியையுடைய, நெடு - நீண்ட, வேல் - வேற்படை, வேண்டும் - விரும்புகின்ற, வாள் - ஒளிபொருந்திய, விழியாய் - கண்களையுடைய மாதே! கற்ற - (நூல்களைக்) கற்ற, அறிவினரை - அறிவுடையவரை, மேன்மக்கள் - மேலோர், காமுறுவர் - விரும்புவர்; மற்றையர் - கீழோர், என்றும் - (அவரை) எப்போதும், மதியார் - மதியார்கள்; வாழைப்பழம் - வாழைப்பழத்தை, பால் - (மதுரமுள்ள) பாலானது, வேண்டும் - விரும்பும்; புளிங்காடி - புளிப்பாகிய காடி நீரானது, வேண்டா - அதனை விரும்பாது, எ - று.

(க - து.) வாழைப்பழத்தைப் பால் விரும்புமேயன்றிப் புளிங்காடி விரும்பாதுபோல, கற்றறிந்தோரை மேன்மக்கள் விரும்புவார்களன்றிக் கீழ்மக்கள் விரும்பார்கள்.

(வி - ரை.) மேன்மக்கள் - எழுவாய், காமுறுவர் - பயனிலை, அறிவினரை - செயப்படுபொருள்; மற்றையர் - எழுவாய், மதியார் - பயனிலை, அறிவினரை - செயப்படுபொருள்; பால் எழுவாய், வேண்டும் - பயனிலை, வாழைப்பழம் - செயப்படுபொருள்; புளிங்காடி - எழுவாய், வேண்டா - பயனிலை, வாழைப்பழம் - செயப்படுபொருள். தாம், ஏ - அசை. (௩௫)

36. தக்கார்க்கே யீவர் தகார்க்களிப்பா ரில்லென்று
மிக்கார்க் குதவார் விழுமியோ—ரெக்காலு
நெல்லுக் கிறைப்பரே நீரன்றிக் காட்டுமுளி
புல்லுக் கிறைப்பரோ போய்.

(இ - ள்.) தக்கார்க்கே - யோக்கியருக்கே, ஈவர் - கொடுப்பார், தகார்க்கு - அயோக்கியருக்கு, அளிப்பார் - கொடுப்பவர், இல் என்று - இல்லையென்று அறிந்து, விழுமியோர் - மேலோர், மிக்கார்க்கு - நன்னெறி கடந்தவராகிய அயோக்கியருக்கு, உதவார் - கொடார்; எக்

நாளும் - எக்காலத்தும், நீர் - நீரை, நெல்லுக்கு - நெற்பயிருக்கே, இறைப்பதே அன்றி - இறைப்பதல்லாமல், காட்டு - காட்டினிடத்தே, முளி - உலரும், புல்லுக்கு - புல்லுக்கு, போய் - சென்று, இறைப்பாரோ - இறையார், எ-று.

(க-து.) பயிரிடுவோர் நெற்பயிருக்கு நீரிறைப்பதன்றி உலர்ந்த புல்லுக்கு இறைபார்கள்போல, மேலோர் யோக்கியருக்கே தம் பொருளைக் கொடுப்பாரன்றி அயோக்கியருக்குக் கொடார்.

(வி-ரை.) விழுமியோர் - எழுவாய், உதவார் - பயனிலை, பொருளை என்னுஞ் செயப்படுபொருள் மறைந்து நின்றது; பயிரிடுவோர் - தோன்று எழுவாய், இறைப்பரோ - பயனிலை, நீர் - செயப்படுபொருள்.

37. பெரியோர்முற் றன்னைப் புனைந்துரைத்த பேதை
தரியா துயர்வகன்று தாழும் — தெரியாய்கொல்
பொன்னுயர்வு தீர்த்த புணர்முலையாய் விந்தமலை
தன்னுயர்வு தீர்ந்தன்று தாழ்ந்து.

(இ-ள்.) பொன் - இலட்சுமியினுடைய, உயர்வு - அழகினுயர்வை, தீர்த்த - நீக்கிய, புணர் - நெருங்கிய, முலையாய் - தனங்களையுடைய மாதே! பெரியோர் முன் - அறிவுடையோர் முன், தன்னை - தன்னை, புனைந்து - சிறப்பித்து, உரைத்த - சொல்லிய, பேதை - மூடன், உயர்வு - உயர்வை, தரியாது - பெறாது, அகன்று - இழந்து, தாழும் - தாழ்வையடைவன்; விந்தமலை - (அகத்தியர் முன்னே தன்னைச் சிறப்பித்துச் சொல்லிய) விந்தமலையானது, தாழ்ந்து - (அவர் கையினாலே ஊன்றப் பாதாளத்திலே) தாழ்ந்து, தன் - தன்னுடைய, உயர்வு - உயர்வை, தீர்ந்தன்று - நீங்கியது, தெரியாய்கொல் - (நீ அதனை) அறியாயோ, எ - று.

(க - து.) அகத்தியர்முன்னே தன்னைச் சிறப்பித்துச் சொல்லிய விந்தமலையானது அவர் கையினாலேயே பாதாளத்திலே அழுந்

இத் தனது உயர்வுநீங்கியதுபோல, அறிவுடையோர்முன்னே தன்னைச் சிறப்பித்துச் சொல்லிய மூடன் உயர்வடையாது தாழ்வடைவான்.

(வி-ரை.) பேதை-எழுவாய், தாழும்-பயனிலை; விந்தமலை-எழுவாய், தீர்ந்தன்று பயனிலை, உயர்வு-செயப்படுபொருள். (௩௭)

33. நல்லார் செயுங்கேண்மை நாடோறு நன்றாகு
மல்லார் செயுங்கேண்மை யாகாதே—நல்லாய்கேள்
காய்முற்றிற் றின்றீங் கனியா மிளந்தளிர்நாள்
போய்முற்றி னென்னாகிப் போம்.

(இ - ள்.) நல்லாய் - நற்குணத்தையுடைய மாதே! கேள்-கேட்பாயாக! நல்லார் - நல்லோர், செயும் - செய்யும், கேண்மை - சிநேகமானது, நாடோறும் தினந்தோறும், நன்று ஆகும்-நன்றாகி வளரும்; அல்லார் - தீயோர், செயும் - செய்யும், கேண்மை - சிநேகமானது; ஆகாது - நல்லதாகாது; காய் - காயானது, முற்றின் -(நாள் சென்று) முற்றினால், தின் - தின்னுதற்குரிய, தீம் - மதுரமாகிய, கனி ஆம் - பழமாகும்; இளம்-இளமையாகிய, தளிர் - தளிரானது, நாள் போய் - நாள் சென்று, முற்றின் - முற்றினால், என் - யாது, ஆகி - ஆய், போம் - போகும், எ - று.

(க - து.) காய் முற்றினால் தின்பதற்குரிய பழமாகும்; தளிர் முற்றினால் பயன்படாமற் போகும்; இதுபோல், நல்லவருடைய சிநேகம் நாளுக்குநாள் நன்றாகி வளரும்; தீயவருடைய சிநேகம் எவ்வளவு நாள் செல்லினும் யாதொரு நன்மையுந் தராது.

(வி-ரை.) கேண்மை-எழுவாய், நன்றாகும் - பயனிலை; கேண்மை-எழுவாய், ஆகாது-பயனிலை; காய்-எழுவாய், கனியாம்-பயனிலை; தளிர்-எழுவாய், என்னாகிப்போம் - பயனிலை. (௩௮)

39. கற்றறியார் செய்யுங் கடுநட்புந் தாங்கூடி
யுற்றுழியுந் தீமைநிகழ் வுள்ளதே—பொற்றொடீ
சென்று படர்ந்த செழுங்கொடிமென் பூமலர்ந்த
வன்றே மணமுடைய தாம்.

(இ-ள்.) பொன் - பொன்னாலாகிய, தொடீ-வலையலையணிந்த மாதே! கற்று - வாசித்து, அறியார் - அறியாதவர்கள், செய்யும் - செய்கின்ற, கடு - மிகுதியாகிய, நட்பும் - சிநேகமும், தாம் - (நெடுங் காலம்) தாங்கள், கூடி - சேர்ந்து, உற்ற-இருந்த, உழியும் - இடத்தி லும், தீமை - தீங்கு, நிகழ்வே - விளைதலையே, உள்ளது - உடைய தாகும்; சென்று-போய், படர்ந்த-படர்ந்த, செழும்-செழுமையாகிய, கொடி - கொடியினது, மெல்-மிருதுவாகிய, பூ-பூவானது, மலர்ந்த- விரிந்த, அன்றே - அன்றைக்குமாத்திரமே, மணம் - வாசனையை, உடையது ஆம் - உடையதாகும், எ - று.

(க - து.) பூவானது மலர்ந்த அன்றைக்குமாத்திரமே வாசனை யுடையதாகும்; அதுபோல, மூடருடைய நட்பு தொடக்கத்திலே நன்றாயினும் பின்பு தீங்கு விளையும்.

(வி-ரை.) நட்பு - எழுவாய், உள்ளது-பயனிலை, நிகழ்வு-செயப் படுபொருள்; பூ-எழுவாய், உடையதாம்-பயனிலை, மணம்-செயப்படு பொருள். (நகூ)

40. பொன்னணியும் வேந்தர் புனையாப் பெருங்கல்வி
மன்னு மறிஞரைத்தா மற்றெவ்வார்—மின்னுமணி
பூணும் பிறவுறுப்புப் பொன்னே யதுபுனையாக்
காணுங்கண் ணொக்குமோ காண்.

(இ - ள்.) பொன்னே-இலட்சுமியைப்போன்ற மாதே! பொன்-பொன்னாலாகிய ஆபரணத்தை, அணியும்- அணிகின்ற, வேந்தர்-அரசர், புனையா - (அதனை) அணியாத, பெரு - பெரிய, கல்வி-கல்விப்பொருள், மன்றும் - நிலைபெற்ற, அறிஞரை - விவேகிகளை, ஒவ்வார் - ஒப்பாகார்; மின்னும் - விளங்குகின்ற, அணி - ஆபரணத்தை, பூணும் - அணிந்துகொள்கின்ற, பிற-(கைகால் முதலிய) மற்றைய, உறுப்பு - அவயவங்களானவை, அது - அதனை, புனையா-அணியாத, காணும் - பார்க்கின்ற, கண் - கண்களை, ஒக்குமோ - ஒப்பாகுமோ, எ - று.

(க-து.) ஆபரணத்தை அணிந்துகொள்ளும் கைகால் முதலிய அவயவங்கள் அதனை யணியாத கண்களை ஒப்பாகாததுபோல, ஆபரணமணிந்த அரசர்கள் அதனை யணியாத வித்துவான்களை ஒப்பாகார்கள்.

(வி டை.) வேந்தர் - எழுவாய், ஒவ்வார் - பயனிலை, அறிஞரை-செயப்படுபொருள். உறுப்பு-எழுவாய், ஒக்குமோ - பயனிலை, கண் - செயப்படுபொருள். தாம், மற்று-அசை. காண்-முதனிலையசை.(௪௦)

நன்னெறி மூலமும் உரையும்
முற்றுப்பெற்றது.

